

# கேசவதேவ்

கே.பி. சசிதரன்



இந்திய
இலக்கியச்
சிற்பிகள்

*உள் அட்டையில் காணும் சிற்பக் காட்சியில், பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை, மன்னர் சுத்தோதனருக்கு நிமித்திகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து அந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்திரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.*

*(நாகார்ஜுன மலைச்சிற்பம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு. பட உதவி: நேஷனல் மியூசியம், புதுதில்லி )*

இந்திய இலக்கியச் சிற்பிகள்

# கேசவதேவ்

*ஆங்கில மூலம்*

கே.பி. சசிதரன்

*தமிழாக்கம்*

மு.பழனி இராகுலதாசன்



சாகித்திய அக்காதெமி

KESAVADEV - Tamil Translation by M. Palani Raghuladasan
K.P. Sasidharan's monograph in English.
Sahitya Akademi, New Delhi. 1999. Rs. 25.


முதல் வெளியீடு : 1999
ISBN -81-260-0637-4

சாகித்திய அக்காதெமி

தலைமை அலுவலகம்:
ரவீந்திர பவன், 35, பெரோஸ்ஷா சாலை,
புது தில்லி 110 001.

விற்பனை:
'ஸ்வாதி' மந்திர் சாலை, புது தில்லி 110 001.
109, ஜே.ஸி. சாலை, பெங்களூர் 560 002.
'குணா பில்டிங்' 304-305, அண்ணா சாலை,
தேனாம்பேட்டை, சென்னை 600 018.
ஜீவன் தாரா பில்டிங், 4வது மாடி,
டைமண்ட் ஹார்பர் சாலை, கல்கத்தா 700 053.
172, பம்பாய் மராத்தி கிரந்த சங்கிரகாலய சாலை,
தாதர், பம்பாய் 400 014.

விலை ரூ.25

அச்சிட்டோர்: Mani Offsets, Chennai.

# உள்ளடக்கம்

# 1. படைப்பாளியும் காலமும்

*தகழி, பொன்குன்னம் வர்க்கி, பஷீர், எஸ்.கே. பொற்றக்காட், உரூப், கேசவதேவ் ஆகியோர் மலையாளத்தில் மறுமலர்ச்சி எழுத்தாளர்கள் என்று வழக்கமாகக் குறிப்பிடப் படுகிறார்கள். இவர்களுடைய புனைகதைப் படைப்புக்கள், ஏற்கனவே மலையாளத்தில் பரிச்சயமாகி இருந்த புனைகதைப் படைப்புக்களிலிருந்து குறிப்பிடத்தக்க அளவுக்கு வேறுபட்டு அமைந்திருந்தன. அந்த வேறுபாடு உள்ளடக்கத் திலும் இருந்தது; உருவத்திலும் இருந்தது. இவர்களது புனைகதைப் படைப் புக்களில் காணப்பட்ட சீர்திருத்த முத்திரை, அதற்கு முன்பு மலையாளப் புனைகதை உரைநடைப் படைப்புக்களில் காணப்படாத ஒன்றாகும். இந்தப் படைப்பாளர்கள் ஒரு புதிய சமுதாய விழிப்புணர்ச்சியை உடையவர்களாக இருந்தார்கள்; அவர்களிடம் இருந்த மனிதாபிமானம் அவர்களைத் தீர்க்க தரிசனம் உடையவர்களாக மாற்றியிருந்தது. அவர்களால் சமுதாயத்தில் ஏற்பட்ட பாதிப்பு உண்மையில் வியப்புத் தருவதாகவே அமைந்தது. கேரளாவின், சமுதாய - அரசியல் வரலாற்றில் இவர்கள் "நவயுகச் சிற்பிகள்" என்று அழைக்கப் படுவது மிகையான கருத்து அல்ல.*

*சமுதாயத் தீமைகள், அநீதிகள் ஆகியவற்றுக்கு எதிரான புனிதப் போராட்டத்தைக் கட்டமைத்த இந்தப் படைப்பாளி களில் கேசவதேவ் முன்னணியில் நின்றார்; ஏன், இவரே முதன்மையானவரும் கூட. சமுதாயத் தீமையை எதிர்த்த இந்த இயக்கத்தின் பிதாமகரும் அவரே; செயலாற்றல் மிக்க தலைவரும் அவரே; ஆர்வம் மிகுந்த அதன் பிரதிநிதியும் அவரே; இயக்கிக் கொண்டு செல்லும் இயக்குநரும் அவரே!*

*கேசவதேவின் வாழ்க்கைக் கதை எவருக்கும் ஆர்வத்தைத் தரக்கூடியகதை. அவர் முழுக்க முழுக்கத் தனக்குத் தானாகவே உருவாகியவர். பதின்மூன்று வயதுச் சிறுவனாக இருந்தபோது பள்ளிப் படிப்பை அத்தோடு நிறுத்திக் கொள்ள வேண்டியதாயிற்று! அந்தச் சிறுவனாகிய கேசவதேவ்தான், பின்னாளில், கேரள மாநிலத்தின் 'இலக்கிய அக்காதெமி'யின் தலைவராக உயர்ந்தார். சேக்ஸ்பியர், சார்லஸ் டிக்கன்ஸ்*

ஆகியோரைப் போலவே, கேரள மாநிலத்தின் கேசவதேவ் "ஊர் சுற்றி"யாகத்திரிந்து, பின்னர் படைப்பாளராக ஆகியவர்; கல்விக் கூடத்திலிருந்து வெளியேறிய ஒருவர் பின்னர், அவரது காலத்தில் வழிகாட்டியாக உயர்ந்தார்.

முன்னாளில் 'கொச்சின்' என்று வழங்கப்பட்ட மாநிலத்தில், கேட்டமங்கலம் என்ற மிகவும் சிறிய கிராமத்தில், 1904-ஆம் ஆண்டு ஜூலை மாதம், 20-ஆம் தேதியன்று கேசவதேவ் பிறந்தார். அவருடைய தாயாரின் பெயர் "நல்லேட்டத்து கார்த்தியாயினி அம்மா" என்பதாகும். அந்தக் காலத்தில் வாழ்ந்திருந்த லட்சக்கணக்கான பெண்மணிகளைப் போலவே, அவரும் மிகவும் பணிவுடையவராகவும், எளிமை படைத்தவராகவும் விளங்கினார். அம்மாவுக்கு கல்வி அறிவும் இல்லை! அவளுக்கென்று எவ்விதச் சம்பாத்தியமும் இல்லை. குடும்பத்தின் தலைமைப் பொறுப்பு ஏற்றிருந்த தன் மாமாவைச் சார்ந்து வாழ்ந்தார். அந்தக் காலத்தில், கேரள சமுதாயத்தில் குடும்பத்தின் தந்தை தனது குழந்தைக்களைக் கவனித்துக் கொள்ளவேண்டும் என்று எதிர்பார்க்கப்படவில்லை. ஆனால், கார்த்தியாயினி அம்மாளின் கணவன் கொச்சுவீட்டில் அப்புபிள்ளை என்பவர் வித்தியாசமானவராக இருந்தார். அவருக்குச் சொத்து சுகங்கள் மிகவும் குறைவே. எனினும் அவர் தன் குழந்தைகளை வளர்த்தெடுப்பதில் மிகுந்த அக்கறை காட்டினார்; கல்வியில் கவனம் செலுத்தினார். கேசவன் அவருக்கு ஆறாவது குழந்தை. கேசவன் குழந்தைக்குச் சின்னஞ்சிறிய கதைகளைச் சொல்லிவந்தார் தந்தை. இதுவே குழந்தைக்கு அவர் ஆரம்பித்து வைத்த பாலபாடம் ஆயிற்று.

கேசவதேவின் வாழ்க்கையில் நினைவில் நிற்கக்கூடிய முதல் நிகழ்ச்சி முக்கியமான நிகழ்ச்சி. ஒருமுறை பண்ணையாரின் மகன், கேசவதேவின் தந்தையாரைப் பார்த்துக் கீழ்த்தரமான வார்த்தைகளால் ஆணையிட்டுக் கொண்டிருந்தான். கேசவதேவ், அவனைப் பார்த்து, "பேசாதே, வாயை மூடு" என்று மறுத்துப் பேசுகிறார். அந்த நிகழ்ச்சிதான் கேசவதேவின் வாழ்க்கையில் அவரது நினைவில் நிற்கும் முதல் நிகழ்ச்சி. இந்த மாதிரியான ஏச்சும் ஆணைமொழிகளும் கேசவதேவின் அப்பாவுக்குப் பழக்கப்பட்டுப் போனவை. ஆனால், அருகில் நிற்கும் ஆறுவயது சிறுவனாகிய கேசவனுக்கு இதனைச் சகித்துக் கொள்ள முடியவில்லை. அந்தச் சிறிய வயதில் – அதாவது பள்ளிக்குச் சென்று 'ஒண்ணாம் வகுப்பு' படிக்கும் அந்தச் சிறிய வயதில் –

அடக்கு முறைமிக்க நிலமானியக் கொடுங்கோன்மையை எதிர்த்து அடக்கிவைத்த அந்த நிகழ்ச்சி, கேசவனைப் பொறுத்த வரையில் ஒரு வெற்றிகரமான நிகழ்ச்சி என்றே சொல்ல வேண்டும்.

சிறுவன் கேசவன் பள்ளிக்கூடத்திற்கு ஆறு ஆண்டுகள் அல்லது அதற்கு மேல் சிறிது காலம்தான் போயிருப்பான். அப்போதெல்லாம் கந்தல் ஆடைகளே அணிந்திருந்தான். அவனது வகுப்புப் பையன்கள் அதற்காக அவனைக் கேலி பண்ணிச் சிரிப்பார்கள். கேசவன் சும்மா இருந்துவிட மாட்டான்; கோபம் கொண்டு அவர்களுக்குப் பதிலுக்குப் பதில் கொடுத்துவிடுவான். தேவைப்படும் நேரங்களில் அவர்களைக் கைநீட்டி அடித்துவிடுவதும் உண்டு. இந்தப் பள்ளி நாட்கள் கேசவனுக்குத் தன்னைத்தானே உருவாக்கிக் கொள்ளும் நாட்களாக அமைந்தன.

இளமைப்பருவக் கேசவனிடம், விதம் விதமான கதைகள் ஏராளம் இருந்தன. இந்தக் கதைகளைச் சக மாணவர்களுக்குச் சொல்லுவதன் மூலம் கேசவன் தனக்கென்று ஒருவழியை உருவாக்கிக் கொண்டான்; தனக்கென்று ஒரு மாணவர் கூட்டத்தையும் ஏற்படுத்திக் கொண்டான்; பள்ளிக் கூடத்தில் தேர்ந்தெடுக்கப்படாத மாணவர் தலைவனாகவே அவன் ஆகியிருந்தான்.

ஒருதடவை, வீட்டில் எல்லோரும் சபரிமலை யாத்தி ரைக்குப் புறப்பட்டார்கள். ஆனால் கேசவனை அழைத்துச் செல்ல மறுத்தார்கள். அப்போது அவனுக்குப் பத்து வயதுதான் இருக்கும். யாத்திரைக்கு அழைத்துப்போக மறுத்ததை எதிர்த்து, கேசவன் வீட்டிற்குள் முப்பது மணிநேர உண்ணாவிரத வேலை நிறுத்தம் நடத்திக் காட்டிவிட்டான். அந்த உண்ணாவிரத முப்பதாவது மணிக்குப் பிறகு அவனுக்கு வெற்றி கிட்டியது. அப்பாவும் மாமாவும் ஏற்பாடு செய்திருந்த அந்தப் புனித யாத்திரையில் அவனும் கலந்து கொண்டான். அந்தக் காலத்தில், சபரிமலை யாத்திரை என்பது பெரிய, துணிகரமான செயலாக இருந்தது. சபரிமலைக்குப் போகவேண்டும் என்றால் பல மைல்கள் கடந்து செல்ல வேண்டும். பிளிறும் யானைகளும், உறுமும் புலிகளும் நிறைந்த அடர்ந்த காடுகளைக் கடந்து செல்லவேண்டும். சபரிமலை யாத்திரைக்குப் போய்த் திரும்பிய பிறகு, கேசவன் தனது யாத்திரை அனுபவங்களைச் சகமாணவர் களுக்குச் சொல்லிச் சொல்லி அனைவரின் மனத்தையும்

கொள்ளை கொண்டுவிட்டான். மதிய உணவு வேளையின் போது, யாத்திரைக் கதை சொன்னதற்காகக் கேசவனுக்குச் சிற்றுண்டி வகைகள் அன்பளிப்பாகக் கிடைத்தன. இதுதான் 'கேசவதேவ்' என்ற 'படைப்பாளருக்கு'க் கிடைத்த முதல்முதல் 'உரிமைத் தொகை'யாக இருக்கும்!

பதின்மூன்றாம் வயதில் கேசவதேவின் பள்ளிப்படிப்பு நின்றுவிட்டது. அதற்குக் காரணமான நிகழ்ச்சி மிகவும் சுவாரஸ்யமானது; எடுத்துச் சொல்லப்படவேண்டியது. ஒருநாள் கேசவனும் அவனுடைய நண்பர்களும், ஒரு சிட்டுக் குருவியைப் பிடித்து வகுப்பறைக்குள் கொண்டு வந்து விட்டார்கள். வகுப்பறையில் ஆசிரியர் இல்லாத நேரத்தில், அந்தச் சிட்டுக்குருவியை வைத்து வேடிக்கை பண்ணினார்கள். அந்த நேரத்தில் வகுப்பு ஆசிரியர் அங்கே வந்துவிட்டார். என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதை உடனே புரிந்து கொண்ட ஆசிரியர், பையன்களை ஒவ்வொருவராய்ப் பிடித்து உதைக்கத் தொடங்கிவிட்டார். கேசவன் முறை வந்தபோது, ஆசிரியர் கொடுத்த 'பூசை'யை அவன் மிகவும் அடக்க ஒடுக்கமாக எவ்வித மறுதலிப்பும் இன்றி வாங்கிக் கொண்டான். கேசவனுக்கு அடுத்து உதை வாங்க வேண்டியவன் உள்ளூர் 'முன்சீப்'பின் மகன். அதுவரைக்கும் கோபாவேசமாய் ஒழுங்கு கட்டுப்பாட்டை உபதேசிப்பவராய் நின்று கொண்டிருந்த ஆசிரியர் 'சட்'டென்று அடங்கிவிட்டார். முன்சீப் மகனுக்கு வெறும் வார்த்தைகளால் மிகவும் பரிவோடு அறிவுரை சொல்லிவிட்டு, அடுத்து நிற்கும் பையன்களை உதைக்க ஆரம்பித்து விட்டார். இதைக் கவனித்துக் கொண்டிருந்த பையன் கேசவனுக்குப் பொறுக்க முடியவில்லை. அந்த ஆசிரியரின் செயல் முறையற்றது; ஒருதலைப்பட்சமானது என்று வெளிப்படையாகவே கேசவன் சொல்லிவிட்டான். அந்த ஆசிரியர் அதையெல்லாம் காதில் போட்டுக் கொள்ளவில்லை. இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த கேசவன் உடனே தன் வகுப்புத் தோழர்களைப் பார்த்துப் பின்வருமாறு கத்தினான்: "நீங்கள் எல்லாம் நாய்களைப் போல நடத்தப்படுகிறீர்களே! இந்தப் பள்ளிக் கூடத்திலே நீங்கள் படிக்க வேண்டிய தில்லை"-இப்படிச் சொல்லிவிட்டு கேசவன் வகுப்பறையை விட்டு வெளியேறினான்.

அதன்பிறகு கேசவன் பல்வேறு நடவடிக்கைகளில் ஈடுபட்டவாறு இங்கும் அங்குமாய்த் திரிந்தான். பள்ளிக் கூடத்திற்குப் போய்க் கொண்டிருந்த பையன்களைப் பார்த்து,

"பள்ளிக் கூடத்திற்குப் போகாதீர்கள்" என்று தடுக்கவும் செய்தான். அநீதிக்கு எதிரான இந்தப் போராட்டத்தில் கேசவன் வெற்றி பெறவில்லை. இதன் விளைவாய் அவன் மிகவும் சோர்வடைந்துவிட்டான்; யாருடனும் சேரப் பிடிக்கவில்லை; கேளிக்கை, விளையாட்டு என்பதிலும் மனம் செல்லவில்லை; அவனது மனம் அலைபாய்ந்து திரிந்தது.

பிறகு கேசவன் புத்தகங்களையும், பத்திரிகைகளையும் தேடிப் பல இடங்களுக்கும் சென்றான். அதிலும் கவிதை களுக்காக மிகவும் கஷ்டப்பட்டான். திருவிழாக் காலங்களின் போது நிகழ்ந்த "அட்ஷர ஸ்லோக மேளா"க்களில்* கேசவன் பங்கெடுத்துக் கொண்டான். கேசவன் பிறந்த குடும்பம் இலக்கியப் பின்னணியை உடைய குடும்பம் அல்ல; அவனுடைய தந்தை சாதாரண விவசாயத் தொழிலாளி; அம்மா வழி - அப்பாவழி உறவினர்கள் வெறும் போலீசுக்காரர்களாக இருந்தனர். இந்தச் சூழ்நிலையைப் பார்க்கும்போது, சிறுவன் கேசவன் அட்ஷர ஸ்லோக மேளா போன்ற இலக்கிய விளையாட்டுக்களில் பங்கேற்றான் என்பது நிச்சயமாக ஓர் அசாதாரணமான விஷயமே ஆகும்.

அடுத்துச் சில மாதங்களில் கேசவன் கேரள மாநிலத்தில் இங்கும் அங்குமாகப் பல இடங்களில் வேலை தேடி அலைந்தான். தான் ஒரு படகோட்டியாக ஆகவேண்டும் என்று அவன் விரும்பினான்; ஆனால் அந்த ஆசை நிறைவேறவில்லை. ஒரு கயிற்றுத் தொழிற்சாலைக்கு வேலைக்குப் போக வேண்டும் என்றும் விரும்பினான்; அதுவும் நிறைவேறவில்லை. இந்த நிலையில் வீட்டில் சிறிது காலம் சும்மா இருந்தான்; கொஞ்ச காலம் இங்கும் அங்குமாகச் சுற்றித் திரிந்தான். இப்படியாக ஓராண்டு கழிந்த பிறகு, கேசவனுக்கு ஒரு சிறிய வேலை கிடைத்தது. சொந்த நகர்ப்பகுதியில், வட்டிக் கடைக்காரனிடம் கணக்கு எழுதுபவனாகக் கேசவன் சேர்ந்தான். அந்த வேலையில் கிடைத்த சம்பளம் மிகவும் குறைவாக இருந்தது. ஒரு நாளைக்குப்

---

*அட்ஷர ஸ்லோக மேளா: மலையாளிகளிடையே பிரசித்திபெற்ற ஒரு வகை இலக்கியக் கேளிக்கை விளையாட்டு இது. இந்த விளையாட்டில், ஒருவர் நாலடிச் செய்யுள் ஒன்றை இசைத்துப் பாடி, அதில் ஓர் எழுத்தைக் குறிப்பிட்டுச் சொல்லுவார்; அந்த எழுத்தை வைத்து அடுத்தவர் ஒரு நாலடிச் செய்யுள் பாடவேண்டும்; அவரைத் தொடர்ந்து அடுத்தவர் அதேமாதிரி பாடுவார்; இப்படித் தொடர்ந்து பாடிக் கொண்டே போகவேண்டும். பாட முடியாதவர் விளையாட்டிலிருந்து நீக்கப்படுவர்.

போதுமான சாப்பாடு வேண்டுமானால் இந்தச் சம்பளம் போதாது என்பதையும், தற்போதைய சம்பளத்தோடு இன்னும் கூடுதலாய்ச் சம்பாதிப்பதற்கு வேறு ஏதாவது வழிவகை செய்து கொள்ளவேண்டும் என்றும் கேசவன் உணர்ந்து கொண்டான். எனவே குழந்தைகளுக்கு 'டியூசன்' சொல்லிக் கொடுக்க ஆரம்பித்தான்.

வட்டிக் கடைக்காரரிடம் வேலை பார்த்த கேசவன் பணம் வசூலிக்கும் பொறுப்பையும் கவனித்தான். இந்த வேலை, மக்களையும் புத்தகங்களையும் அவனுடன் தொடர்புபடுத்தும் வேலையாக அமைந்தது. படிப்பதற்குப் புத்தகங்கள், பத்திரிகைகள் கொடுக்கக்கூடிய மக்களைக் கேசவன் சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்தது. மலையாள மொழியின் புனைகதைப் படைப்பில், புகழ்பெற்ற சி.வி.இராமன் பிள்ளையின் நாவல்களைப் படித்து இதில் மூழ்கிப் போனான் கேசவன். பின்னாளில் 'மலையாள நாவல்கள்' என்று அழைக்கப்பட்ட பல கதைப் புத்தகங்களைக் கேசவன் மிகுந்த சிரத்தையோடு படித்தான். தன் முதலாளிக்குக் கடன் கொடுக்க வேண்டிய வர்களிடம் கடன் தொகையை வசூலிக்கும் ஆர்வத்தைவிட, கேசவனுக்கு புத்தகங்கள் சேகரிப்பதில்தான் ஆர்வம் அதிகமாக இருந்தது. இதை உணர்ந்த முதலாளி கேசவனுக்குப் பலமுறை கடுமையாக எச்சரிக்கை விடுத்தார். ஆனாலும் கேசவன், புத்தகம் தேடுவதையும், தேடிப்படிப்பதையும் தொடர்ந்து செய்து கொண்டுதான் இருந்தான்.

ஒருநாள், கேசவன் எதிர்பாராத விதமாக, சுவாமி விவேதானந்தரின், "என் குருநாதர்" என்னும் நூலைப் பார்க்க நேர்ந்தது. அவனுக்குக் கிடைத்த அந்தப் புத்தகம் ஆங்கிலத்தில் இருந்தது. ஒரு சிறிய அகராதியைத் துணைக்கு வைத்துக் கொண்டு கேசவன் அந்த நூலைத் தானாகவே படித்து முடித்துவிட்டான்; சுவாமி விவேகானந்தரின் சொற்பொழிவாக அமைந்துள்ள அந்த ஆங்கில நூலை மூன்று நாட்களில், தன் தாய் மொழியான மலையாளத்தில் மொழியாக்கமும் செய்துவிட்டான்!

அடுத்து வந்த சில வாரங்களில் கேசவன் 'சுயராஜ்யா' 'யங்இந்தியா' ஆகிய பத்திரிகைகளின் தொகுதிகளைத் தன் சொந்தமாக வாங்கினான். வாங்கி, இடையறாத உற்சாகத்தோடு படித்து முடித்தான். புத்தகங்களின் மீது அவனுக்கு இருந்த ஆழ்ந்த ஈடுபாட்டின் காரணமாக, வட்டிக் கடையில் பணம்

வசூலிக்கும் வேலை பாதிக்கப்பட்டது. அதன் விளைவாக, வேலையிலிருந்து கேசவன் விலக்கப்படும் சூழ்நிலை உருவாகியது. அதன் பிறகு, கொஞ்சகாலம்வரை, கேசவன் தான் பார்த்துவந்து 'டியூஷன்' வேலையை முழு நேர வேலையாய்ச் செய்ய வேண்டியதாயிற்று. இலக்கிய ஆர்வம் மிகுந்த ஓர் அமைப்புடன் அவனுக்குத் தொடர்பும் கிடைத்தது. இந்தக் காலக் கட்டத்தில், இந்த அமைப்புடன் கிடைத்த தொடர்பால், சார்லஸ் டிக்கன்ஸ், ஆலிவர் கோல்டுஸ்மித், ஆகியோரின் படைப்புக்கள் பற்றி அறிந்து கொள்ளும் வாய்ப்பும் கேசவனுக்கு உண்டாயிற்று.

ஓர் அமைதியில்லாத வாழ்க்கைச் சூழ்நிலை; ஊர் சுற்றியலையவேண்டிய தன்மை ஆகியவற்றால் கேசவன் அலைக் கழிக்கப்பட்டிருந்தான். இந்த நிலையிலும், கேசவனுக்கு வைக்கம் சத்தியாக்கிரகம்* நடைபெற்ற இடத்திற்குப் போய்ச் சம்பவத்தை நேரில் பார்க்கும் வாய்ப்புக் கிடைத்தது. கதர்த்துணி விற்பனையாளனாகக் கேசவன் ஆல்வாய் போயிருந்த சமயம், அங்கே சைவத் திருவிழாவையொட்டி நடைபெற்ற பொதுக் கூட்டம் ஒன்றில் ரிஷிராம் பேசிய பேச்சைக் கேட்டான். அதன் காரணமாக அவனது கவனம் ஆரிய சமாஜத்தின் மீது படிந்திருந்தது. ஒருவன் சூத்திரனாகப் பிறந்திருந்தாலும், அவன் தனது செயல்பாடுகள் மூலமாகப் பிராமணன் ஆகமுடியும் என்ற ஆரிய சமாஜக் கொள்கை கேசவனை மிகவும் ஈர்த்துவிட்டது. ஆரிய சமாஜத்தின் தலைவரான சுவாமி தயானந்த சரஸ்வதி எழுதிய 'சத்யார்த்த பிரகாசம்' என்னும் நூலைப் படித்தான் கேசவன். படித்துவிட்டு, சமாஜத்தின் தலைவரை நேரில் பார்க்கவேண்டும் என்ற ஆவலோடு திருவனந்தபுரத்திற்குச் சிரமம் மிகுந்த பயணத்தை மேற்கொண்டான். கேசவனின் சொந்த

---

* சுவாமி விவேகானந்தரால், மாநிலத்தில் நிலவிய சாதிவேறுபாட்டு அடக்குமுறை காரணமாக "பைத்தியக் காரர்களின் வீடு" என்று சொல்லப்பட்ட கேரள மாநிலத்தில், சாதிய அடக்குமுறைக்கு எதிராக எழுந்த எழுச்சியே வைக்கம் சத்தியாக்கிரகம் என்பது. 'பைத்தியக்காரவீடு' என்ற பெயரில் ஓர் அரிய படைப்பை உலகத்திற்குப் பின்னாளில் தர இருக்கிற கேசவனின் மனத்தை, தாழ்த்தப்பட்ட இனத்து மக்களின்கோரிக்கைகளில் இருந்த நியாயம் தொட்டுப் பாதித்துவிட்டது. அந்த நாட்களிலேயே. தாழ்த்தப்பட்ட மக்கள் பொதுவீதிகளில் நடமாடக் கூடாது என்றும், வழிபடும் இடங்களிலும், பள்ளிக் கூடங்களிலும் நுழையக்கூடாது என்றும் தடுக்கப் பட்டிருந்தார்கள். 1942-ஆண்டு நடைபெற்ற இந்த வைக்கம் சத்தியாக்கிரகம் கேரளமாநில வரலாற்றின் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும்.

ஊரான கேட்டமங்கலத்திலிருந்து திருவனந்தபுரம், இப்போ திருப்பதைப் போலவே, அப்போதும் 250 கிலோ மீட்டருக்கும் குறைவான தொலைவுதான். ஆனால் அன்றைய நாட்களில் திருவனந்தபுரத்தைச் சென்றடைவது என்றால் அது ஒரு பகீரதப் பிரயத்தனம் மாதிரியே இருந்தது. திருவனந்தபுரம் போய்ச் சேர்ந்த கேசவன் ரிஷிராம் அவர்களை நேரில் சந்தித்தான்; தான் ஆரிய சமாஜத்தில் சேர விரும்புவதாக அறிவித்தான். கேசவனின் சொந்த நகரத்திற்கு மேலும் வடக்கே உள்ள பாலக்காட்டில் சமாஜத்தின் தலைமையகம் இருக்கிறது; அங்கே சென்று முறைப்படி தெரிவித்தால் சேர்த்துக் கொள்வார்கள் என்று வழிகாட்டினார்கள். கேசவன் உடனே பாலக்காட்டிற்குப் புறப்பட்டான்; அங்கே சென்று சமாஜத்தில் தன்னை ஐக்கியப்படுத்திக் கொண்டுவிட்டான். அதன்பிறகு கேசவன், தனக்கு ஒரு புதிய பெயரைத் தானே உருவாக்கி அமைத்துக் கொண்டான். அதுதான் 'கேசவதேவ்' என்பது. அதற்குரிய சிறப்பான மூலகாரணம் இதுதான் என்று அவரே விளக்குகிறார்: "நான் தாசனாக இருக்கவேண்டும்; அல்லது தேவனாக இருக்கவேண்டும்; இரண்டுமாக இருக்க முடியாது; நான் யாரோ ஒருவருக்குத் தாசனாக இருக்க விரும்பியதில்லை; தேவனாக இருக்க விரும்பி, 'கேசவதேவ்' என்று பெயரை அமைத்துக் கொண்டேன்."

கேசவதேவ் இளைஞனாக இருந்த ஆரம்ப காலத்திலிருந்தே, சாதி, இன உணர்வுகளுக்கு எதிர்ப்புக் காட்டுவதில் மிகவும் உன்னிப்பாக இருந்தார். எங்கேயெல்லாம் மனிதனுக்கு அவமானம் இழைக்கப்படுகிறதோ, அங்கேயெல்லாம் தனது எதிர்ப்பைக் காட்டிவந்தார். இப்போது இளமைத் துடிப்பு மிகுந்த கிளர்ச்சிக்காரராகவும் ஆகியிருந்த கேசவதேவ், தீண்டாமைக்கு எதிரான போராட்டத்தில், மிகக் கூடுதலான, துடிப்பு மிகுந்த தனது பங்களிப்பைச் செய்யலானார்.

சமாஜத்தின் தொண்டராகிய கேசவதேவ், புத்தக நிலையப் பிரிவின் பொறுப்பாளராக இருந்தார். பாலக்காட்டு நகரத்திற்குள் தாங்கள் வசிக்கிற வீதிகளில் தாழ்த்தப்பட்ட மக்கள் பிரவேசிக்கக் கூடாது என்று தடுத்து வைத்திருந்த பாலக் காட்டுப் பிராமணப் பழைமைவாதிகளை எதிர்த்து, கேசவதேவ், குத்துவாள் ஆயுதம் தாங்கி, சமாஜத்துத் தொண்டர்களுக்குத் தலைமை ஏற்று, ஓர் எதிர்ப்பு ஆர்ப்பாட்டத்தை நடத்தினார். அப்போது பிராமணிய ஆதரவாளர்களான ஆயிரம் குண்டர்கள்

ஆயுதம் தாங்கி வந்து, சமாஜத் தொண்டர்கள் மீது பாய்ந்து கடுமையாகத் தாக்கினார். ஆர்ப்பாட்டத்தை முன்நின்று நடத்திய இளைஞன் கேசவதேவையும் அடித்துத் தாக்கினர். இன்னும் கொஞ்ச காலத்தில் ஒரு சகாப்தத்தை உருவாக்கி செயல்பாடுகள் பல புரியப்போகிற அந்த இளைஞனை அவர்கள் நொறுங்கிக் கூழாகிப் போகும் அளவுக்கு அடித்துத் தாக்கினார்கள்.

இந்தத் தாக்குதல் நிகழ்ச்சி, அநீதிக்கு எதிராகப் போராடும் புனிதப் போராட்டத்திலிருந்து அந்த இளைஞனைத் தடுத்து நிறுத்திவிடவில்லை. அந்த இளைஞன் மேலும் சிரமங்களோடு, ஓய்வின்றித் தனது பணியைத் தொடரவே செய்தான்; சமாஜத்தின் தொண்டன் என்ற முறையில் வியர்வை சிந்தி உழைத்தான்; பொதுமக்களுக்கு அறிவுறுத்திப் பயிற்றுவிக்கும் பணியில் தொடர்ந்து பணியாற்றினான். திடீரென்று ஒருநாள் சில சந்தேகங்கள் அந்த இளைஞனைப் பற்றிக்கொண்டன. ஆரிய சமாஜத்தைச் சார்ந்து நின்று தோத்திரப் பாடல்கள் இசைப்பது, மதச் சடங்குகளை நிறைவேற்றுவது – ஆகிய இவைகளுக்கு அப்பால் இன்னும் மிக முக்கியமான சில விஷயங்களும் இருக்கின்றனவே! உதாரணத்திற்குப் பொருளாதாரக் கோட்பாடுகள்! அரசியல் நடைமுறை பற்றிய கோட்பாடுகள்! – இவ்வாறு சிந்தித்த அந்த இளைஞனுக்கு தோத்திரப் பாடல்கள் இசைத்து, மதச் சடங்குகளைச் செய்து சமுதாயத்தை மாற்றிவிடலாம் என்ற நம்பிக்கை, ஆர்வம் தளர்ந்து போய்விட்டது!

அந்த இளைஞன் மறுபடியும் திருவனந்தபுரம் போனான்; அங்கே இரண்டு பெரிய சுயசிந்தனையாளர்களுடன் மிகமுக்கியமான சந்திப்பை நிகழ்த்தும் வாய்ப்பைப் பெற்றான். புதிய விமர்சனத்தை அறிமுகம் செய்து நடைமுறைக்குக் கொண்டுவந்த ஏ. பாலகிருஷ்ணப்பிள்ள; கவிஞரும் போராட்ட வீரருமான போதீஸ்வரன் ஆகிய இருவருமே அவர்கள்!

'திருவனந்தபுரத்தில் தங்கியிருந்த போது, இளைஞர் ஒருவரோடு கேசவதேவுக்குத் தொடர்பு கிடைத்தது. அந்த இளைஞர் டால்ஸ்டாய் எழுதிய சில நாவல்களை கேசவதேவுக்கு வழங்கினார். திருவனந்தபுரத்திலிருந்து புறப்படும்போது கேசவதேவ் ஜாக்லண்டன் எழுதிய "எனக்கு வாழ்வதற்கு உரிமை உண்டு" என்னும் புத்தகத்தை வாங்கியிருந்தார். படகில் திரும்பி வரும் வழியில், அந்த நூலை முழுவதும் படித்து முடித்தார்.

நூலில், அந்த லண்டன் புரட்சியாளன் தன்னைப் பற்றிக் கூறிக் கொள்வது போல, அதே உணர்வில், அவனை ஒரு லண்டன் புரட்சியாளன் என்று இனம் கண்டு கொண்டார். தான் இதுவரை தேடிவந்த புரட்சியாளன் அவன் உருவத்தில் இருப்பதாகவே உணர்ந்தார். அதற்கு மேலும் அதிசய நிகழ்ச்சியாக, கேசவதேவ் பின்வருமாறு அவனைப் போல கீதம் பாடத் தொடங்கினார்,

"மகிழ்ச்சி உடையவனாய் நானிருப்பேன்;
வலிமை உடையவனாய் நானிருப்பேன்"

வேலையில்லாத இளைஞனாக வீட்டுக்குத் திரும்பி வந்த கேசவதேவ், வீட்டில் தன் மாமன்மார்களோடு பலதடவை எதிர்ப்புக்களைச் சந்திக்க வேண்டியதாயிற்று. ஆனாலும் அம்மாவும் அத்தைமார்களும் கேசவதேவ் மீது அன்பு காட்டினார்கள். இவர்கள் காட்டிய அன்புப் பின்னணியில், புத்தகங்கள் சேகரித்தல், கருத்துக்கள் சேகரித்தல், மானுடத்தின் சோகமயமான கதைகளில் ஆழ்ந்து போதல் என்ற தனது வாழ்க்கை முறையைக் கேசவதேவ் தொடர்ந்து வந்தார்.

'சகோதரன்' அய்யப்பன், எம்.சி. ஜோசப் போன்ற பகுத்தறிவு இயக்கச் சிந்தனைக் குழுவினரது செயல்பாடுகளாலும் கேசவதேவ் பெரிதும் ஈர்க்கப்பட்டார். இந்து சமூகம் முழுவதும் சாதிய அநீதிகளால் நிரம்பிக் கிடந்த அன்றையக் காலக் கட்டத்தில் அய்யப்பன், இந்த அநீதிக்கு மாற்றுத் தீர்வு புத்த மதத்தைத் தழுவுதல் என்று கருதினார். அய்யப்பனின் இந்தக் கருத்தை கேசவதேவ் ஏற்றுக் கொள்ளவில்லை. கேசவதேவ் தனது கருத்தைக் கட்டுரையாக எழுதி அய்யப்பன் நடத்தி வந்த 'சகோதரன்' வார இதழுக்கு அனுப்பிவைத்தார். அவரும் அந்தக் கட்டுரையை உடனே பிரசுரித்தார். இதுதான் கேசவதேவ் எழுதி வெளியான முதலாவது படைப்பு. இது நடந்தது 1926-ஆம் ஆண்டில்.

'சகோதரன் இதழின் ஆசிரியர் 'மக்களின் நன்மைக்காக' இது போன்ற பல கட்டுரைகளை எழுதுமாறு தூண்டுதல் செய்து கேசவதேவுக்குக் கடிதம் எழுதினார். இப்படித்தான் கேசவதேவ் என்னும் எழுத்தாளர் உருவாகத் தொடங்கினார்.

பிரபலமான பத்திரிகை ஆசிரியரும், புரட்சிக்காரரு மான அவர் எழுதிய கடிதமானது, இளைஞரான கேசவதேவுக்கு ஒரு சரியான உந்து சக்தியைக் கொடுத்தது. இப்படி ஓர் 'உந்து

சக்தி' தான் இளைஞன் கேசவதேவுக்குத் தேவைப்பட்டது. இந்தச் சூழ்நிலையில், கேசவதேவ், பெர்னார்ட்ஷா எழுதிய 'மனிதனும் அதிமனிதனும்,' பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் எழுதிய 'விடுதலைக்கு வழி' போன்ற நூல்களைப் படித்துவிட்டு, அந்தப் படிப்புக் கனவுகளிலேயே சஞ்சரிக்கலானார். தன்னைச் சுற்றியுள்ள பல லட்சக் கணக்கான மக்களின் வாழ்க்கையில் தற்போது நிலவும் சூழ்நிலை, இனிவரப்போகும் எதிர்காலம், அன்றாட வாழ்க்கையில் காணப்படும் வாழ்க்கைத் துன்பங்கள் ஆகியவை பற்றிய பல அடிப்படையான சந்தேகங்கள், கேள்விகள் கேசவதேவுக்கு எழுந்தன; அவை அவரைச் சித்ரவதையே செய்துவிட்டன.

இப்படிப்பட்ட சூழ்நிலைபற்றிக் கேசவதேவ் தனக்குத்தானே உரத்து விவாதித்துக் கொள்வது போன்று உணர்ந்தார். துண்டு துண்டுக் காகிதங்களை எடுத்துக் கொண்டு ஒரு பென்சிலையும் வைத்துக் கொண்டு அவர் ஒரு கதை எழுதினார். கண்ணீர்விட்டபடி ஒருவருக்கொருவர் ஆறுதல் சொல்லும் இரண்டு பெண்களின் கதை அது.

இதுதான் அந்தக் கதை. லீலா கலகலப்பான மகிழ்ச்சி நிறைந்த பெண். இப்போது திடீரென்று கணவனால் கைவிடப்பட்டதால் அவள் கண்ணீர் விட்டுக் கொண்டு இருக்கிறாள். நளினி பல ஆண்டுகளுக்கு முன்பே விதவை ஆகிவிட்ட பெண். லீலாவுக்கு ஆறுதல் தர முயற்சிக்கிறாள் நளினி. மானுட வாழ்க்கையின் சங்கடங்கள் மிகவும் துக்ககர மானவையாகவே இருக்கின்றன; அவற்றுக்கு வேறு போக்கிடம் எதுவும் இல்லை போலும்!

கதையின் முதல் நகல் கேசவதேவுக்கே வியப்பைத் தந்துவிட்டது. கதைக்குள் ஒரு புதுமைத்தன்மை இருப்பதாக உணர்ந்தார். மிகவும் சிரத்தை எடுத்து, தனது வேதனைகளை யெல்லாம் அதில் வெளியிட்டு, கச்சிதமான உருவம் கொடுத்து திருத்தப்பட்ட நகல் ஒன்றும் தயார்செய்துவிட்டார்; இவ்வளவும் இரண்டே நாளில்! அடுத்தநாள், அந்தக் கதையை, திருவனந்தபுரத்திலிருந்து வெளியாகிக் கொண்டிருந்த, பெண்களுக்கான, 'மகிழமந்திரம்' என்னும் பத்திரிகைக்கு அனுப்பிவைத்தார். அந்தப் பத்திரிகை கதையைப் பிரசுரித்தது மட்டுமல்ல, உடனே கடிதம் ஒன்றும் அனுப்பிவைத்தது. கடிதத்தில் கேசவதேவை மிகவும் பாராட்டியுரைத்து, தங்கள்

பத்திரிகைக்கு தொடர்ந்து எழுதுமாறும் வற்புறுத்திக் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

இந்தப்படைப்பின் மூலம் கேசவதேவுக்குக் கிடைத்த மானசீகமான உயர்வும் பாராட்டும் மிகவும் அலாதியானவை. கேசவதேவ் இப்போது படிப்பதிலும் எழுதிவதிலும் மிகத் தீவிரமாக ஈடுபட்டார். இந்த அறிவுத் துறைப் பணியில், இரவெல்லாம் எண்ணெய் விளக்கு எரிய எரியத் தன்னை மூழ்கடித்துக் கொண்டார். எண்ணெய் விளக்கொளியில் அவர், டால்ஸ்டாய், ரவீந்திர நாத் தாகூர், ஆகியோரின் படைப்புக்களை அதிகம் படிக்கலானார்.

உண்மையாகவே கேசவதேவ் ஏழைதான். ஒரு நாள் அவருக்கு விளையாட்டுத் தனமாய் ஒரு யோசனை தோன்றியது. பிரெஞ்சு எழுத்தாளர் அலெக்சாண்டர் டூமாஸ் படைத்த மாண்டே கிறிஸ்தோ மாதிரியில் கேசவதேவ் நினைத்து, தற்போதைய தனது மோசமான வாழ்க்கையில் இருந்து விலகிக் கற்பனை உலகில் பறக்க ஆரம்பித்துவிட்டார். மிகப் பெரிய வீட்டு மனை நிலம் வாங்குவதாய்க் கனவு விரிந்தது; அந்த இடத்தில் எண்ணற்ற வீடுகள் கட்டியாயிற்று; அங்கே வந்து குடியேறுமாறு அனைத்துச் சாதி, பிரிவு ஏழை மக்களையும் அழைக்கிறார்; அங்கே ஒரு அறிவிப்பலகை வாசலில் இருக்குமாம்; அதில் பின்வருமாறு வாசகங்கள்: "போலீசுக் காரர்களுக்கும் இராணுவத்தினருக்கும் அனுமதி இல்லை."இந்த மாதிரியான கற்பனா பூர்வமான நாடு கேசவதேவின் கற்பனையில் உதித்த உடனே அவர் அதை எழுதியும் முடித்தார்; 'சுதேசாபிமானி' மாதப் பத்திரிகைக்கு அனுப்பியும் வைத்தார். பத்திரிகையின் ஆசிரியர் ஏ.கே.பிள்ளை கதையை "மிக்க மகிழ்ச்சியோடு " பிரசுரமும் செய்தார். ஆனாலும் அவர், இளைஞரான கேசவதேவிடம் சிந்தனையில் அராஜகப் போக்கு இருக்கக்கூடாது என்று எச்சரிக்கத் தயங்கவில்லை.

மிக விரைவிலேயே, கேசவதேவ், விக்டர் ஹ்யூகோ, காரல் மார்க்ஸ், மக்சிம்கார்க்கி, நட்ஹாம்சன் ஆகியோரைப் படித்து அவர்களைக் கண்டுணர்ந்தார். அதனால் அவருக்குள் மாறுதல்கள் விளைந்தன. காரல் மார்க்ஸ் எடுத்துக் காட்டிய புதிய உலகம் என்னும் பார்வை, கேசவதேவின் மனத்தில் எழுந்த வெற்றுக் கற்பனையைச் சுட்டுப் பொசுக்கிவிட்டது. "இழப்பதற்கு எதுவுமில்லை, விலங்குகளைத் தவிர' என்ற காரல் மார்க்ஸின்

முழக்கத்தைக் கொள்கையாகக் கொண்டவர்களுக்காகத் தனது உடைமைகள் அனைத்தையும் ஓர் உற்ற துணையாக ஆக்குவது என்று கேசவதேவ் முடிவு செய்தார்.

தனக்குத் தானே கடமைகளை வரையறுத்துத் தானாவே ஒரு கடமையாளனாக உருவாகி வந்த இளைஞன் கேசவதேவ், சிறிது காலம் ஒரு பத்திரிகையின் அமைப்பாளராகப் பணி யேற்றார். அது 'சுதேசாபிமாணி' யால் நிறுவப்பட்ட பத்திரிகை ஆகும். அந்தப் பணி, இங்கும் அங்குமாய்ப் பல இடங்களுக்குப் போகும் வாய்ப்பைக் கேசவதேவுக்கு அளித்தது. பட்டாம்பி, திருச்சூர், கோழிக்கோடு போன்ற இடங்களுக்கு அவர் போக நேர்ந்தது. அந்த இடங்களில், கேசவதேவ், அவரது மனத்துக்கு ஒத்த, இசைந்த சிந்தனையாளர் சிலரைச் சந்தித்தார். அவர்களிடமிருந்து கிடைத்த ஆதரவு போதுமானதாக இல்லை. மேலும், அவர் அமைப்பாளராகப் பணியாற்றிய அந்தப் பத்திரிகையைக் கொஞ்ச காலத்திற்கு நிறுத்தி வைக்க வேண்டியதாயிற்று.

இந்த அனுபங்கள், வேறு எங்கேயாவது ஒரு வேலையைத் தேடிக் கொள்ள வேண்டுமென்ற சூழ்நிலையைக் கேசவதேவுக்கு உருவாக்கிவிட்டன. எனவே ஒரு வேலையைத் தேடி கேசவதேவ் பல இடங்களுக்கு அலைந்தார். கடைசியாக செங்கனூர் என்னும் சிறுநகர்ப் பகுதியிலிருந்து, வெளி வந்து கொண்டிருந்த "பஜே பாரதம்" என்னும் பத்திரிகையில் ஆசிரியர் வேலை கிடைத்தது. அந்தக் காலக்கட்டம் கிளர்ச்சிகள் மிகுந்த காலக்கட்டம்; லாலாலஜபதிராய் காலமான நேரம். வெள்ளைக் கார அரசாங்கத்தின் போலீஸ் அதிகாரியான சாண்டர்ஸ் என்பவன்தான் லாலாஜியைத் தாக்கியவன். அவனைப் பழிக்குப் பழி வாங்கவேண்டும் என்று நினைத்த அடையாளம் தெரியாத யாரோ ஒருவன் அவனைச் சுட்டுக் கொன்று விட்டான். அவனைப் பிடித்துத் தருபவருக்குப் பரிசு தருவதாக வெள்ளை அரசு அறிவித்திருந்தது.

1929 - ஏப்ரல் 8 ஆம் தேதியன்று பகத்சிங்கும் அவருடைய தோழர்களும் டெல்லிச் சட்டசபை அறையில் வெடிகுண்டு வீசினார்கள். கேசவதேவ் தனது பத்திரிகையில், இந்திய சரித்திரத்தின் வீரநாயகனாம் துணிவுமிக்க பகத் சிங்கிற்குப் பாராட்டு உரைக்கும் முறையில் "இந்தியாவின் பதில்" என்ற தலைப்பில் ஒரு தலையங்கம் எழுதினார். பத்திரிகையின்

அதிபர் அந்தத் தலையங்கத்தை நீக்கி விடுமாறு கூறினார். கேசவதேவ் அதற்கு ஒப்பவில்லை; மிகுந்த கோபம் அடைந்து 'பத்திரிகை வேலை வேண்டாம்' என்று தூக்கி எறிந்து விட்டார்.

இது தொடர்பாக, அந்தப் பத்திரிகை அதிபர், ஆசிரியராக இருந்த கேசவதேவ் இவருவருக்கும் இடையில் நடந்த உரையாடல் பின் வருமாறு முடிவுற்றது:

"கொலையின் மூலம் வரும் சுதந்திரத்தை நாங்கள் விரும்பவில்லை."

"எங்களையெல்லாம் கொலை செய்து முடிந்த பிறகு ஒரு சுதந்திரம் வருமானால் அதில் அர்த்தமில்லை"

பத்திரிகையில் இருந்து விலகிய பிறகு, கேசவதேவிற்கு மறுபடியும் வறுமைப் பிரச்சனை; அவர் பட்டினி கிடைந்தார். வேலை தேடும் பணி தொடர்ந்தது. இந்த முறை கேசவதேவ் கோட்டயம் வந்து சேர்ந்தார். கோட்டயம் திருவாங்கூரின் மத்திய நகர்ப்பகுதி. அங்கே புதிய சில அச்சகங்கள் தோன்றியிருந்தன. கேசவதேவ் "பிரதி தினம்" என்ற நாளிதழின் உரிமையாளர் வீட்டுக் கதவைத் தட்டினார். அங்கே கேசவதேவுக்கு ஆசிரியர் பதவி கொடுக்கப்பட்டது; மாதச் சம்பளம் முப்பது ரூபாய்.

'பிரதி தினம்' தினசரிப் பத்திரிகைக்குச் செய்தி சேகரிக்கும் பணி கேசவதேவுக்குக் கொடுக்கப்பட்டது. அவர், சென்னையிலிருந்து வெளிவந்து கொண்டிருந்த 'இந்து' 'மெட்ராஸ் மெயில்' என்ற இரண்டு தினசரிப் பத்திரிகைகளையும் படிக்க வேண்டும்; படித்த செய்திகளைக் கொண்டு 'பிரதி தினம்' பத்திரிகையின் தேசிய, வெளிநாட்டுச் செய்திப் பகுதிகளை மிகவும் கவனமாக நிரப்ப வேண்டும். இன்னொரு பத்திரிகையில் பார்த்து, ஓசி வாங்கித் தன் பத்திரிகையை நிரப்பும் பணியின் காரணமாகக் கேசவதேவ் இரண்டு மாதத்தில் மிகவும் களைப் படைந்து போனார். இந்த வேலையையும் அவர் விட்டுவிட்டார். தன் முழுநேரத்தையும், தனக்கே உரிய அறிவு சார்ந்த ஒரு பணியில் செலவிட வேண்டும் என்று அவர் விரும்பினார். அதற்குப் பிறகு, கலாச்சார வார இதழின் உரிமையாளரிடம் இருந்து ஆசிரியராகச் சேரும்படி கேசவதேவுக்கு அழைப்பு வந்தது.

இந்த ஏற்பாடு முதலில் மிகவும் நல்லதாகவே பட்டது. வேலையும் மனத்துக்கு உகந்ததாகவே இருந்தது. பத்திரிகை

உரிமையாளரது வீட்டிலேயே தங்கியிருந்து பணியாற்றியது வசதியாகவும் இருந்தது. ஆனாலும், சில நாட்களில் திடீரென்று அங்கே மிகவும் சங்கடமான சூழ்நிலையில் அவர் இருப்பதை உணர்ந்து கொண்டார். பத்திரிகையின் உரிமையாளருடைய மனைவி வெளிப்படையாகவே தவறான முறையில் கேசவதேவை அணுகத் தொடங்கினாள். தான் படித்த நாவல்களிலும், கதைகளிலும் தான் இப்படிப்பட்ட சூழ்நிலைகளைக் கேசவதேவ் கண்டிருக்கிறார். இப்போது உண்மையாகவே, தன் வாழ்வில், தான், இப்படிப்பட்ட சூழ்நிலையில் இருப்பதை அறிந்த போது மிகவும் அதிர்ச்சி அடைந்துவிட்டார். அவரது கொள்கைகள் அவரை அங்கே நீடிக்கவிட வில்லை. அந்த வீட்டை விட்டுக் கேசவதேவ் ஓட்டமாய் ஓடிவிட்டார்.

கையில் காசு இல்லை; உண்மையாகவே கேசவதேவ் தொடர்ந்து பதினைந்து நாட்கள் பட்டினியாகவே இருந்தார். இப்போதைக்கு 18 காசுகளுக்குச் சமமான அன்றைய 5.25 செப்புக் காசு மதிப்புக்குக் கிடைத்த சிறு சிறு தீனிகள்தான் ஏழு நாட்கள் சாப்பிட்டு உயிர் பிழைத்துக் கிடந்தார்.

அடுத்த ஏழு நாட்களில் அதுவும் இல்லை. கேசவதேவ் தன் அம்மாவுக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார். அதற்குப் பதில் சொல்லும் வகையில் கேசவதேவின் அம்மா அவருக்கு ஐந்து ரூபாய் 'மணி ஆர்டர்' அனுப்பியிருந்தார். அந்த ரூபாய்தான் இந்த இளைஞனைச் சாவிலிருந்து காப்பாற்றியது. பலநாட்கள் பட்டினிப் போர் நடத்தி வந்த கேசவதேவ் 'மணி ஆர்டர்' வந்த தினத்தன்று, மாலையில் சுவையான 'எலுமிச்சைச் சாறு' ஒரு கிளாஸ் அருந்தி, உண்ணாவிரதத்தை முடித்துக் கொண்டார்! அப்போது அவர் அடைந்த மகிழ்ச்சி உள்ளபடியே வார்த்தைகளால் விவரிக்க முடியாத மகிழ்ச்சிதான்! அந்த மனிதரின் மனோபாவம் அப்போது அப்படித்தான் இருந்தது!

வயிற்றுக்குச் சிறிது உணவு கிடைத்துவிட்டது இப்போது! கேசவதேவ், தான் வேலை பார்த்த அந்தத் தினசரி பத்திரிகையின் அலுவலகத்திற்குப் போனார். அங்கே கிடைத்த பழைய தினசரி இதழ்கள் சிலவற்றை எடுத்துக் கவனித்துப் படித்தார். காந்தியடிகள், பகத்சிங் ஆகியோர் பற்றிய செய்தி களைப் படித்துக் கேசவதேவ் திடுக்கிட்டுப் போனார். தேசத்தின் இளைஞர்களின் தலைவனாம் வீரநாயகன் பகத்சிங்கிற்குத் தூக்குத் தண்டனை! அதை அறிந்த காந்திஜி, வைஸ்ராய் ஏற்பாடு

செய்திருந்த கூட்டத்தைப் பகிஷ்காரம் செய்து தனது எதிர்ப்பைத் தெரிவித்திருக்கலாம். அதைச் செய்யக் காந்திஜி முன் வரவில்லை! வழக்கம் போலவே, கேசவதேவுக்குக் கோபம் பொங்கிவிட்டது. கையில் இருந்த 'யங் இந்தியா' பத்திரிகையைத் தூக்கி வீசி எறிந்தான். மகாத்மாவின் தொண்டனாக இனி மேலும் அவனால் இருக்க முடியாது! இப்போது கேசவதேவ் 'முழு சிவப்பாக' மாறிவிட்டார். "இனிமேலும் சும்மா இருக்க முடியாது" என்று தனக்குள் சொல்லிக் கொண்டார்.

கோட்டயத்திலிருந்து கேசவதேவ் திருவனந்தபுரம் நோக்கிப் புறப்பட்டார். மனத்திற்குள் இப்போது பெரிய திட்டங்கள் உருவாகியிருந்தன. ஆட்சி செய்து கொண்டிருந்த சமஸ்தான அதிபரை எதிர்த்தும், சமுதாயத்தில் அவர்களை ஆதரிப்பவர்களை எதிர்த்தும் ஒருபெரும் போராட்டத்தையே நடத்தியாக வேண்டும் என்று திட்டமிட்டார். திருவனந்த புரத்தில் இருந்த தன் நண்பர் ஏ.கே. பிள்ளை என்பவர் தனக்குப் பெரிதும் உதவுவார் என்ற நம்பிக்கையில் தான் இத்தனை பெரிய திட்டம்! கடை நடத்திக் கொண்டிருந்த நண்பர் ஏ.கே.பிள்ளை இப்போது கடையை மூடிவிட்டார் என்ற செய்தியைக் கேட்டதுமே, கேசவதேவின் மனத்திட்டங்கள் எல்லாம் புகைந்து போய்விட்டன.

நாடு கடத்தப்பட்ட தேசபக்தர் ஒருவருடைய தைரியம் மிகுந்த மருமகன் கே.ராமகிருஷ்ணபிள்ளை என்பவர்; அவருடைய முன்னோடி நடத்தி வந்த ஜனநாயகத்திற்கான போராட்டத்தை அவர் தொடர்ந்து நடத்தி வந்தார். இப்போது அவருடைய நிலையும் சிக்கலாகவே இருந்தது; மிகவும் இயலாத நிலையில்தான் அவரும் இருந்தார். பின்னடைவான இந்தச் சூழ்நிலைகளால் கேசவதேவின் நம்பிக்கைகள் சிதைந்து போயின; அவர் மிகுந்த சிரமத்துடன் தன் வீடு நோக்கித் திரும்பினார்.

புறப்பட்டு வரும் போது, கேசவதேவின் நண்பர், ஏ.கே. பிள்ளை, கேசவதேவுக்குப் படிப்பதற்காக 'ஒரு செட்' புத்தகங்களும், கைச்செலவுக்கு என்று பத்து ரூபாயும் கொடுத்திருந்தார். அந்தப் புத்தகங்களுள் ஜான்ரீடு எழுதிய "உலகைக் குலுக்கிய பத்து நாட்கள்" என்பதும் ஒன்று. அந்தப் புத்தகத்தை இளைஞன் கேசவதேவ் மிகுந்த கவனத்துடன் படித்து முடித்தார். முடித்த பிறகு கேசவதேவ் முழுமையாகவே மாற்றம் அடைந்துவிட்டார். "இந்தய சுதந்திரத்திற்கான பாதை

சோவியத்து நாட்டில் நிகழ்ந்தது மாதிரியான புரட்சிப் பாதையே" – இவ்வாறு கேசவதேவ் தனக்குள் சொல்லிக் கொண்டார்.

கிராமத்தில் உள்ள தன் வீட்டுக்கு வந்து சேர்ந்த கேசவதேவ், தனது தீவிரமான நடவடிக்கைகளில் தொடர்ந்து ஈடுபட்டார்; புரட்சி பற்றிப் படித்தார்; பிரச்சாரமும் செய்தார். கேசவதேவ் இப்போதெல்லாம் அணிந்து கொள்வது நல்ல சிவப்பு நிறத்துச் சட்டை! பொது மக்கள் தங்களது சிந்தனைப் போக்கை மாற்றிக் கொள்ள வேண்டும் என்று வற்புறுத்திக் கேசவதேவ் பொதுக் கூட்டத்தில் பேசினார். "ஓ! என் ரஷ்யதேசத்து மக்களே! வெறுக்கத் தக்க வாழ்க்கையாக இருக்கிறதே உங்கள் வாழ்க்கை! – என்று செக்காவ் உரக்கக் குரல் எழுப்பியது மாதிரி, அதே உணர்வில், கேசவதேவும் பல கட்டுரைகள் எழுதினார்!

கேசவதேவ் ஒரு முறை வி.டி.பட்டத்திரிபாடுவைச் சந்தித்தார். அவர் நம்பூதிரிகளிடையே பெரிய கிளர்ச்சிக்காரர் எனக் கருதப்பட்டவர். சீர்திருத்தப் பத்திரிகையான 'உன்னி நம்பூதிரி' என்ற பத்திரிகையின் ஆசிரியர். மிக மூத்தவரான வி.டி.பட்டத்திரிபாடு, மிக இளையவருமான கேசவதேவை அன்போடும் ஆர்வத்தோடும் வரவேற்றுத் தழுவிக் கொண்டார். ஏற்கனவே கேசவதேவ் தன் பத்திரிகையில் எழுதியிருந்த கட்டுரைகளுக்காக உரிய சன்மானத் தொகையையும் வழங்கினார். அந்தச் சமயத்தில், அருகில் இருந்து அறையிலிருந்து நம்பூதிரி இளைஞர் இருவர் வெளியில் வந்தார்கள்; தங்களுக்கு எதிரில் நின்று கொண்டிருந்த கேசவதேவுக்கு வாழ்த்துச் சொன்னார்கள்; பழமை வாதத்தை முற்றுகையிடும் புயல் காற்றாக நின்று கொண்டிருந்த கேசவதேவை ஆடாமல் அசையாமல் மிகுந்த மரியாதையோடு கவனித்துப் பார்த்தார்கள். அந்த இரண்டு நம்பூதிரி இளைஞருள் ஒருவர் இ.எம்.எஸ்.நம்பூரிபாடு! அப்போது அவர் கல்லூரியில் 'இண்டர்மீடியட்' மாணவராக இருந்தார்; அரசியலில் குதிப்பதற்குத் தயாராக இருந்தார்; அவர்தான் பின்னாளில், கேரள மாநிலத்தின் பொதுவுடைமைக் கட்சி அரசின் முதல்வராக ஆனவர்! தன்னிடமிருந்த ஒரே ஒரு சிவப்புச் சட்டையை அணிந்து கொண்டு அடிக்கடி காய்ந்து போன வயிற்றோடு பல மைல் தொலைவு கால் நடையாகவே கேசவதேவ் அலைந்து திரிந்தாலும், அவரது தலைநிமிர்ந்து தான் இருந்தது.

நிமிர்ந்த நடையோடும், நேர்கொண்ட பார்வையோடும் கேசவதேவ் தனது சேவையைத் தொடர்ந்தார். "எதிர்காலத்தில், இந்த நாட்டு மக்களுக்காகத் தான் எந்த வகையில் செயல்படுவது?" - என்று கேசவதேவ் பெரும்பாலும் தனக்குள் தானே ஆழ்ந்து சிந்திக்கலானார்; தியானித்தார்; கேள்விகள் கேட்டுக் கொண்டார்; விவாதித்தார்.

ஒரு தடவை, கேசவதேவ், நெடுஞ்சாலையில் ஒரு கார் பழுதடைந்து நின்று கொண்டிருப்பதைக் கண்டார். காரின் டிரைவர், கொளுத்தும் வெய்யிலில், வியர்க்க, வியர்க்க, தனக்குத் தெரிந்த மோட்டார் மெக்கானிசத்தை எல்லாம் பயன்படுத்தி 'ரிப்பேர்' வேலை செய்து கொண்டிருந்தார். அந்த டிரைவர் மீது இரக்கம் கொண்ட சேவதேவ் டிரைவர் அருகே சென்று அவருக்கு உதவி செய்யலானார். டிரைவர் வியர்க்க வியர்க்க அரும்பாடு படுவதையும், கேசவதேவ் உதவி செய்ய வந்ததையும், அதிகாரத் தோரணையில், அலட்சிய பாவத்தோடு இதுவரையில் பார்த்துக் கொண்டே இருந்த கார் முதலாளியான அந்தப் பகட்டு ஆசாமி, கேசவதேவைக் கூப்பிட்டுத் தனக்குச் சிற்றுண்டி வாங்கி வருமாறு உத்தரவிட்டார். அந்தப் பணக்காரப் பகட்டு ஆசாமியின் இந்தத் திமிரான செயல் கேசவதேவுக்குப் பெருங்கோபத்தை மூட்டிவிட்டது! "மூடய்யா வாயை!" - என்று சத்தம் போட்டுவிட்டார் கேசவதேவ்! சிறிது நேரத்தில் அவர்களுக்குள் சிறிய கைகலப்பே தொடங்கிவிட்டது. இறுதியில் ஓர் உடைந்த கண்ணாடி டம்பளரைக் கத்தி முனைபோலப் பயன்படுத்தி, அதைக்காட்டி, அந்த மனிதாபிமான மற்ற பணக்கார ஆசாமியைப் பயமுறுத்தி விட்டார் கேசவதேவ்!

பணக்கார ஆசாமிகள் பற்றிக் கேசவதேவ் ஏற்கனவே கொண்டிருந்த கருத்து, இந்த நிகழ்ச்சியால் மேலும் உறுதிப் பட்டுவிட்டது. பணக்காரர்கள் உணர்ச்சியே இல்லாத கும்பல்! அவர்களை அடியோடு அழித்து ஒழிப்பதுதான் ஒரே வழி என்று கேசவதேவுக்குப் பட்டது. அரசியல், சித்தாந்த ரீதியாகக் கேசவதேவுக்கு அந்தக் காலக்கட்டத்தில் சில சிரமங்கள் இருந்தன. எனினும் தேசத்தில் ஒரு புரட்சியைக் கொண்டு வருவதற்குத் தன்னளவில் தான் என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்வதற்கு அவர் தயாராகவே இருந்தார்.

பொதுமேடைகளில் சொற்பொழிவாற்ற வருமாறு கேசவதேவுக்கு அழைப்புக்கள் நாலா திசைகளிலிருந்தும் ஏராளமாய் வந்து குவிந்தன. இப்போது கேசவதேவ், 'ஒரு

மனிதன்' என்ற நிலையிலிருந்து மாறி, 'ஒரு புயல்' போலவே உருவாகிவிட்டார். கேசவதேவ், தன் பேச்சால், பிரிட்டிஷாருக்கும், எதேச்சாதிகார அரசுக்கும், முதலாளிகளுக்கும் எதிராகக் கிளர்ந்து எழுமாறு தொழிலாளர்களையும், இளைஞர்களையும் தூண்டினார். ஆலப்பேயில் நிகழ்ந்த தொழிலாளர் மாநாடு ஒன்றில் உரை நிகழ்த்துவதற்குக் கேசவதேவ் அழைக்கப்பட்டார். தன்னைச் சுற்றியுள்ள ஏழைமக்கள் துயரப்படுவதையும், அந்தத் துயரத்தால், தான், மிகவும் அழுத்தப்படுவதையும் கேசவதேவ் உணர்ந்தார். தன்னைச் சுற்றி வாழ்பவர்களது வாழ்க்கையில் காணப்படும் முள்முனை போன்ற வாழ்க்கைத் துயரங்களைச் சிந்திக்கச் சிந்திக்க, அது ஒரு சிறுகதையாக உருவாகிவிட்டது! ஏழை ஜனங்களைப் பற்றிக் கேசவதேவ் எழுதிய அந்தச் சிறுகதை, அன்றைய புகழ்பெற்ற கலாச்சார வார இதழான 'மாத்ரு பூமி'யில் வெளியிடப் படுவதற்காக உடனே ஏற்றுக் கொள்ளப்பட்டது. கேசவதேவ் இதையறிந்ததும் மிகவும் வியப்படைந்தார். இந்த நிகழ்ச்சியானது, ஓர் அரிய உண்மையை, - உலகில் நிரந்தரமானது எது என்ற உண்மையை - அந்த இளைஞருக்கு உணர்த்துவதாக அமைந்து விட்டது. ஆம், தனது கடமை என்ன என்பதை இப்போது அந்த இளைஞர் உணர்ந்து கொண்டுவிட்டார்.

ஆலப்பே தொழிலாளர் மாநாட்டில் கேசவதேவ் பேசிய பேச்சு பெரும் உணர்ச்சியைக் கிளப்பிவிட்டது! அவருடைய கருத்துக்கள் புதுமையாக இருந்தன; பேசிய முறையும் பிரமிக்கத் தக்கதாக இருந்தது. ஆனால் மாநாட்டின் தலைவராக இருந்தவர் பேச்சு வேறுவிதமாக இருந்தது. மிதவாதியான அவர், 'கடவுளுக்குப் பயந்து நடக்க வேண்டும்; முதலாளிகளுக்குத் தொழிலாளிகள் - எவ்வாறெல்லாம் விசுவாசமாக நடந்து கொள்ள வேண்டும்' என்று திரும்பத் திரும்பச் சொல்லிப் பேசியிருந்தார். அங்கே உரையாற்றிய கேசவதேவ், 'தோழர்' களைப் பார்த்து, சுரண்டிக் கொண்டிருக்கும் அடக்கு முறையாளர்களுக்கு எதிராகக் கிளர்ந்து எழுமாறு வலியுறுத்திக் கேட்டுக் கொண்டார்.

மாநாடு தோல்வியில் தான் முடிந்தது. ஆனாலும், கேசவதேவின் வாழ்க்கையில் அந்த மாநாட்டின் விளைவு மிகவும் முக்கியத்துவம் பெற்றுவிட்டது. மாநாட்டின் தொழிலாளர்கள், எங்கிருந்தோ வெகுதொலைவிலிருந்து வந்திருந்த கேசவதேவைத் தமது தலைவராக - தமது இயக்கத்தின் பொதுச்செயலாளராக

- ஆக்கிக் கொள்ள விரும்பினார்கள். ஆட்சியில் இருந்த சமஸ்தானத்துத் திவானின் கைப்பொம்மையாக இருந்த மாஜிஸ்ட்ரேட், ஆலப்பே மாவட்டம், அல்லது அதன் அருகில் இருக்கும் மாவட்டங்களில், எந்த இடத்திலும் பதினைந்து நாட்களுக்கு இதுபோன்ற "விஷமப் பிரச்சாரம்" செய்யக்கூடாது என்று கேசவதேவுக்குத் தடை உத்தரவு பிறப்பித்தார்.

விதிக்கப்பட்ட தடை உத்தரவும் கூட கேசவதேவுக்கு ஒருவகையில் நல்லதாகவே அமைந்தது. இதனால் இரட்டிப்புச் சந்தோஷம் அடைந்த கேசவதேவ், தொழிற்சங்கத்தின் பொதுச்செயலாளர் பொறுப்பை ஏற்றுக் கொண்டு, நகரத்துத் தொழிலாளர்களை ஒரு புதிய வழியில் ஒன்று திரட்டி, ஒழுங்கு படுத்த முனைந்தார். இதுதான் கேரள மாநிலத்தின் தொழிற்சங்கப்பணியின் முதன் முதல் தொடக்கம் ஆகும். ஏழைத் தொழிலாளர்களின் கூலியைச் சுரண்டித் திருடும் தொழிற்சாலை நிர்வாகத்திற்கு எதிராகவும், ஆள்குறைப்பு நடவடிக்கைக்கு எதிராகவும், சரியான, நெறியான கூலி நிர்ணயம் வேண்டும் என்று கேட்டும் கேசவதேவ் பல தொழிற்சாலைகளில் வரிசையாய்ப் பல வேலைநிறுத்தப் போராட்டங்களை நடத்திக் காண்பித்தார்.

முப்பதுகளின் முதல் பத்தாண்டுக் காலம் நமது நாடு, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கு ஏதிராக ஒரே குரலில் கிளர்ந்து எழுந்த காலம்! அடிமை விலங்கை அடித்து நொறுக்கி ஏறிய எழுந்த காலம்! கம்பீரம் மிக்க அந்தக் காலக்கட்டத்தில்தான், நமது தேசம், கண்ணியமுள்ள பிரதிநிதியாகவும், சலனமற்ற போராட்ட வீரனாகவும் கேசவதேவ் போன்ற பலரையும் கண்டெடுத்தது!

அடுத்த ஐம்பதாண்டுகள், கேசவதேவின் வாழ்க்கை, நீண்ட நெடிய போராட்டக்கள வாழ்க்கையாகவே அமைந்தது. அவரது போராட்டம் அனைத்துத் தீய சக்தியகளுக்கும் எதிரான போராட்டம். இன்னும் முக்கியமாக, அவரது போராட்டம், முதலாளிகள், சமஸ்தான ராஜா - ராணிகள், 'ரஸ்புட்டீன்' மாதிரி இருந்த திவான்கள், ஆகியோர்களுக்கு எதிரான போராட்டம்! அதற்கு அடுத்து பிரிட்டிஷ் அடக்கு முறைகளுக்கு எதிரான போராட்டம்! அதற்கு அடுத்த நிலையில், தேர்ந்தெடுக்கப்பட்டு ஆட்சியில் அமர்ந்த தகுதியில்லாத, லஞ்ச லாவண்யம் மிக்க ஆட்சியாளர்களுக்கு எதிரான போராட்டம்! நெடிய போராட்ட

வாழ்க்கையின் முதலாவது காலக் கட்டத்தின் போது போலீஸ் கேசவதேவைப் பிடிப்பதற்குத் தீவிரமான வேட்டையை நடத்தியது. கேசவதேவ் சளைக்கவில்லை; மேலும் தீவிரமாகத் தலைமறைவு வாழ்க்கை மேற்கொண்டு செயலாற்றினார். இரவும் பகலும் மிகக் கடுமையான பணி; மேலும் கடுமையான சுற்றுப்பயணம்! இவ்வாறு அவருக்காகப் பணிகள் காத்துக் கிடந்தன. தலைமறைவு வாழ்க்கையின் போது, பயங்கரமான இரவு நேரங்களில் பாம்புப் புற்றுக்களின் அருகிலே மறைந்திருத்தல்; தொழிலாளர்களுக்காக நடுநசி நேரங்களில் கல்வி வகுப்புக்கள் நடத்துதல்; போலீசுக்காரர்களிடம் இருந்து தப்புவதற்காக பாழடைந்த வீடுகளில் ஒரு சிம்னி விளக்கின் அடியில் தூங்கிப் போதல்; – இவையும் இவை போன்ற இன்னும் பலவுமாய், சுதந்திரத்திற்கு முன்பு, கேசவதேவ் அனுபவித்த துன்பங்கள் பல! அவை அனைத்தையும் அவர் மிக்க மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொண்டார்!

கேசவதேவ் பிறவியிலேயே ஓர் அரசியல் போராட்டக் கிளர்ச்சிக்காரர்! வாழ்நாள் முழுவதும் அவர் அவ்வாறே இருந்தார். ஆயினும் அடிப்படையில் ஓர் எழுத்தாளரே ஆவார். முன் எப்போதும் இருந்ததைவிடவும், இப்போது, விக்டர் ஹ்யூஹோ, பெர்னார்ட்ஷா, மக்சிம் கார்க்கி, ஆன்டன் செக்காவ், உபான் சின்க்லேர், தாஸ்தாயெவ்ஸ்கி, இன்னும் இவர்களைப் போன்ற பலர் ஆகியோர்தம் படைப்புக்களைக் கேசவதேவ் மிகுந்த பேராசையுடன் படிக்கலானார்.

டால்ஸ்டாய் படைப்புக்களைக் கேசவதேவ் அதிகம் பாராட்டி வந்தார். தாகூரின் கவிதைகளைப் பெரிதும் விரும்பினார். ஆனால் அந்தச் சாந்திநிகேத முனிவரின் ஆன்மிக உள்ளடக்கத்தைக் கேசவதேவ் 'பொருளற்றது' என்றே கருதினார். மிகுந்த ஆரவாரத்தோடு வரவேற்கப்பட்ட சந்துமேனன் படைப்பாகிய 'இந்துலேகா' வைப் பற்றியும் கேசவதேவுக்கு நல்ல அபிப்பிராயம் இல்லை. இவற்றிலிருந்து மாறுபட்டுத் தன்னால் எழுத முடியும் என்று கேசவதேவ் எண்ணினார். இது விஷயமாக, அவர் ஒரு தெளிவான நிலைபாட்டுக்கு வந்துவிட்டார். மாறுபட்டு வித்தியாசமான முறையில் படைக்க வேண்டும் என்ற நல்லெண்ணம் இருந்தால் மட்டும் போதாது; படிப்பும், கதை பின்னும் கலையில் மேதைமையும் மிகவும் முக்கியம் என்று உணர்ந்து, கதை சொல்லும் கலையில் மேதைமை பெற முயன்றார்.

கேசவதேவின் இலக்கியக் கொள்கை இப்போது ஒரு முழு உருவம் பெற்றுவிட்டது. ஒரு புதிய பாணி இலக்கியக் கொள்கையைப்* பிரச்சாரம் செய்யும் சிறுகதைகளையும், கட்டுரைகளையும் அவர் எழுதத் தொடங்கினார்.

அந்தப் புதிய பாணி இலக்கியம் என்பது எது? அதுதான் புரட்சிகர இலக்கியம்; அதுதான், அவமானப் படுத்தப் பட்டவர்கள், காயப்பட்டுப் போனவர்கள், நசுக்கப்பட்டவர்கள், ஆகியோர் சார்பாகப் போராடும் இலக்கியம்; அதுதான் மனிதன் மீது விசுவாசம் வைத்து, மனிதனின் அளப்பரிய ஆற்றல் மீது நம்பிக்கை கொள்ளும் இலக்கியம்; "இந்த மனிதன் என்பவன்தான், எத்தகைய படைப்பு! அவன் வாழும் வாழ்க்கை எவ்வளவு வெறுக்கத் தக்கதாய் இருக்கிறது!" என்று பேசும் இலக்கியம். சுருக்கமாகச் சொன்னால், சுதந்திர இந்தியாவின், துணிவுமிக்க இந்தியாவின் மானுடத்தை, மறுபடியும் விழித்து எழச்செய்ய வல்லதாக இந்த இலக்கியம் இருக்கும். கேசவதேவும், தகழியும் மலையாள இலக்கியத்தில் இந்தப் புதிய இயக்கத்திற்குத் தலைமையேற்று முன்னெடுத்துச் சென்றார்கள்.

புரட்சிகர இலக்கியம் என்னும் இயக்கத்தின் கடுமையான முதலாவது தாக்குதல் 1930-களின் முன்வருடங்களில் சிறுகதைகளாக வெளிவந்தன; அந்தச் சிறுகதைகளை கேசவதேவ் அல்லது தகழி எழுதியிருந்தனர். அந்தக் காலக் கட்டம் வழக்கமாகக் 'கொந்தளிக்கும் முப்பதுகள்' என்றே பேசப்பட்டு வந்தது. அந்தக் காலக் கட்டத்தின் முதலாவது வெற்றிப்படைப்பு, திசையெங்கும் எதிரொலித்த படைப்பு கேசவதேவ் எழுதிய "சாக்கடையிலிருந்து" என்னும் நாவலாகும்.

---

* பெங்குயின் நிறுவனம் வெளியிட்ட 'இலக்கியத் துணைவன் என்னும் நூலில் ஆர்.இ. ஆஷர் கூறுகிறார்: "அவரது காலத்துக்கு முன்பாகவே (அதாவது தகழி சிவசங்கரபிள்ளையின்) மலையாளத்து நாவல்கள் ஒப்பிட்டுப் பார்க்கும்பேது, வசதிமிக்க நடுத்தர வர்க்கத்தையே பின்னணியாகக் கொண்டிருந்தன."

பேராசிரியர் எஸ்.குப்தன் நாயர் தனது தனிச்சிறப்பான, ஆழமான கருத்துரையில், அண்மையில் ஓர் உண்மையை வெளிப்படுத்தியுள்ளார். அவர் சொன்னார்: "உண்மையான சரித்திரபூர்வ அடிப்படையில், கேரள இலக்கியத்தின் மறுமலர்ச்சியுகத்தின் வரலாறு எழுதப்படும்போது இந்த உண்மையை யாரும் மறைத்துவிட வேண்டாம்." கேசவதேவ் அதன் நிறுவுநர்; அந்தக் கொள்கையை முன்னெடுத்துப் பரப்பிய முதல்வரும் அவரே" (கேசவதேவ்: மொழிவளர்ச்சியில் ஒரு மறுபரிசீலனை; ஏப்ரல் - மே, 1984 - கருத்தரங்கு)

இது 1942-ஆம் ஆண்டில் வெளிவந்து, 1945 ஆம் ஆண்டின் போது, மலையாள இலக்கியத்தின் மிகச் சிறந்த சாதனைப் படைப்பு என்ற பாராட்டையும் பெற்றுவிட்டது.*

இத்தகைய உச்சக்கட்டச் செயல் பாட்டுக் காலத்தின் போது,** ஒருசமயம், கேசவதேவ் தனது இடத்தை ஆலப்பேயிலிருந்து திருச்சூருக்கு மாற்றினார். திருச்சூரில் 'மகாத்மா' என்னும் அரசியல் பத்திரிகையில் கேசவதேவ் ஆசிரியராகப் பொறுப்பேற்றார். திவானுடைய போலீசின் பிடியிலிருந்து தப்பித்துக் கொள்ளும் வகையிலும் இந்த மாற்றம் அமைந்தது. 'மகாத்மா' பத்திரிகையில் கேசவதேவ் தலையங் கங்கள் எழுதினார். அத்தோடு நகைச்சுவைத் தொடர்கதையும் எழுதினார். அதன் பெயர் 'இந்திரசபை' என்பது. இந்தத் தொடரில், அன்றையக் காலக்கட்டப் பிரச்சனைகளைக் கடவுளர்கள் கூடி விவாதிப்பது போல் எழுதப்பட்டிருந்தது.

கேசவதேவ் எழுதிய தலையங்கங்கள் பொதுமக்களின் கவனத்தை ஈர்த்தன. அவர் எழுதிய ஒரு தலையங்கம் குருவாயூர் சத்யாக்ரகம் பற்றியது. அந்தச் சந்யாக்கிரகம், தாழ்த்தப்பட்ட இனத்துமக்கள் கோவிலுக்குள் பிரவேசிக்கும் உரிமையை நிலைநிறுத்துவதற்காக நடத்தப்பட்ட சத்தியாக்கிரகம் ஆகும். 1.10.1930-ஆம் தேதி இடப்பட்டு வெளியான அந்தத் தலையங்கம் பின்னாளில், கம்யூனிஸ்டுக் கட்சியின் நிறுவன உறுப்பனர்களுள் ஒருவராக ஆகப் போகிற பி. கிருஷ்ணப் பிள்ளைக்குப் புதிய சிந்தனையைத் தூண்டிய ஆதர்சமான தலையங்கம் ஆகும்.

சில நாட்களில், பி. கிருஷ்ணப்பிள்ளை கேசவதேவைத் தேடி அவர் வீட்டுக்கே வந்துவிட்டார்; வந்து, கேசவ தேவினுடைய ஆளாகவே தான் ஆகிவிட்டது பற்றி அவரிடம்

---

* தகழி, தனது 'இரண்டுபடி அரிசி' என்னும் நாவலுடன் தெரிய வந்தது 1949இல்தான். இது, கேசவதேவின் 'சாக்கடையிலிருந்து' நாவலைப் போல முக்கியத்துவம் உடையது. 'பதித பங்கஜம்' என்ற தகழியின் நாவல் சிறிது காலம் முன்னரே வெளிவந்தது. இது வழுக்கி விழுந்துவிட்ட பெண் பற்றிய நாவல்.

** ஆங்கில இலக்கியத்தில், எலிசபெத்தியன் காலக் கட்டத்தை, தீவிரமான, இவ்வுலகம் பற்றிச் சிந்தித்த செயல்பாடுகள் நிரம்பிய காலக்கட்டம் என்று வரலாற்று ஆசிரியர் பேசுவர். ஈடு இணையற்ற கேரளப் படைப்பாளராகிய கேசவதேவின் காலக்கட்டம் உன்னதமான கலைப்படைப்பின் காலமாகவும், தீவிரமான செயல்பாட்டுக் காலமாகவும் இருந்தது.

எடுத்துச் சொன்னார். பின்னர் இருவரும், நண்பர்களாய், தோழர்களாய் நெருங்கிவிட்டனர். சமுதாய மக்களிடத்தில் ஒரு புதிய தன்னுணர்வு நிலையையும், ஒரு புதிய விழிப்புணர்ச்சி யையும் கொண்டு வருவதற்கு இருவரும் சேர்ந்தே உழைக்கலாயினர்.

இந்தக் காலக்கட்டத்தில், கேசவதேவ் ஈடுபட்டுச் செய்த புனித காரியங்கள் எண்ணற்றவை. அவை ஒவ்வொன்றும், கேரள மாநிலத்தின் அரசியல், கலாச்சார வரலாற்றில் முன்னோடிக் காரியங்கள் ஆகும். தொழிலாளிகளின் இயக்கத்தைக் கட்டுதல், அவர்களுக்குக் கல்வி ஊட்டுதல், இவ்வாறு அரசியல் நோக்கங்களுக்காகப் பாடுபட்டுக் கொண்டிருந்த கேசவதேவ், தனது இருப்பிடத்தை ஆலப்பேக்கு மாற்றினார்; பின்னர் ஷெர்ட்டாலைக்கும், பின்னர் அங்கிருந்து காயங்குளத்துக்கும் மாற்றினார். கதைகள், கட்டுரைகள் எழுதுதல், சாக்ரட்டீஸ் பாணியில் கேள்விகள் எழுப்புதல் ஆகிய படைப்பு நோக்கங்களிலும் கேசவதேவ் தீவிரமாகவே இருந்தார். 'மாத்ருபூமி' 'மனோரமா' ஆகிய இதழ்களில் வெளியாகியிருந்த தனது சிறு கதைகளை அச்சிட்டு நூலாக்கி, கால் ரூபாய் விலைவைத்து அவற்றை விற்பதற்கான ஏற்பாடுகளையும் செய்தார். (பின்னாளில், பல ஆண்டுகள், கேரள எழுத்தாளர் கூட்டுறவு நிறுவனத்தின் தலைவராகப் பதவி வகித்தார்.)

1942-இல் கேசவதேவ், முதன் முதலாக ஒரு மேடை நாடக ஆக்கத்திலும் முயற்சி செய்து பார்த்தார். அவர் எழுதிய 'நடிகை' (1945) என்னும் நாவலுக்கு எழுதப்பட்ட முன்னுரையில் விரிவாக ஒரு நிகழ்ச்சியைக் குறிப்பிட்டதுபோல, அவருக்கு 'மேடை நாடகம்' என்னும் இலக்கிய வகையை சமுதாய மாற்றத்துக்கான ஒரு கருவியாகப் பயன் படுத்திக் கொள்ள வேண்டும் என்ற விருப்பம் இருந்திருக்கிறது. ஆனால் 'மரபுவாதிகள்' சிலர் இதற்கு எதிர்ப்புத் தெரிவித்தனர்.

இந்தப் புதிய முயற்சியில் கேசவதேவ் வெற்றி பெறவில்லை. ஆனால், 'பொஹிமியன்' நாடகக் கம்பெனியின் மேலாளர்கள், அடிமைப்பட்டுக் கிடந்த நடிகைகள், மற்றும் அவர்களைப் போன்ற நாடகத் துறையைச் சேர்ந்த பிறர் ஆகியோரது தொடர்பு கேசவதேவுக்குக் கிடைத்தது. இந்த தொடர்பு, அவருக்கு மனத்தை உறுத்துகிற பல அனுபவங்களைத் தந்தது. மேடை நாடகக் கலையில் ஈடுபட்டுள்ள அவர்களை ஒரு கண்ணியமான சமுதாயமாக உருவாக்கி மேலே கொண்டுவர

வேண்டுமென்று முயற்சிகளை மேற்கொண்டார். 'ஓ ஹென்றி'யின் வார்த்தைகளில் சொல்வதென்றால் அந்த மேடை நாடகக் கலைஞர்களை 'கலைமக்கள்' ஆக உயர்த்திக் கொண்டுவர வேண்டும் என்று கேசவதேவ் பாடுபட்டார்.

1935 - இன்போது காயம்குளத்துக்கு அருகே, துணைவியார் வசித்து வந்த பத்துப்பள்ளி என்னும் கிராமத்துக்குச் சென்று கேசவதேவ் தங்கினார். கேசவதேவும் அவருடைய மனைவியும் திருமணம் பண்ணிக் கொள்ள நேர்ந்த பின்னணி நிகழ்ச்சிகள் சுவையானவை; விசித்திரமானவை. இஸ்லாமியன் ஒருவன், கோமதி என்ற ஈழவப் பெண் நடிகையை (உண்மைப் பெயர்: வேலும்பி) கடத்திக் கொண்டு போகிறான். செய்தியறிந்த ஈழவர்கள் சினம் அடைந்து கோமதியைக் காப்பாற்ற முனைகிறார்கள். இந்தக் காப்பாற்றும் படலம் நடந்து கொண்டிருக்கும் போது, கேசவதேவ், அவருக்கே உரிய 'க்விஸோட்டிக்' வீரதீரசாகசப் பண்புக்கு ஏற்பக் காப்பாற்றும் பணியில் ஈடுபட்டு முன்னணியில் நிற்கிறார். காப்பாற்றிய பிறகு, பிரச்சனைக்கு உரிய அந்தப் பெண்ணை, ஈழவர்களில் ஒருவனான குட்டன் என்ற குட்டன்சிங் திருமணம் செய்து கொள்வது என்று ஏற்பாடு ஆகிறது. கடைசி நேர்தில் குட்டன்சிங் பின்வாங்கி விடுகிறான். உடனே கேசவதேவ் அவளை மணந்து கொள்ளச் சம்மதிக்கிறார்.

கேசவதேவ் அந்தப் பெண்ணை மணந்து இருப தாண்டுகள் அவளுடன் வாழ்ந்தார். ஆனால் அவர்களது இல்லற வாழ்க்கை இன்பமானதாக அமையவில்லை. இறுதியாக, 1955-இன் தொடக்கத்தில் கேசவதேவ் அந்தப் பெண்ணிட மிருந்து விலகிக் கொண்டார். தன்னைத்தானே உருவாக்கி, தன்னைத் தானே உருக்கித் தியாகமும் செய்து கொள்ளும் பண்புகொண்ட 'பப்பு' இந்தச் சூழ்நிலையில் தனது உடைமைகள் அனைத்தையும் விட்டுக் கொடுத்துவிட்டான். சில கடைகள் கட்டப்பட்டிருந்த ஒரு வளாகம், அதில் ஒரு பகுதியான நெல்விளையும் வயல்வெளி அனைத்தையும் 'பப்பு' கோமதிக்காக விட்டுக் கொடுத்தான்!

அதே ஆண்டில் திருவனந்தபுரம் அகில இந்திய வானொலி நிலையத்தில் நிகழ்ச்சி அமைப்பாளராகக் குறுகிய காலம் பணியாற்றிவிட்டுப் பின்னர் அங்கிருந்து விலகினார். அப்போது கேசவதேவ் சீதாலெட்சுமி என்ற பெண்ணை விரும்பிக் காதல் கொண்டார். அந்த ஆண்டின் இறுதியில் சீதாலெட்சுமியை அவர் திருமணம் செய்து கொண்டார். முதல்

திருமணத்தின் போது இருந்த உறவைக் காட்டிலும், இரண்டாம் திருமணத்து உறவு கேசவதேவுக்கு மகிழ்ச்சி தருவதாக அமைந்தது. சீதாலெட்சுமி ஓர் ஆண்பிள்ளை பெற்றெடுத்தாள்; வயது முதிர்ந்த காலத்தில் வறுமையின் காரணமாகக் கேசவதேவுக்கு ஏற்பட்ட பல்வேறு சிரமங்கள் - சுமைகளுக் கெல்லாம் ஒரே ஆறுதலாக இந்தப் பையனே இருந்தான்.

வாழ்க்கையில் இவ்வாறான அழுத்தங்களும் ஆயாசங்களும் தொடர்ந்து இருந்தாலும், கேசவதேவ் சமுதாய மறுமலர்ச்சிப் பணிகளில் அயராமல் தொடர்ந்து ஈடுபட்டு வந்தார். தேசம் விடுதலையடைந்து சுதேசி அரசு அமைந்த தொடக்க காலங்களில் ஆட்சியாளர்களிடம் காணப்பட்ட பலவீனங்கள், திறமையின்மை ஆகியவற்றைக் கேசவதேவ் கடுமையாக விமர்சனம் செய்தார்; காவல் துறையின் நிர்வாகத்தில் ஓர் ஒட்டுமொத்தமான மாறுதல் வேண்டுமென்று கோரினார்; அத்தோடு கேசவதேவ், பயங்கரவாதம், தீவிர சாகசச் செயல் பற்றிய கல்கத்தா கொள்கையின் அடிப்படையில் கம்யூனிஸ்ட் தீவிரவாதிகள் புரிந்த அட்டகாசங்களையும் கண்டனம் செய்தார். 1957-இல் கேரளாவில் கம்யூனிஸ்டுகள் பதவிக்கு வந்த போது, கேரளாவின் அதிகாரபூர்வமற்ற பல கம்யூனிஸ்டுகள் புதிய அரசாங்கத்திற்கு எதிர்ப்புத்தெரிவித்தார்கள். அவர்களுள் முதன்முதலில் எதிர்ப்புத் தெரிவித்தவர் கேசவதேவ்தான். ஜனநாயகத்திற்கு எதிரானது; எதேச்சாதிகாரமானது என்று தனக்குப்பட்டவுடன் கேசவதேவ் மிகக் கடுமையாகவே எதிர்த்தார். தனது எதிர்ப்பு முழுவதையும் ஒன்று திரட்டி, 'எதிர்ப்புக் கொள்கை' என்ற ஒன்றை அவரளவில் உருவாக்கி, அதைத் தனது சுய வாழ்க்கை வரலாற்று நூலாகிய "எதிர்ப்பு" என்ற நூலில் அனைவரும் அறியுமாறு பிரகடனப்படுத்தினார். பைரன் நம்பியதைப் போலவே, எழுத்தாளன் எனப்படும் ஒருவன் எப்போதும் எதிர் அணியில்தான் இருக்க வேண்டும் என்று கேசவதேவ் விரும்பினார். இதன் காரணமாகக் கேசவதேவை 'பொதுவுடைமைக்கு எதிரானவர்' என்று கூறினார்கள். உண்மையில் கேசவதேவ் அப்படிப்பட்டவர் அல்ல. 'ஸ்டாலின்' - 'ஸ்டாலினிஸம்' ஆகிய போக்குக்களுக்குத்தான் எதிரானவன்; ஆனால் கம்யூனிஸ்டுகளுக்கோ, கம்யூனிசத்துக்கோ எதிரானவன் அல்ல என்று கேசவதேவ் பல முறை தெரிவித்திருக்கிறார். மாநிலத்தின் கம்யூனிஸ்டு அரசாங்கத்தின் முதல்வராக இருந்த சி. அச்சுதமேனன் அவர்களால், கேசவதேவ், கேரள மாநில சாகித்திய அகாடமியின் தலைவராக நியமிக்கப்பட்டார். இது ஒரு குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

கேசவதேவ், இவ்வாறு வெகுதொலைவு புரட்சிக் காரர்களிடமிருந்து விலகி நிற்குமாறு அவரை இட்டுச் சென்றது எது? தனக்கே உரிய பாணியில் இருந்து தன்னையே இழந்த தலைவராக அவர் ஆகி, முப்பது செப்புக் காசுகளுக்கும், ரிப்பனுக்கும் கட்சியிலிருந்து விலகி நிற்கிறாரே இதற்குக் காரணம் என்ன? முற்போக்குச் சிந்தனையாளர் சிலர் நினைப்பது போல இதற்குக் காரணம் அவரது சுயநலமா? இவ்வாறு நினைப்பது முற்றிலும் பொருந்தாத ஒன்று. அவரது பாலிய கால நிகழ்ச்சிகளுள் ஒரு நிகழ்ச்சியை நினைத்துப் பார்க்க வேண்டும். நாயர் இனத்துத் தலைவர் ஒருவர் ஒரு முறை தாழ்ந்த குலத்துப் பையனைப் போட்டு அடித்த போது சிறுவயது கேசவதேவ் ஓடிச் சென்று அந்தப் பையனுக்கு அனுசரணையாகச் செயல்பட்டாரே! கேசவதேவின் வாழ்க்கையில் அவர் கோட்டயத்தில் தங்கியிருந்த போது இன்னுமொரு நிகழ்ச்சி நடந்தது. ஒரு முழுமையான மனிதாபிமானத் தொண்டு என்று சொல்லும் அளவுக்கு அந்த நிகழ்ச்சி பொது வீதியில் நடந்தேறியது.* அத்தகைய கேசவதேவ் மாறிவிடவில்லை. அவரது செயல்பாடுகளை வேறு பிரத்தியட்ச நடைமுறைகள் எவையும் பாதித்துவிடவில்லை; பின் விளைவுகள் பற்றியும் அவர் கருதவில்லை; அவைகளுக்கும் அப்பால், கேசவதேவ் எப்போதும் பலவீனப்பட்டவர்களுக்காவும், ஆதரவற்றவர்களுக்காகவும் தொடர்ந்து போராடுபவராகவே விளங்கினார்.

கேசவதேவ் வாழ்நாள் முழுவதும் குறிக்கோள் உடைய கொள்கையாளராகவே வாழ்ந்து வந்தார்; மனிதாபிமானத் துக்காகப் போராடிய அவர், 'எதிர்ப்பு' என்னும் கொள்கையில் தான் நிறைவு கண்டார். அவரைப் பற்றிய ஓர் உண்மை புதுமையானது; அதே வேளையில் முழுமையானது. சமூக நீதிக்காகப் போராடிய இந்தப் பகுத்தறிவுவாதப் புனிதப் போராட்டக்காரர், மிக அற்புதமான முறையில், அந்த யூத நாட்டுத் தீர்க்கதரிசியின் கருத்தைத்தான் செயல்படுத்தினார்: "இந்தத் தற்காலத்து உலகத்துக்குக் கீழ்ப்படிந்து விடாதே!"

* புல்அறுக்கும் வயதான தாழ்த்தப்பட்ட பெண் ஒருத்தி, நடுவீதியில், சந்தை கூடும் இடத்தில் வலியால் விழுந்து புரண்டு கொண்டிருப்பதை கேசவதேவ் பார்த்தார். அலைந்து திரியும் ஊர்க்காளை ஒன்று அவளை அடிவயிற்றில் கொம்பால் குத்திவிட்டது. அருகே கூடியிருந்த ஜனங்கள் அந்தக் காட்சியைச் சும்மா வேடிக்கை பார்த்த வண்ணம் இருந்தனர். கேசவதேவ், அன்றைய தனது வேலைகளையெல்லாம் ஒதுக்கி வைத்துவிட்டு, அந்த ஏழைப் பெண்ணைத் தூக்கி ரிக்ஷாவில் வைத்து நேரே மருத்துவமனைக்கு அழைத்துச் சென்றார்.

கேசவதேவ் இந்திய அரசின் சாகித்ய அக்காடமி விருதினை 1964–இல் பெற்றார். சோவியத் நாட்டின் 'நேரு பரிசும்' 1970–இல் பெற்றார். 1974–இல் கேரள மாநிலத்தின் சாகித்ய அக்காதெமியின் தலைவராக நியமிக்கப்பட்டார்; இந்தப் பதவியில் அவர் மூன்றாண்டுகள் இருந்து, அக்காதெமியை மிகவும் வலுவுள்ளதாக ஆக்குவதற்குச் சிறப்பாகப் பணியாற்றினார்.

வாழ்க்கையின் இறுதிக்காலக் கட்டம். கேசவதேவ் துன்பத்தில் வருந்தும், தேவைகள் மிகுந்த வயோதிகராக இருந்தார். உடலின் நலிவுதான் அவரை வீழ்த்தியது. யாரோ ஒருவர் குறிப்பிட்டது போல, அவர் கூண்டில் அடைக்கப் பட்டிருந்த சிங்கம் போலவே இருந்தார். கேசவதேவுக்கு அடுத்த தலைமுறையின் நாவலாசிரியரும், திறனாய்வாளருமான கே.சுரேந்திரன் குறிப்பிட்டது போல, "அந்தக் கேசவதேவ், தன் வலக்கரத்தில் எழுதுகோலையும், இடக்கரத்தில் புரட்சி ஒளியையும் ஏந்தியவாறு, கடந்த ஐம்பதாண்டுகளில், கேரள வரலாற்றில் புகழும் பிரகாசமும் மிக்க சுவடுகளைப் பதிய வைத்த அந்தக் கேசவதேவ், கூண்டுச் சிங்கம் போலத்தான் சில ஆண்டுகள் வாழ்ந்தார்."

அரசாங்கம் உதவி நடவடிக்கை என்ற பெயரில் சிற்சில உதவிகளைச் செய்தது. ஆனாலும் கேசவதேவின் தேவைகள் அதிகமாக இருந்தன. எழுத்தாளர்கள் என்றால் வறுமையும் கூடவே இருக்கும் என்று சொல்லுவது போல, கேசவதேவ் இறுதிக்காலத்தில் வறுமையால் துன்பம் மிக அடைந்தார். திருவனந்தபுரம் நகருக்குள் மாடி உடைய ஒரு வீட்டில் வசிக்குமாறு கேசவதேவுக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. சில எழுத்தாளர்களுக்கு என்றே ஒரு விதி இருக்கும் போலும்! துயரம் மிகுந்த வயோதிக வாழ்க்கையில், அந்த நல்ல வீட்டைப் பராமரிக்கும் செலவைக் கூட அவரால் செய்ய முடியவில்லை.

வரலாற்றின் விந்தை மிகுந்த அந்த நாடகத்தின் இறுதிக்காட்சி வந்து சேரும் வரைக்கும், கேசவதேவ் நெடுங் காலம் படுத்த படுக்கையாகவே கிடந்தார். 1983– ஜுலை மாதம் முதல் தேதியன்று மிக அமைதியாக அவர் உயிர் துறந்தார்.

## 2. நாவலாசிரியர்

அந்த ஆசிரியர் பலமாக இரைந்தார்: "வகுப்பறைக்குள் இந்தப் பறவையை எந்தப் பயல் கொண்டு வந்தான்?"

பப்பு உடனே பதிலளித்தான்: "சார், நான்தான்"

"வகுப்பை விட்டு வெளியே போ"

பப்பு அமைதியாக எழுந்தான்; அந்தக் குருவிப் பறவையைக் கையில் பிடித்தவாறு வகுப்பைவிட்டு வெளியேறினான்; பள்ளியின் வராந்தா பகுதியில் வந்து நின்றான்.

"அதிகப்பிரசங்கி! போ அப்பாலே! அந்தப்பக்கம் போ! முற்றத்துக்குப் போ"- ஆசிரியர் உறுமினார்.

அதுவரை அங்கேயே தைரியமாய் நின்றுகொண்டிருந்த பப்பு பள்ளியின் முகப்புப் பகுதிக்கு நடந்து சென்றான்.

"வேறே யார் இங்கே சப்தம் போடுறது?"

வகுப்பில் இருக்கும் மற்ற பையன்கள் பொதுவாக ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். ஆசிரியர் இவ்வாறு சப்த மிட்டபிறகு அவர்களிடமிருந்து சப்தம் ஏதும் வரவில்லை. "எல்லாரும் எழுந்து நில்லு" -ஆசிரியர் உத்தரவிட்டார்.

எல்லோரும் எழுந்து நின்றனர்.

கையில் ஒரு பிரம்பை இறுகப் பிடித்தவாறு அந்தப் பெரிய ஆசிரியர், முன்னால் இருந்த அந்தச் சின்னஞ்சிறிய சிறிசுகளை நோக்கி முன் வந்தார்.

"உன் வலது கையை நீட்டு"

முன்னால் நின்ற பையன் வலதுகையை நீட்டினான்.

"உள்ளங்கையைக் காட்டு"

தன் வலக்கையை முன்னால் நீட்டிக்காட்டிய பையன் தண்டனைக்காகக் காத்திருந்தான். ஆசிரியர் அவனுக்கு இரண்டு அடி கொடுத்தார். அடுத்து நின்ற இரண்டாவது பையனுக்கும் அதே தண்டனை; மூன்றாவது பையனுக்கும் அதே தண்டனை;

அடுத்து நான்காவது பையனின் முறை. ஆசிரியர் திடீரென அப்படியே நின்றுவிட்டார்! நான்காவது நிற்பவன் பண்ணை யாரின் பேரன்!* பண்ணையாரின் பேரப்பையனைப் பார்த்ததும் அந்தக் கோபக்கார, ஒழுக்கசீல ஆசிரியரின் கோபம் உடனே அடங்கிப் போய்விட்டது! பையனின் அருகே மெதுவாகச் சென்று மெல்லிய குரலில் கிசுகிசுத்தார்: "நீயும் சத்தம் போட்டாயா?"

அந்தப்பையனுக்குச் சாமர்த்தியம் போதவில்லை. "ஆமாம்" என்று உடனே ஒப்புக் கொண்டான்.

"இனிமேல் இப்படியெல்லாம் செய்யக்கூடாது; இந்த விஷமக்காரப் பையன்களோடெல்லாம் இனிமேல் சேராதே"

–இப்படி அறிவுரைகளைப் பண்ணையாரின் பேரனாகிய செல்லப் பிள்ளையிடம் உதிர்த்துவிட்டு, அவனது தோள் பட்டையில் அன்போடு தட்டிக் கொடுத்துவிட்டு, அந்த ஆசிரியர் மறுபடியும் ஆக்ரோஷம் கொண்டார். அடுத்த பையனிடம் திரும்பினார். ஏற்கனவே பையன்களுக்குக் கடுமையாக உத்தரவிட்டது போலவே அவனிடம் கையை நீட்டுமாறு உத்தரவிட்டார். அவன் கை நீட்டியதும், இரண்டு அடி கொடுத்தார். அப்படியே ஒவ்வொருவருக்கும் தண்டனை தொடர்ந்தது. திடீரென்று பப்பு விரைந்து வகுப்பறைக்குள்ளே வந்தான்.

"அடிக்காதீங்க! நான் சொல்றேன் அடிக்காதீங்க.."

ஆசிரியர் திடீர் குழப்பமும் பயமும் அடையும்படியாய் பப்பு மேலும் பின்வருமாறு இரைந்தான்: "உங்களுக்குத்தான் சொல்றேன் இந்தப் பையன்கள் யாரையும் நீங்கள் தொடக் கூடாது"

---

* ஏற்கனவே விளக்கியுள்ளபடி, கேசவதேவின் சொந்த அனுபவத்தின்படி, ஆசிரியரால் சலுகை காட்டப்படும் பையன் ஒரு முன்சீப்பின் மகன் ஆவான். கலைப்படைப்பில் திருப்பங்களை – மாற்றங்களை அமைப்பதில் விருப்பமில்லாத கேசவதேவ், இங்கே முன்சீப் என்பதை மாற்றி, பண்ணையார் என்று அமைக்கிறார். வர்க்கம் என்று பார்த்தால், முன்சீப் வர்க்கம் அவ்வளவாகத் தீமை செய்யும் வர்க்கம் அல்ல; பண்ணையார்களே கொடுங்கோன்மை, மிக்கவர்கள். அவர்களது கொடுங்கோன்மை, பல ஆண்டுகள் கழித்து, குடியாட்சிச் சட்டங்களால் முடிவுக்குக் கொண்டு வரப்பட்டன.

பப்பு இரைந்தது ஒரு சிங்கக்குட்டி கர்ஜனை புரிவது போல இருந்தது.

-இது, கேசவதேவ் எழுதிய, ஈடு இணையற்ற படைப்பாகிய "சாக்கடையிலிருந்து" என்ற படைப்பின் முதலாவது காட்சியாகும்.

கேசவதேவ் தீட்டியிருந்த இந்த நிகழ்ச்சி புதுமையாக இருந்தது. இலக்கியம் என்பது மனிதனுடைய வாழ்க்கை சம்பந்தப்பட்டது என்று யாரும் நினைத்துக் கூடப் பார்த்திராத ஒரு மொழியில், இந்தக் காட்சி மிகவும் புதுமையாகவே இருந்தது. இலக்கியம் ஒரு தனித்துவ கௌரவம் உடையது என்றும், அது அரண்மனை வாசிகளான ராஜாக்கள் – ராணிகள் மற்றும் அவர்களைப் போன்றோர் ஆகியோரது வாழ்க்கை பற்றி மட்டுமே சொல்லவேண்டும் என்றும் அப்போது கருதப்பட்டு வந்தது. இவ்வாறு கருதிவந்து மக்களுக்குச் சம்பிரதாயமல்லாத காதல்கதைகளும் கூடச் சொல்லப்பட்டன. சந்து மேனன் அப்படி ஒரு காதல் கதைதான் சொன்னார். அவர் படைத்த ஒரு நாவலில் ஒரு பணக்காரக் குடும்பத்து நாயர் குலத்துப் பெண் இந்துலேகாவும், நாயர் குலத்து இளைஞன் மாதவனும் காதலிப்பதாகத்தான் சொல்லப்பட்டது. இத்தகைய சூழலில், அவர்கள் படிக்க நேர்ந்த கோபம் அடைந்த பள்ளிச் சிறுவன் பற்றிய நாவல், அதற்கு முன் கேள்விப்பட்டிராத நாவலாகவே இருந்தது.

வைக்கம் முகமது பஷீர் எழுதிய 'பாலியகாலத்துத் தோழி' என்ற நாவல் வெளிவந்த சமகாலத்தில்தான் கேசவதேவின் "சாக்கடையிலிருந்து' நாவலும் வெளிவந்தது. கேசவதேவின் இந்த நாவல் வாசகர்களிடம் ஒரு புதிய அதிர்ச்சி உணர்ச்சியையே தந்திருக்கவேண்டும். மரபுக்கு மாறுப்பட்ட, ஒரு புதிய பாணியில், ஒரு புதிய வகையான கதாநாயகனைக்* கொண்டு, ஒரு புதியவகை கதையைச் சொல்லுகிற 'சாக்கடையிலிருந்து' என்ற கேசவதேவின் இந்த நாவல், சொல்லும் மொழி நடையிலும் புதுமையாக அமைந்திருந்தது.

'சாக்கடையிலிருந்து' என்னும் நாவலின் கதை ஒரு சிறுவனைப் பற்றியது; பள்ளிக்கூடத்தில் வகுப்பு ஆசிரியருடன்

---

* "இந்த நாவல் முதன்முறையாகப் பாட்டாளி வர்க்கக் கதாநாயகன் ஒருவனை மலையாள நாவலில் அறிமுகம் செய்துள்ளது"-பேராசிரியர் எஸ். குப்தன் நாயர் (மலையாள நாவல் வளர்ச்சி: இலக்கிய ஆய்வுக்கருத்தரங்கு)

ஏற்பட்ட மோதலின் விளைவாகப் பள்ளிக்கூடத்தை விட்டு வெளியேறிய பையன் பற்றியது. அந்தக் கொடூரமான ஆசிரியர், அவனை வகுப்பிலிருந்து வெளியே அனுப்பிவிட்டார். ஆசிரியரது செயலை எதிர்ப்பதற்கு அவன், "அவமதிப்பு எதிர்ப்பு இயக்கம்" ஒன்றை உருவாக்க முயன்றான். அவனது முயற்சிக்கு மக்களிடமிருந்து ஆதரவு கிடைக்கவில்லை என்று தெரிந்ததும் அவனும் பள்ளிக்கூடத்திலிருந்தே விலகிப்போய்விட்டான்.

பள்ளிக்கூடம் இருந்த ஊரிலிருந்து கிளம்பி வெகுதொலைவு போய்விட்ட அந்தப் பையன், அருகில் இருந்த நகரத்தில் ஒரு 'கூலி'யாக ஆகிவிட்டான். தலைச்சுமை தூக்கும் கூலி ஆளாக வேலை பார்த்த அவன், சிறிது காலம் கழிந்தபிறகு, பீடித் தொழிலாளி ஆனான்; அதன்பிறகு சோடா தயாரிக்கும் பிரிவில் உதவியாளராக அமர்ந்தான்; பின்னர் ஒரு நூற்பாலையில் தொழிலாளியாகச் சேர்ந்தான். அவன் இவ்வாறு எங்கே இருந்தாலும், அநீதியையும், அடக்கு முறையையும் எதிர்ப்பதில் முதல் ஆளாகவே இருந்தான்.

நூற்பாலையில், மேலாளர்கள் செய்யும் அட்டூழியங்களைக் கண்டு சும்மா இருந்து, அவர்களோடு இசைந்துபோக அவனால் முடியவில்லை. எதிர்வர்க்க வில்லன்களோடு நடந்த ஓர் அமளியில், அவன் கிளர்ச்சி செய்து கத்தியை உருவிக் காட்டி விடுகிறான். மாநில அரசாங்க அடக்கு முறைக் கருவியும், முதலாளியும் ஒன்றாகக் கூட்டுச் சேர்ந்து கொண்டு அவனை அடக்கிவிடுகின்றனர்; அவனை ஒரு கிரிமினல் வழக்கில் சம்பந்தப்படுத்தி, சிறைக்கம்பிகளுக்குள் தள்ளி, ஒரு குறிப்பிட்ட காலத்திற்குத் தண்டனையும் அளித்து, அவன் உள்ளுக்குள் கிடந்து அழுகிப்போகும் நிலையை உருவாக்கிவிடுகின்றனர்.

பலமாதங்களுக்குப் பிறகு, அந்த ஏழை மனிதன் சிறையிலிருந்து விடுதலைபெற்று, வெளி உலகத்திற்கு வருகிறான்; வாழ்க்கை நடத்துவதற்காக, ரிக்ஷாக்காரனாக மாறி ரிக்ஷா இழுக்கிறான். இவன் ஒரு வித்தியாசமான ரிக்ஷாக்காரனாக இருக்கிறான்; இவனிடம் கண்ணியம் இருக்கிறது; நேர்மை இருக்கிறது;ஆனால் ஜனங்களோ அவனை முரடன் என்றே கருதுகின்றனர்.

இந்த நிலையில் ஒருநாள் பப்புவின் ரிக்ஷா சிறுமி ஒருத்தியின் மீது மோதிவிடுகிறது. அந்தச் சிறுமி சிறிய பாத்திரம்

ஒன்றில் கொஞ்சம் அரிசியும், கொஞ்சம் மளிகைச் சாமான்களும் எடுத்துவந்தாள். அந்தத் துரதிர்ஷ்டச் சிறுமி, ரிக்ஷா மோதியதால், சாக்கடைக்குள் விழுந்துவிட்டாள். உடனே அவள் அழத் தொடங்கினாள். அவள் கொண்டு வந்த சாமான்கள் அனைத்தும் கீழே கொட்டிச் சிதறிவிட்டன. இறுகிப் போய்க் கிடந்த அந்தக் கிளர்ச்சிக்காரனின் வாழ்க்கையில் இந்த நிகழ்ச்சி ஒரு திருப்புமையமாக அமைந்துவிட்டது. அந்தச் சிறுமிக்காக அவன் மிகவும் மனம் வருந்தி, அவளுக்காகச் சிறிது அரிசியும், பிற சாமான்களும் வாங்கிக் கொண்டு வந்து கொடுத்தான். அவன் வாங்கிக் கொடுத்த பொருள்களின் அளவு, அவள் கீழே கொட்டியதைவிடவும் அதிகமாகவே இருந்தது. அவனது செயல்களைக்கண்டு நன்றிகூர்ந்த அந்தச் சிறுமி, அவனைத்தன் சிறுகுடிசைக்கு வருமாறும், அங்கே இருக்கும் தன் தாயைச் சந்திக்குமாறும் அழைத்தாள். பப்பு ஒப்புக்கொண்டு அவளுடன் குடிசைக்குப் புறப்பட்டான். குடிசையில் நிகழ்ந்த அந்தச் சந்திப்பு மிகவும் முக்கியமான சந்திப்பாகிவிட்டது! குடிசையில் துன்பத்தோடு வாழ்ந்து கொண்டிருந்த விதவைத் தாயாரையும் அவளது மகளாகிய அந்தச் சிறுமியையும் பப்பு மிகவும் விரும்பினான். அந்த ஏழைச் சிறுமியின் பாதுகாவலனாகத் தன்னைப் பாவித்துக் கொண்டான். இதுநாள் வரை, தனக்கென்று குடியிருக்கத் தனி இடமோ, தன்னைக் கவனிப்பதற்குரிய உறவினர்களோ இல்லாதிருந்த பப்பு, இப்போது அந்தச் சிறுமியின் இடத்தில்தான் இருப்பதாகப் பாவித்துக் கொண்டான். கவலை ஏதுமின்றி ரிக்ஷா இழுத்துத் திரிந்த இறுக்கமான அவன், ஒரு மனிதனாக மாறியதும், மாறிய பிறகு, ஓர் அழகிய பெண்மையின் உறவுக்காக ஏங்கியதும், கண நேரத்தில் நிகழ்ந்த உடனடி நிகழ்ச்சிகளாக அமைந்துவிட்டன. காலமானது மிகச்சாதுர்யமாக லட்சுமியின் தாயாரை பப்புவின் கைகளுக்குள் விழச்செய்துவிட்டது! பப்பு இப்போது தன் வளர்ப்பு மகள் லட்சுமிக்காகவும், அவளது தாயாருக்காகவும் ஒரு தேனீயைப் போலச் சுறுசுறுப்பாக உழைக்கத் தொடங்கினான்; கூடுதலாகச் சம்பாதிக்க முற்பட்டான். வீட்டையும், பள்ளிக்குச் செல்லும் தன் செல்லமகள் லட்சுமியையும், கூடுமான அளவு வசதியாக வைத்துக் கொள்ள பப்பு மிகவும் கடுமையாகப் பாடுபட்டான்.

அந்தச் சிறிய பெண் இப்போது வளர்ந்து ஆழகிய நங்கையாகிவிட்டாள். அந்தப் பகுதியில் வாழ்ந்த ஒரு பணக்கார

இளைஞனின் காதல் அன்பையும் பெற்று விட்டாள். அந்த இளைஞன் லட்சுமியைத் திருமணம் செய்து கொள்ள விரும்பினான்; லட்சுமியின் தாயாரிடம் தன்விருப்பத்தைத் தெரிவித்தான். தன் மகளுக்கு நல்ல இடத்தில் சுகமாகத் திருமணம் நிகழ இருப்பதை அறிந்து அந்தத்தாய் மிகவும் மகிழ்ச்சியடைந்து, திருமணத்திற்கு ஒப்புதல் அளிக்கிறாள். திருமணம் நடந்து முடிந்த பிறகு, லெட்சுமி, தன் தாயாருடன், கணவனுடைய பங்களாவுக்குக் குடிபோய்விட்டாள்!

அவர்களோடு சேர்ந்திருப்பதற்குத் தனக்குத் தகுதியில்லை என்று பப்பு நினைத்தான்; அந்த இடத்திலிருந்து நீங்கி நடந்து எங்கோ சூனியத்தில் மறைவது போல மறைந்தான்! இருட்டுக்குள் மறையும் போது தொடர்ந்து இருமல்வந்தது. ஆனால், பப்புவால் "சாக்கடையிலிருந்து" எடுத்து வளர்க்கப்பட்ட அந்தச் சிறுமியோ, இந்தநேரம், திருமணப் பள்ளியறையில், தன் காதலனின் கைகளில் ஒரு பெண்ணாக மலர்ந்து கொண்டிருந்தாள்.

தாழ்ந்த மக்கள் பற்றிய இந்த நாவல், பொதுவான மனிதன் ஒருவனின் பெருந்தன்மையை எடுத்துச் சொல்லும் ஒரு வெளிப்பாடுதானே! சாதாரண மனிதர்களிலிருந்து ஒரு கதாநாயகன் பிரகாசமான தோற்றத்துடன் இந்த நாவலில் படைக்கப்பட்டிருப்பது, அந்த நாட்களில் பெரிய பரபரப்பையும், கிளர்ச்சியுணர்வையும் ஏற்படுத்தியது. அடுத்தடுத்து வந்த ஆண்டுகளில், மலையாளப் புதின இலக்கியத்தில், இது ஒரு புதிய திசைப் போக்கையே உருவாக்கிவிட்டது.

இந்த நாவலின் விளைவாக, மலையாள இலக்கியத்தில், இயல்பாகவும், பெரிய அளவிலும், உணர்ச்சிமிக்க கவிதையைப் போன்ற குறுநாவல்கள் எழுந்தன. இது ஓர் அதிசயமல்ல. சமுதாயத்தின் எரிக்கும் பிரச்சனைகளோடு போராடிக் கொண்டிருந்த நிலையிலும், நூலின் ஆசிரியரான கேசவதேவுக்கு இருந்த மிக ஆழமான விழிப்புணர்ச்சி ஒவ்வொருவரையும் பாதித்திருக்கவேண்டும். சமரசப்பட்டுப்போகாத குணம் உடைய ஒரு கதாநாயகனைக் கொண்ட இந்தச் சிறு நாவலில் (108 - பக்கங்கள்) சமுதாயத்துக்குப் புத்துயிர் அளிக்கும் ஒரு கொள்கைத் திட்டம் அறிக்கை போலப் பிரகடனம் செய்யப்பட்டுள்ளது என்ற விஷயத்தைப் பலரும் கண்டு கொண்டனர். எல்லாவற்றுக்கும் மேலாக, இந்த நாவல் நிகழ்காலத்தின் வேதனையை வெளிப்படுத்தும் ஒரு படைப்பாகும்.

நூலாசிரியர் கேசவதேவ், ஏழை ஜனங்களின் பெருமைகளைப் பேச முனைந்த அதே வேளையில், அவர்களின் பலவீனங்களையும் பார்த்தார். அவர்களுடைய குறைபாடுகளைச் சுட்டிக்காட்ட வேண்டிய சந்தர்ப்பம் வரும்போது கேசவதேவ் அதனை மிகவும் விழிப்புணர்ச்சியோடு செய்தார்.* வேறு வார்த்தைகளில் சொல்வதானால், புரட்சிகரப் பாட்டாளி வர்க்கம் பற்றிய இந்த நாவலானது, வேறு பிற இலக்கியப் படைப்புக்களைப் போலவே, வாழ்க்கை பற்றிய மறை பொருள் நிரம்பியதாகவும் அமைந்துள்ளது. கன்னி முகமும், சிங்க உடலும், இறக்கைகளும் கொண்ட ஸ்பினிக்ஸ் விலங்கு ஆழமான அர்த்தமும், வியப்பூட்டும் ஆதர்சமும் தருவது போல, இந்த நாவலும் தரக்கூடியதாக அமைந்துள்ளது. வரலாற்று ரீதியாகவும் இந்த நாவல் மிகுந்த முக்கியத்தும் பெறுகிறது; கலைத் தன்மையில் தனிச் சிறப்புப் பெறுகிறது; வசீகரமானது; கதை சொல்வதில் மேதைமை மிகுந்த ஒருவரது மேதைமை மிகுந்த சிறந்த படைப்பு இது.

கேசவதேவ் என்னும் படைப்பாளியின் கலாதேவதை வேறு யாருமில்லை; 'அக்னிதேவன்' தான்என்னும் கருத்தை இந்த நாவல் உருவாக்கிவிடுகிறது. பப்புவின் பிள்ளைப் பருவ காலத்துத் துணிகரச் செயல்களை வியப்பளிக்கும் வகையில் சித்திரிக்கும் இந்த நாவலின் பகுதிகள், மார்க்ட்வெயினின் கலைத் திறத்துப் பாணியிலும், கேலி உணர்ச்சியிலும் அமைந்து உள்ளன.

---

* மலையாளத்தில், காலஞ்சென்ற பேராசிரியர் தாயத்து சங்கரன் அக்கறை மிக்க இடது சாரித் திறனாய்வாளர். கேசவதேவ் பற்றிக் குறிப்பிடும் போதெல்லாம், தனது பிற்கால வாழ்க்கையின் போது, பாட்டாளி வர்க்கத்தினரையும், ஏழைநடுத்தரவர்க்கத்தினரையும் கேசவதேவ் பழிதூற்றி எழுதினார் என்று குறிப்பிடுகின்றார். கேசவதேவைப் பொறுத்தவரையில் ஒரு வேடிக்கையான விஷயம் என்ன என்றால், இப்படிப்பட்ட அதிருப்தி யாளர்களின் மனத்தை வருத்துகின்ற சூழ்நிலைகளால்தான் அவர் நெடுகிலும் உயிரூட்டப்பட்டு வந்துள்ளார். கேசவதேவ் பாட்டாளிகளை நேசித்தார்; பெரிதும் விரும்பினார்; பாட்டாளிகளது உயர்வுக்காகப் பல ஆண்டுகள் முழுவதும் மிகவும் துயரப்பட்டு உழைத்தார். சமுதாயத்திற்கு நலம் பல செய்த தகழி, பஷீர் ஆகிய இருவரும் ஆற்றியதை விடவும் மேலாகவே எவ்விதச்சலனமும் இன்றிக் கேசவதேவ் ஆற்றியுள்ளார். பஷீராவது, தன் 14–ஆம் வயதில் காந்தியடிகளைத் தொட்டு அதன் மூலமாக உணர்வு பெற்றார்; கேசவதேவ் அப்படி இல்லை; தவறே இல்லாத பஷீரைக் காட்டிலும், பின் பற்ற முடியாத தகழியைக் காட்டிலும், தன் சகமனிதர்களுக்குத் தொண்டு செய்யும் பணியை மிக நேரடியாகவே செய்தார்.

நாவலின் நகைச் சுவைப் பகுதிகளைத் தொடர்ந்து வரும் சிறப்பு மிக்க அவலக் கூற்றுக் குறிப்புக்கள், நாவலின் ஒருமைத் தன்மைக்கு ஒத்திசைந்தே அமைந்துள்ளன. சாத்தியமற்றது எனக் கருதப்படும் அம்சங்கள் கூட ஒருங்கே இணைகின்றன என்ற சிறப்புத்தான் இந்த நாவலின் கலாபூர்வமான விந்தையாகும். இருவேறு சிந்தனைக் குழுவினரும், ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுக்காத சரிசமமான உரிமையோடு, 'சாக்கடையிலிருந்து' நாவலை ஒரு 'துணிகரமான' படைப்பு என்று ஏற்றுக் கொள்கின்றனர். பிரத்தியட்ச கால உணர்விலிருந்து எழுந்த, மானுடத்தின் தவிர்க்க முடியாத வேதனையின் வெளிப்பாடுதான் இந்தக் கதை என்பதையும் இரு சாராரும் ஏற்றுக் கொள்கின்றனர்.

'சாக்கடையிலிருந்து' நாவலுக்குப் பிறகு, அடுத்து இன்னொரு நாவலைத் தருவதற்குக் கேசவதேவுக்கு ஏழு அல்லது எட்டு ஆண்டுகள் ஆயின. அந்த நாவலும் குறிப்பிடத் தக்கதாக, உள்ளபடியே அவரது மேதமைப் படைப்பாகவே இருந்தது. மேதைமைப் படைப்புக்கள் விரைந்து வரவில்லையே என்று யாரும் கேசவதேவைக் குறை கூறிவிட முடியாது. கேசவதேவ் அந்தக் காலக் கட்டத்தில் பல்வேறு புதிய பணிகளில் ஈடுபட்டு வந்தார். அவ்வாறு அவர் ஈடுபட்ட பணிகளுள், சிறுகதைகளில் பல சோதனைகளைச் செய்து பார்ப்பதும் ஒன்றாக இருந்தது.

1945-இல் வெளிவந்த 'நடிகை' என்னும் நாவலில், கேசவதேவ் நடிகைகள் உலகம் பற்றியும், நாடக மேலாளர்கள் பற்றியுமான ஓர் ஆய்வையே அறிக்கையாகத் தந்திருந்தார். இந்த நாவல், "நான் குற்றம் சாட்டுகிறேன்" என்ற பாணியில் அமைந்த துணிகரமான முயற்சியாகும். நாடக மேடை மனிதர்களைப் பற்றிய 'எக்ஸ்ரே' போல இது அமைந்திருந்தது. தொழிலதிபர்கள் பலர் தங்களது பணத்தை நாடகத் துறையில் விரும்பி முதலீடு செய்தனர்; பணம் பண்ணுதல், ஐம்புலன்களுக்கு இன்பம் தேடுதல், என்ற புதிய வியாபாரத் துறை தோன்றியது; அதில் காணப்படும் தீய ஒழுக்கங்களை, லஞ்ச ஊழலை இந்த நாவல் மிகக் கடுமையாகக் கண்டனம் செய்யும் முறையில் அமைந்தது.

கேசவதேவின் 'நடிகை' நாவல் வடிகுட்டையாய் கிடக்கும் சாக்கடைப் பள்ளம் பற்றிய, அதிர்ச்சி தரத்தக்க விவரங்களைத் தருகிறது. பவித்ரன்-மீனா என்ற இருவரும், ஆண், பெண் ஆகிய மனித குலத்தின் மரியாதையை உயர்த்திப்

*பிடிப்பதற்காகச் செய்யும் சாகச முயற்சிகளை விவரிக்கிறது. அந்தப் பணியில் இருவரும் தங்கள் உயிரையே தியாகம் செய்து விடுகின்றனர். நாவலின் பல பகுதிகள் மிக அழகிய வண்ணக் கவிதைப் புள்ளிகள் போல நேர்த்தியாக அமைந்துள்ளன. உதாரணமாக, கிராமத்துத் துக்க காரியங்கள் பார்க்கிற பாத்திரமாகிய பாட்டுப்பாடும் இளைஞன்; பிணங்களை ஏற்றிக் கொண்டு போகும் எருமை வண்டி; வண்டியைச் செலுத்தும் போது அவன் பாடும் பாட்டு; அப்போது அவன் கொள்ளும் உணர்வு; - இவ்வாறு அமையும் வருணனைச் சித்திரங்களைக் குறிப்பிடலாம். இவ்வாறு, இத்தனை இயற்கையான அழகுடன் அமைந்த அந்தக் கதை 'ஒரு நாவல்' என்ற தகுதியைப் பெற்றதாகச் சொல்ல முடியவில்லை.*

*கேசவதேவ் எழுதிய 'ஒரு ராத்திரி' (1946) என்ற படைப்பை 'நாவல்' என்று அவரே வாதிட்டார். அந்தக் காலக் கட்டத்தில் அவர் எழுதிய பல சுவையான சிறுகதைகளுள் ஒன்றுதான் அது. அது சுருக்கமான, திடமான படைப்பு. இப்படைப்பில் சுதந்திரப் போராட்ட வீரர் ஒருவரின் வாழ்க்கையில் ஓர் இரவில் சில மணி நேரங்கள் விவரிக்கப் படுகின்றன. அந்த அடிப்படையில், திடீர் திருப்பம் உடைய ஒரு நாடகமே இந்த நாவலுக்குள் இருக்கிறது. நீயா? நானா? என்ற பலப் பரீட்சையில் சுதந்திரப் போராட்ட வீரர் தாக்குப் பிடித்து விடுகிறாரா? அல்லது அவரது பகைவர்கள் அவரைப் பிடித்துத் தீர்த்துக் கட்டி வெற்றி அடைந்து விடுவார்களா? திடீர் திருப்பம் நிறைந்த இந்தக் கதையில், கேசவதேவ், அவரது பிற படைப்புக்களில் உள்ளது போலன்றி, மிகுந்த துக்கத்தோடு பெருமூச்செறிகின்றார்: " இந்த இயற்கைதான் எவ்வளவு இரக்க குணம் உடையது! ஆனால், அடக்குபவன் - அடக்கப்படுபவன்; சுரண்டுபவன் - சுரண்டப்படுபவன் என்ற இரு சாராருக்கு இடையில் ஏற்படும் சண்டையை இந்த மனிதன் தான் போடுகிறான்; மண்ணுலகை அவன் நரகம் ஆக்கிவிடுகிறான்! மனிதன் ஏன் இதைச் செய்ய வேண்டும்?" "உளவியல் பூர்வமாய் அமைந்துள்ள இந்தப் பெருமூச்செறிந்த வெளிப்பாடு, மனத்தைத் தொடுவதாய் அமைந்துள்ளது. வெளிவந்து பல ஆண்டுகள் கழிந்துவிட்ட பிறகு, இன்றும், இந்த நாவலின் ஒரு சிறுபகுதி கூடத் தன் அழகையும் பொருத்தத்தையும் இழந்துவிட வில்லை!"*

*'ஒரு ராத்தி' யைத் தொடர்ந்து அடுத்து வெளிவந்தது*

'உலக்கை'. கேசவதேவ், அவரது ரசிகர்களால் 'பப்புவை உருவாக்கியவர்'* என்று அழைக்கப்படுபவர். 'பப்புவின் தந்தை' என்னும் பட்டத்தை மகிழ்ச்சியோடு உரிமையாக்கிக் கொண்டவர். தன்மைக் கூற்று நிலை வருணனைக் கதைகளிலும், சில உரைகளிலும் கேசவதேவ் என்னும் படைப்பாளி, அற்புத நவிற்சி உணர்வுகளுக்கு ஆதரவு தராதவராகவே இருந்தார். 'உலக்கை' அவ்வாறில்லை; அற்புத நவிற்சியை மிகக் கூடுதலாகக் கொண்ட படைப்பாக இது அமைகிறது.

இந்தக் கதை நம்ப முடியாத, புராதன காலத்து நிலப்பிரபுத்துவ சமூக நிலைமைக்கு நம்மை அழைத்துச் செல்கிறது. அங்கே நிலவும் நில உடைமையாளனாகிய பணக் காரன், இந்தக் காலத்து நாஜிகள் செய்கின்ற குற்றங்கள் போலப் பல குற்றங்களைச் செய்கிறான்; சரியாகச் சொல்வதானால் இவையெல்லாம் இடைக்காலத்து நிகழ்ச்சிகள் அல்ல; கேசவதேவ் அவர் காலத்து நிகழ்ச்சிகளையே இங்கு அம்பலப்படுத்துகிறார். நிலப்பிரபுவின் குண்டர்களால் தாக்கப்பட்டுக் குஞ்ஞய்யப்பன் மரணமடைகிறான்; அவனுடைய மகனைக் குண்டர்கள் சித்ரவதை செய்கிறார்கள். போலீஸ்காரர்கள் தங்களால் முடிந்த அளவுக்குக் கொடுமைப் படுத்தும் மனப்போக்கு உடையவர்களாக இருக்கிறார்கள். உன்னூளி என்ற பெண் மட்டும், தனக்குரிய கௌரவத்தோடு, தனது துன்பங்களையெல்லாம் எதிர்த்து நிற்கிறாள்.

இந்த நாவலின் இடம் பெற்றுள்ள பல்வேறு வகை 'அற்புத நவிற்சி' அம்சமானது இந்தக் கதையைச் சிதைத்து விடுகிறது. இந்தப் படைப்பு, கலை நேர்த்தியில் குறைபாடு உடையதாக இருக்கலாம்; ஆனால் இந்தப் படைப்பு, அந்தக் காலக்கட்டத்தின், இதயமற்ற நிலப்பிரபுத்துத்தின் மீது, மிகச் சரியாகப் படைக்கப் பட்ட சமுதாய விமர்சனம், ஒரு கண்டனம் என்பதை ஏற்றுக் கொண்டே ஆகவேண்டும். தனது சமகாலச் சமுதாயத்தை மானுடப்படுத்துவதற்குக் கேசவதேவ் தொடுத்த பல புனிதப் போர்களுள் இதுவும் ஒன்றாகும். இத்தகைய கதைகள்

---

* "பப்பு மானுடத்தை விடுவிக்கிறவன்; அவன் எப்போதும் அடைந்திராத புகழின் உச்சிக்கு மனிதனை இட்டுச் செல்பவன்; அவன் நமது கற்பனைப் படைப்பு உலகின் முனிவன்; பெரிய ரிஷி"

– தான் எழுதிய மலையாள நாவல் வரலாறு என்னும் நூலில் டாக்டர் கே.எம். தாரகன் இவ்வாறு கூறுகிறார்.

சமுதாய, அரசியல் வரலாற்றில் பெருமைக்குரிய அடையாளங்களாக நினைக்கப்படுகின்றன.

கேசவதேவின் அடுத்த படைப்பு 'பைத்திய வீடு' (1949) என்பது. இது அவரது முதல்தரமான படைப்புக்களுள் ஒன்று. மானுடத்திற்காகப் போராடும் பெரிய போராட்டக்காரரான கேசவதேவ், தனது நாவலான 'சாக்கடையிலிருந்து' என்னும் படைப்பின் மூலம், தான் வாழ்ந்த சமுதாயத்தின் வாழ்க்கையைச் சாக்கடையிலிருந்து மீட்டுத் தூக்கிவிட்டிருந்த அந்த வேளையில், ஒரு புதிய இந்தியாவைப் பற்றிய தனது தொலைநோக்குக் கருத்தை, ஒரு சாய்கோணத்தில் வைத்து, 'பைத்திய வீடு' என்னும் இந்த நாவலின் மூலம் வழங்குகின்றார். இந்த நாவலின் கதை, இந்திய தேசிய வரலாற்றில், பிரிவினை நிகழ்ந்த காலத்தில் ஓர் அழிவு மிக்க சோகத்தை விவரிக்கிறது. அகண்ட பாரதம் என்ற கனவு, ஜனநாயக – சமத்துவ இந்தியா என்ற கனவு ஆகியவை, இந்த நாவலின் இதயத் துடிப்பாக அமைகின்றன. இந்த ஒரு அடிப்படையின் காரணத்துக்காகவே, இந்த நாவல் ஒவ்வொரு இந்தியனாலும் போற்றி மனத்தில் வைத்துக் கொள்ளப்படும்.

'சாக்கடையிலிருந்து' நாவலில் அமைந்துள்ள தொடக்கம், மிகவும் வியப்பூட்டும் தொடக்கம்; அது ஒரு கலையம்சம் பொருந்திய அற்புதம்; அந்த நாவலின் முதலாவது அத்தியாயத்தில் கிடைக்கும் அதிர்ச்சி, அச்சுக் குலையாமல், இறுதி வரை நீடித்து வரும். ஆனால், 'பைத்தியவீடு' நாவலில் இவ்வாறு இல்லை. இதில் மிக அமைதியான தொடக்கமே அமைந் துள்ளது. இன்னும் சொல்லப் போனால், மிகவும் தணிந்து போன தொடக்கம்; அப்போது போர்க்கால நேரம்; கேரளாவின் தூங்கி வழியும் ஒரு கிராமத்தின் ஜனங்கள், போர்க்கால நிலவரங்கள் பற்றி அறிந்து கொள்ளுவதற்குத் தங்களை ஆயத்தப் படுத்திக் கொள்ளுகிறார்கள். உள்ளூர் தேநீர்க் கடைக்கு முன்பு ஒன்று கூடித் தங்களுக்குள் கலந்து பேசத் தொடங்குகிறார்கள். ஒவ்வொரு நாள் காலையிலும் கூடியிருந்து கேட்பவர்களுக்கு அப்து பத்திரிகையை வாய்விட்டு உரக்கப் படித்துச் சொல்வான். வாடிக்கையாளர்கள் செய்தி கேட்பதற்காகவும் கூடுவார்கள்; பின்னர்தேநீர் கேட்டு வாங்கி அருந்துவார்கள். கடைக்காரன் இதை ஒரு லாபகரமான ஏற்பாடு என்று கருதினான். எனவே செய்திவாசிப்பவனை கடைக்காரன் சுவையான தேநீரும், பிற பண்டங்களும் கொடுத்துக் கவனித்துக் கொள்ளுவான். அந்தக் கிராமத்தின் அரட்டை அரங்கமும்,

தொலைதூரத்தில் நடக்கும் போர் பற்றிய நிகழ்ச்சிகள் பற்றிய ஊக உரைகளும் இவ்வாறு தான் தொடங்கும்.

அப்து வாசித்துச் சுற்றிச் சுற்றி வந்த செய்தி ஹிட்லரைப் பற்றியதாக இருந்தது. ஜெர்மானியர்களுக்கும் பிரிட்டிஷாருக்கும் இடையில் நடந்து வந்த அந்தப் போர் கேட்கக் கேட்கப் பெரிய போர்க்களமாக அவர்களுக்குப் பட்டது. அப்துவுக்கு ஒரு பெரிய வீரம் மிகுந்த தலைவராகவே ஹிட்லர் தோன்றினான். போரில் பிரிட்டிஷ்காரர்கள் தோல்வி அடையவேண்டும் என்று அப்து விரும்பினான்; வேறு சில ஹிட்லர் ஆதரவாளர்களும் அவ்வாறே விரும்பினர். கொஞ்சம் வசதி படைத்த உள்ளூர்த் தலைவர் கோவிந்த பிள்ளை அப்து கருத்தை ஆதரித்தார். அந்தக் கிராமத்தின் வயது முதிர்ந்த பெரியவர் சங்கர குறுப்பு, விவசாயியான ஔசேப்பு, மரவல்லிக்கிழங்கு விற்கும் பப்பு, ஆகியோர் சேர்ந்து மிகவும் உற்சாகமாகப் பிரிட்டிஷாரை ஆதரித்தார்கள்; பிரிட்டிஷார் வெற்றி பெறவேண்டும் என்று எதிர்பார்த்தார்கள்.

கருத்து எதுவாக இருந்தாலும், ஒவ்வொருவரும் பேசும் போதும், அவர் கருத்தை, கடைக்கார நீலகண்ட பிள்ளை ஆதரித்து விடுவார். அவ்வாறு ஆதரிப்பதற்கு ஒரு நிபந்தனை. பேசுபவர் கடன் சொல்லாமல், காசு கொடுத்து, ஒரு தேநீர் 'ஆர்டர்' கொடுக்க வேண்டும். அப்படிக் கொடுத்தால், அவர் கருத்தை நீலகண்டப்பிள்ளை ஆதரிப்பார்.

இந்தக் காட்சிகள் அனைத்தும் நாவலில் அரிய முறையில், அறிவுபூர்வமான முறையில், பின்னப்பட்டுள்ளன. நாவலின் முற்பகுதி அத்தியாயங்களில் வரும் வருணனைகளைப் படிக்கும் போது, மகிழ்ச்சியும் குதூகலமும் நிறைந்த குடியா னவனின் வாழ்க்கைக் காட்சிகள், மனிதர்கள் இணைந்து கூடி நிற்கும் உற்சாகங்கள் ஆகியவற்றுக்கு இடையில் ஆனந்த நடையிடும் அனுபவத்தை வாசகர் ஒருவர் உணர முடியும்.

அப்துவைப் பொறுத்தவரையில், ஓர் இரங்கத்தக்க நிகழ்ச்சி என்ன என்றால், காலம் செல்லச் செல்ல, அவனது உணர்ச்சிகளுக்கு அவனே ஆட்பட்டுப் போவது தான். சிரமம் இல்லாத,பொழுது போக்கு நிகழ்ச்சியாக, ஆரம்பிக்கப்பட்ட, பத்திரிகை படித்துச் சொல்லும் பழக்கமானது, முதல் வேலையாக அவனை ஆக்கிரமித்துக் கொண்டது. அவன் மன உறுதியும் பண்பாடும் மிக்கவன். பொழுதுபோக்கு மிக விரைவில் அவனது

தனித்த உணர்வாகவே ஆகிவிட்டது. நம்பிக்கை, ஆர்வம் அனைத்தும் மதத்தின் அடிப்படையில் தான் என்று கருதி முதலும் முடிவும் அதுவாகவே அவன் ஆகிவிட்டான்.

அப்து இவ்வாறு மதநோக்கங்களில் இழுக்கப்பட்டது, யாரோ ஒரு மதவெறி பிடித்த மனிதனால் அல்ல; ஒரு முஸ்லீமால் அல்ல; அப்துவின் தந்தை நல்ல சம்பாத்தியமுடைய தொழில் புரிபவராகவே இருந்தார். ஆனால் திடீரென்று ஏழையாகிப் போய் மனமுடைந்து இறந்து போனார். அப்பா மீது அம்மா ஒரு வழக்கும் கூடத் தொடர்ந்தாள். தங்கை, மைத்துனன், ஆகியோரைச் சார்ந்து அவனால் இருக்க முடியவில்லை; எனவே அவர்களோடு இருக்க மறுத்துவிட்டுத் தன் குடிசைக்குள்ளே தன்னந்தனியாக அடைந்து கிடந்தான்.

அதன் பிறகு தான், அந்தக் கிறித்தவர், பக்கத்து வீட்டுக்காரர் வந்தார். அவர் ஒரு விவசாயி; பெயர் யூசுப் என்பது. அப்து தன் பழைய நண்பரின் மகன் என்பதைக் கண்டு பிடித்து, அவனது மனம்போனபோக்கு வாழ்க்கையையும் அறிந்து கொண்டார். வயது முதிர்ந்தவரும், அப்துவின் மீது நல்லெண்ணம் கொண்டவருமான அவர், துயரமடைந்துள்ள இளைஞனை வெளியே அழைத்து வந்தார். ஒரு 'கப்' தேநீர் அருந்தலாம் என்று அப்துவை அவர்தான் நீலகண்ட பிள்ளையின் கடைக்கு அழைத்து வந்தார்.

நீலகண்ட பிள்ளை ஒரு பத்திரிகையை எடுத்து யூசப்புவிடம் கொடுத்துப் படிக்குமாறு கேட்டுக் கொண்டார். யூசப் உடனே ஒப்புக் கொண்டார்; ஆனால் அவரால் சரியாகப் படிக்க முடியவில்லை; திக்கித் திக்கிப் படித்தார். கூடியிருந்தவர்களுக்கு அவரது திக்குவாய் வாசிப்பு மகிழ்ச்சி தரவில்லை. பக்கத்திலிருந்த யாரோ ஓர் ஆள், அருகில் இருக்கும் இளைஞனான அப்து படிக்க முயற்சிக்கலாமே என்று யோசனை சொன்னான். அங்கிருந்தவர்கள் மகிழ்ச்சியடையும் அளவுக்குத் தன்னால் வாசிக்க முடியும் என்று அப்துவுக்கு முதலில் நம்பிக்கைப் படவில்லை. ஆனால் அவர்கள் மகிழ்ச்சி அடையுமாறு வாசித்துக் காண்பித்து விட்டான். தேநீர்கடையில் பொழுதுபோக்காக, அப்து பத்திரிகை படிக்க வந்த கதை இது தான். அதன் பிறகு, மிகவிரைவில், பத்திரிகை வாசிப்பில் அப்து முதன்மையானவனாக மாறிவிட்டான். அப்துவின் தீவிரமான ஈடுபாட்டைப் பார்த்துச் சிலர் விரும்பினார்கள்; சிலர் வெறுத்தார்கள்.

நாட்கள் போகப்போக, உலக யுத்தம் பற்றிய செய்திகள் மீது ஆர்வம் குறைந்து போயிற்று. குண்டுகள் வீசுவதும், பாதுகாத்துக் கொள்வதும் ஆகிய செய்திகள் அன்றாட நிகழ்ச்சிகளாக ஆகிவிட்டதால் அவை பற்றிய செய்திகள் யாருக்கும் வியப்பளிப்பதாக இல்லை. மாறாக, இந்தியாவில் மகாத்மா காந்தி தலைமையில் நிகழ்ந்த, "வெள்ளையனே, வெளியேறு! " இயக்கமும், ஜின்னா முன்வைத்த "இஸ்லாமிய தேசம்" கோரிக்கைகளும் உணர்ச்சிக்கு உரியவை ஆயின.

தேசத்தில் ஒருபுறம், வாய்ப்பு இழந்து கிடக்கும் சகோதர ஜனங்களைச் சுரண்டிக் கொண்டிருந்த பணம் படைத்த முஸ்லீம்கள், தங்களது உரிமையைக் காப்பாற்றிக் கொள்ளவும், எளிய ஜனங்களை ஆட்டிப் படைக்கவும் விரும்பி, "இஸ்லாமுக்கு ஆபத்து" என்று கூக்குரல் எழுப்பினார்கள். இந்தச் சமயத்தில் தேசத்தின் மறுபுறம், இந்துப் பழமைவாதிகள், தமக்குள், ஒருவருக்கொருவர் வகுப்புவாத அடிப்படையில் எண்ணற்ற இடங்களில் மோதிக் கொண்டனர். அவர்கள் அனைவரும் பழங்காலக் காட்டுமிராண்டித் தனத்தோடு ஒருவரையொருவர் கேலி பேசித் திரிந்தனர். ஆக, நாட்டின் எல்லாத் திசைகளிலும் போர்க் குரல் எழுந்திருந்தது! பத்திரிகைச் செய்திகளிலும், மேடைப் பேச்சுக்களிலும் வெறுப்பென்னும் சூறாவளி சுற்றியடித்தது!

கேசவதேவ் வார்த்தைகளில் இப்படிச் சொல்லலாம்: "சகோதரனுக்கும் சகோதரனுக்கும் இடையில், பக்கத்து வீட்டுக்காரனுக்கும் பக்கத்து வீட்டுக்காரனுக்கும் இடையில் பகைமை வளர்ந்தது. ஒவ்வொருவரும் வெட்கமிழந்து போனார்கள். அடிமைப்பட்டு, பஞ்சத்தில் வாடிக் கிடந்த நாட்களில் கூட நமது மக்கள் மனிதாபிமானம் என்னும் உயர்ந்த கொள்கைகளுக்காக நின்றார்கள். அத்தகைய அவர்கள், இபபோது, திடீரென்று ரத்தவெறி பிடித்த நாசகாரிகளாக மாறிவிட்டார்கள்." நமது நாட்டின் வரலாற்றில் இருண்ட காலம் என்று செல்லப்படுகின்ற, இனக் கலவரங்கள் மிகுந்த அந்தக் காலக் கட்டத்தின் போது அப்து இனவெறியென்னும் பேயினால் பிடிக்கப்பட்டுக் கிடந்தான்; கைப்பற்றப்பட்டுக் கிடந்தான்; அவனால் உதறித் தள்ளிவிட்டு மீள முடியவில்லை; பைத்தியம் பிடித்து உளறுபவன் ஆகிவிட்டான்.

மதவெறி கொண்டு விட்ட அப்துவுக்கும், மற்றவர்

களுக்கும் இடையே இணக்கம் இல்லை; எதிர்ப்பு உணர்ச்சியே இருந்தது. அந்தப் பகுதியில் வாழ்ந்த பிற மதத்துக்காரர்கள் அனைவரும் அப்துவுடன் இணக்கமாக இல்லை. செய்திபடிக்கும் நிகழ்ச்சியை அங்கே யாரும் முக்கிய நிகழ்ச்சியாகக் கருதவில்லை; அப்து எடுத்துக் கொண்டது போல, அந்த எளிய சாதாரண நிகழ்ச்சியை, மிக முக்கியமான நிகழ்ச்சியாக வேறு .யார்தான் கருத முடியும்? பைத்திய நிலையின் விளிம்புக்கே சென்று விடும் அளவுக்கு, அவன், பத்திரிகை படிக்கும் பழக்கத்திற்கு மிகுந்த முக்கியத்துவம் கொடுத்து விட்டான். தனது கொள்கை பற்றி அக்கறை செலுத்தாத மக்களுக்கு மத்தியில் தான் வாழ்வதாக எண்ணிய அப்து, இனிமேல் அடையப் போகிற ' இஸ்லாமியதேசம்' பற்றிக் கனவு காணத் தொடங்கிவிட்டான். 'இஸ்லாமிய தேசம்' அடைய வேண்டியதன் அவசியத்தைப் பற்றித் தொலைதூர நகரங்களில் பேசப்படும் மேடைப் பேச்சுக்களைக் கேட்பதற்காக மட்டுமே, அப்து அந்த இடங்களுக் கெல்லாம் சென்றான். உண்மை யாகவே, வெகு கம்பீரமாகத் தோற்றம் தந்த அந்த வடநாட்டுத் தலைவர்களைக் கண்கொண்டு பார்ப்பதில் அவன் ஆனந்தமே அடைந்தான்.

இராணுவ சேவை புரிந்து விட்டு வடநாட்டிலிருந்து வந்திருந்த உஸ்மான்குட்டி அப்துவின் கற்பனையை எப்படி யெல்லாம் சூடேற்றிக் கிளப்பிவிட்டிருந்தான்? அது இடையில் நிகழ்ந்த வேடிக்கையான சிறு காட்சி! உஸ்மான் குட்டி சொல்கிறான்:

"நாம் இருக்கிற இந்தச் சாதாரண மண்ணில் நாம் என்னத்தைக் கண்டோம்? சரியான முஸ்லீம் ஆட்களையும், முஸ்லீம் பெண்களையும் பார்க்க வேண்டுமானால், வட நாட்டுக்குப் போகணும்! அவர்கள் எவ்வளவு உயரமாக இருக்கிறார்கள்!"

"அந்த அதிசயத் தாஜ்மஹால் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறாயா?" - உஸ்மான் குட்டி அப்துவிடம் கேட்டான்.

அதைப்பற்றியெல்லாம் அப்து தெரிந்திருக்கவா போகிறான்? ராஜாவின் அந்த அரண்மனையை அவன் எங்கே பார்த்திருக்கப் போகிறான்?

"நல்லது" - என்று சொல்லிய உஸ்மான் குட்டி, தொடர்ந்து பின்வருமாறு சொன்னான்: "தாஜ்மஹால், நூறு

கோடி அரண்மனை ஒண்ணாச் சேர்ந்தது' மாதிரி... அப்படிக் கட்டின 'டிசைன்' அவ்வளவும் தங்கத்தால் ஆனது.."

"தாஜ்மஹாலின் அந்த இரண்டாவது மாடிக்கு* ஏறுவதற்கு எவ்வளவு கஷ்டம் தெரியுமா?"

"நான் அங்கே போயிருந்த போது, என்னை முதன் முதலில் பார்த்து, உண்மையான முஸ்லீம் என்று தெரிந்து கொண்டு" 'சரி, உள்ளே போகலாம்' என்று சொன்னார்கள். நான் மேலே ஏறிப் பார்த்தேன்! உள்ளே பார்த்தால், நாலா பக்கமும் வைரங்களும் தங்கங்களும் ஜொலிக்கின்றன. ஒருநாள் முழுவதும் ஏறிப் போனால் தான் உச்சிப் படிக்கட்டுக்குப் போக முடியும்! அந்த உச்சிக்குப் போய் அங்கிருந்து பார்த்தால் உலகமே உன் காலடியில் தெரியும்.."

"அந்த உச்சியில் ஒரு மணிநேரம் நின்று அங்கிருந்து நம்ம கிராமத்தை நான் பார்த்தேன்.." – உஸ்மான் குட்டி, தான் ஒரு பெரிய நல்லதிர்ஷ்டம் அடைந்து விட்டவனைப் போல விஷமத்தனமாய்ப் பீற்றிக் கொண்டான்!

-இப்படி வாய்ச் சவடால் அடிக்கும் அந்த ராணுவ வீரன் உண்மையிலேயே தாஜ்மஹாலைப் பார்த்தானோ இல்லையோ?..

இதன் விளைவாக, மிக அமைதியோடும், சுமுகத்தோடும் இருந்த அந்தக் கிராமத்துப் புற மக்களோடு அப்து மிக நெருக்கமான உறவு வைத்துக் கொள்ள ஆரம்பித்தான்.

கிட்டனும் மம்மத்துவும் ஒரு சகோதர அமைப்பின் உறுப்பினார்கள். வாழ்க்கையின் உண்மையான உன்னதத் தன்மையாம் 'சகோதரத்துவம்' என்பது கேரளாவின் மிகப்பழங்காலத்திலிருந்தே, எப்போதும் நிலவி வந்துள்ளது. ஒரு காலத்தில் கிட்டன், மம்மத்து இருவரும் விவசாயத் தொழிலில் சேர்ந்து உழைத்தனர். பின்னர் இருவரும் பழைய கோணிச் சாக்குப்பைகளை வாங்கிவிற்கும் எளிய வியாபாரத்தில் ஈடுபட்டனர்.

---

* இந்த நாவலில் இடம் பெறும் இத்தகைய வேடிக்கையான சொல்லாடல்கள், ஆங்கில ஆசிரியர் தாமஸ் ஹார்டியின் நாவல்களில் இடை இடையே இடம் பெறும் சிறுகாட்சிகளைப் போலவே சிறப்பு மிகுந்தவை.

கிட்டனின் மனைவி மாதவியும், மம்மத்துவின் மனைவி பாத்தும்மாவும் அவர்களது கணவன்மார்களைப் போலவே, மிக நெருங்கிய தோழியர்களாக இருந்தனர். இந்து – முஸ்லீம் ஆகிய இவ்விரண்டு குடும்பங்களும், இன, மத அடிப்படையிலான எந்தக் கொள்கையும் தம்மிரு குடும்பங்களுக்கு, எதிரான தடைகள் என்று நினைக்கவில்லை. ரவீந்திரநாத் தாகூர் சொல்லி வணங்குவாரே "ஒருலகம்" அந்த ஒருலகத்து மனிதர்களாக அந்த இரு குடும்பத்தினரும் ஒருமித்து வாழ்ந்தார்கள். அப்து வாழ்ந்த அந்தக் கிராமத்தில்தான் இவ்விரு குடும்பத்தினரும் மகிழ்ச்சியோடும் அன்போடும் வாழ்ந்து வந்தார்கள்.

அந்த அன்புடைமை நீண்ட நாட்களுக்கு நீடிக்கவில்லை. மாதவி பெண் குழந்தையைப் பிரசவித்து விட்டு இறந்து போனாள்.* அவள் தன் நட்புத் தோழியாகிய பாத்தும்மாவிடம், தனது குழந்தையைக் காப்பாற்றுமாறு வேண்டிக் கேட்டுக் கொள்கிறாள். பாத்தும்மா முதலில் தயங்குகிறாள்; வசதியும் வாய்ப்பும் குறைந்த தனக்குக் குழந்தையைக் காப்பாற்றுதல் சாத்தியப்படுமா? என்று சிறிது வியப்படைகிறாள். ஆனாலும், இறுதியாக, பாத்தும்மாவுடைய அன்பு இதயம், தனக்கு முன்பாகக் கந்தல் துணியில் கிடக்கும் அந்தப் பச்சிளம் குழந்தை மீது இரக்கம் கொண்டு விட்டது. குழந்தையை எடுத்துத் தன் மார்போடு அணைத்துக் கொண்டு, "எல்லாக் குழந்தைகளும் அல்லாவின் குழந்தைகளே" என்றாள்.

சிலகாலம் கழிந்த பிறகு, கிட்டன் கிராமத்திலிருந்து புறப்பட்டு எங்கேயோ தொலை தூரப் பகுதிக்குப் போய்விடுகிறான். இந்துப் பெற்றோர்களுக்குப் பிறந்த ஒரு பெண் குழந்தையும், முஸ்லீம் பெற்றோருக்குப் பிறந்த ஒரு பெண் குழந்தையும், ஆகிய இரண்டு பெண் குழந்தைகள், ஒரு கொடியில் மலர்ந்த இரட்டை ரோஜா மொட்டுக்களைப் போல அங்கே வளர்ந்தார்கள். தாதா, ஜலீமா என்பன அவர்களுடைய பெயர்கள். பாத்தும்மாவின் கணவனும் இறந்துவிடுகிறான். அதன் பிறகு, இரண்டு குழந்தைகளையும் காப்பாற்றுவதற்காகப்

---

* படிப்பறிவு – அனுபவம் இல்லாத உள்ளூர் மருத்துவர் மாதவியைச் சோதித்துப் பார்ப்பதும், அவளுக்கு மருத்துவம் பார்ப்பதும் ஆகிய நிகழ்ச்சிகள் நாவலில் குறிப்பிடத் தக்க நகைச் சுவைப் பகுதிகள் ஆகும். மனத்தைத் தொடக்கூடிய அந்தச் சோக நிகழ்ச்சி இதற்குப் பின்னால் தொடர்ந்து அமைகிறது!.

பாத்தும்மா மிகவும் கஷ்டப்பட்டு உழைக்க வேண்டியிருந்தது. பாத்தும்மா அனைத்துத் துயரங்களையும் மிகத் தைரியமாக எதிர்த்து நின்றாள். நமது தேசத்து மண்ணின் வீரபுத்திரியாகிய பாத்தும்மா, தன்னைச் சுற்றியுள்ள கரடு முரடான பிரதேசத்தில் ஒரு பூந்தோட்டத்தையே வளர்ந்து வந்தாள் என்றுதான் சொல்ல வேண்டும். கயிறு திரிக்கும் தொழிலில் கடுமையாக உழைத்தும், சிறிய தோட்டத்தில் காய்கறிகள் பயிரிட்டும், அரும்பாடுபட்டு வாழ்ந்த பாத்தும்மா, பெருந்தன்மை, அன்பு, கருணை ஆகியவற்றின் உருவமாகவே திகழ்ந்தாள்.

பல இடங்களில் பல ஆண்டுகள் சுற்றியலைந்து விட்டு, நீண்ட காலம் கழித்து, கிட்டன் திரும்பி வந்தான்; ஒரு கடையை வைத்துக் கொண்டு கிராமத்தில் தங்கினான். கிட்டனுக்கு இப்போது வசதி வாய்ப்புக்கள் பெருகிவிட்டன. அவனை இப்போது பலரும் 'கிருஷ்ணன் முதலாளி' என்றே அழைத்தனர். இந்த நிலையில், கிட்டன், தன் மகளை, வளர்ப்புத் தாயான பாத்துமாவிடமிருந்து பிரித்து தன்னிடம் அழைத்துக் கொள்ள விரும்பினான்; மிகவும் முயற்சி செய்தான். பாத்துமாவும் இரக்கம் கொண்டவளாக இறுதியில் அனுப்பி வைக்க ஒப்புக் கொண்டாள். ஆனால் அம்மாவையும், சகோதரி ஜமீலாவையும் விட்டுப் பிரிந்து தாதாவினால் இருக்க முடியவில்லை. அவர்களோடு சேர்ந்து இருக்கத்தான் அவளுக்கு முடிந்தது. தாதாவைக் கிட்டன் அழைத்துச் சென்ற அன்றைய தினமே தாதா பத்துமாவுடைய குடிசைக்குத் திரும்பி வந்துவிட்டாள்.

இத்தகைய அந்தக் குடும்பத்துக்குள் அப்து கால் வைக்க நேர்ந்தது. அப்துவின் விதி பிரிக்க முடியாத அளவுக்கு அவர்களோடு பிணைக்கப்பட்டுவிட்டது. உணர்வாலும், அபிலாட்சைகளாலும் அவர்கள் அப்துவிலிருந்து எவ்வளவு வித்தியாசப்பட்டவர்கள்! வேறு வழியின்றி ஜலீமா–அப்து இருவரின் திருமணத்திற்கு பாத்துமா ஒப்புதல் தெரிவிக்க வேண்டியவள் ஆகிவிட்டாள்! அந்த நான்கு ஆத்மாக்களும் அங்கே ஒரு குறிப்பிட்ட காலம் வரைக்கும் தான் சேர்ந்து வாழ்ந்திருந்தனர். அப்துவின் மனத்தில் தோன்றிய ஆத்திரம் குடும்ப அமைதியைக் குலைத்து விட்டது. சுற்றியிருந்த, இந்து மதப் பற்றாளர்கள் அப்துவை அவமானப்படுத்தினார்கள். நம்பிக்கை இல்லாதவர்கள், கடவுளின் எதிரிகள் என்று பதிலுக்கு அவன் அவர்கள் மீது புகார்கள் கூறித் தனக்கு ஏற்பட்ட காயங்களை ஆற்றிக் கொண்டான்., வெகுதொலைவில்,

வடநாட்டில் உள்ள, எதிர்காலத்தில் அடையப் போகிற 'இஸ்லாம் நாட்டுக்கு' பிரயாணம் போகவேண்டும் என்னும் எண்ணம் அவனது கற்பனையைக் கிளறிக் கொண்டே இருந்தது. அந்த 'இஸ்லாம் நாட்டைத்' தேடி அப்து புறப்படத் தயாராகி விட்டான். வீட்டில் இருக்கும் மனைவி, மனைவி வழி உறவினர்கள் யாரும் தன்னுடன் சேர்ந்து கொள்கிறார்களா? என்றும் கேட்டான்.

பாத்துமாவுக்குத்தான் உண்மையாகவே இப்போது சிக்கல். பூர்வீகமான தாய் நாட்டை விட்டு நீங்கிப் போவதற்குக் காரணம் இருப்பதாக அவள் நினைக்கவில்லை. நூற்றுக்கணக்கான அன்புப் பிடிப்புக்களால் அவள் பிணிக்கப்பட்டிருந்தாள். "இந்த தேசம் இஸ்லாத்துக்குப் பகை நாடு என்று உனக்கு யார் சொன்னது?" என்று தன் மருமகனிடம் பாத்துமா கேட்டாள். "அனைத்து பூமியும் இறைவனுடைய பூமியே. நாம் இங்கே இறைவனது கருணை மிகுந்த பகுதியிலே இருக்கிறோம்" என்றாள்.

"இஸ்லாத்தின் சுவர்க்கம் வடக்கே இருக்கிறது; அதை நாம் அடையப் போகிறோம்; அங்கே தங்கத்தால் ஆன படுகைகள் பல இருக்கின்றன; வைரம் பதித்த கூரைகள் இருக்கின்றன; " "- என்ற தொலைதூரப் பார்வையில் அப்து லயித்துக் கிடந்தான். அடுத்து என்ன செய்வது என்பது பற்றியே சிந்தித்த அவனுடை நாடி நரம்புகளுக்கு உள்ளேயெல்லாம் இங்கிருந்து போய்விட வேண்டும் என்ற எண்ணமே இருந்தது. நம்பிக்கை மோசம் பண்ணுகிற இந்த நாட்டை விட்டு நீங்கி, தான் கனவு காணும் கற்பனை நாடான வடநாட்டு இஸ்லாம் தேசத்திற்குப் போய்விட வேண்டும் என்ற திட்டத்தில் அப்து தீவிரமாகவே இருந்தான்.

ஒரு சூழ்நிலையில், தன் கணவன் விரும்பியவாறே அவனுடன் புறப்பட்டுப் போவதற்கு ஜலீமா பாதி சம்மதம் தெரிவித்துவிட்டாள். ஆனால் பாத்துமா சம்மதம் தெரிவிக்கவில்லை. இங்கேயே இருந்து விடவேண்டும் என்பதில் அவள் உறுதியாக இருந்தாள். இறுதியாக, தாதாவினுடைய கடமை உணர்வும், தன்னையே தியாகம் செய்யும் தியாகசீலமும் ஜெயித்தன. அங்கிருந்து போக, அவளுக்கு மனமில்லை யென்றாலும், ஜலீமாவை அவளுடைய கணவனிடமிருந்து பிரித்து வைப்பதைத் தாதா நினைத்துக் கூடப் பார்க்க

முடியவில்லை. எனவே அப்துவுடன் அனைவரும் சேர்ந்து வெளியேறுவதாக அவனிடம் உறுதி சொல்லுமாறு ஜலீமாவைத் தாதா வற்புறுத்தினாள்.

அப்து கனவு கண்டு கொண்டிருந்த நாட்டைத் தேடிக் கொண்டு அனைவரும் புறப்பட்டுவிட்டனர். அவர்கள் எங்கே போய்ச் சேர்ந்தார்கள்? மகிழ்ச்சிகரமான அந்த வடநாட்டைச் சேர்ந்ததும் அவர்கள் அடைந்த கருத்து, "நாம் நம் வீட்டை விட்டு வெளியே வந்திருக்கக் கூடாது" என்பதுதான்! காரணம் வடக்கே நடந்த நிகழ்ச்சிகள்! "இந்துஸ்தானுக்கு ஜே! பாகிஸ்தானுக்கு ஜே!" என்ற கோஷங்களுக்கு இடையே ரத்தக் களரிகளும் படுகொலைகளும் நடந்தன!

அந்த மூன்று பெண்களின் அனுபவங்கள், இனவெறியென்னும் பேயினால் பீடிக்கப்பட்டு, மதவாத தீவிரத்தின் விடாப் பிடித்தன்மையால் பரிதாபத்துக்குரிய முடிவை எய்திய அந்த மனிதன் – இவர்கள் பற்றிக் கேசவதேவ் வருணிக்கும் பகுதியைப் படிக்கும் வாசகருக்கு, இது மிகுந்த துன்பம் தரும் அனுபவமாகவே இருக்கும். இரக்க உணர்வு சிறிதும் இல்லாத ஒரு வாசகரும்கூட, இந்த நாவல் திகிலூட்டும் காட்சிகள் நிறைந்த, சீர் இல்லாத, அற்புத நவிற்சி நூல் என்று புகார் கூற நினைக்கவும் மாட்டார். படிக்கும் வாசகர், கசிவு மிகுந்த அவல நாவலாகிய இதில் அமைந்துள்ள அற்புதமான கலைநேர்த்தி நுணுக்கத்தால், முதல் வாசிப்பிலேயே பிரமிப்பு அடைந்து விடுவார்.

ரஹீம் அப்துவின் சகோதரன்; அப்துவுக்கு அப்படியே நேர் எதிரிடையானவன்; இன, மத வெறிக்கு அடிமைப்பட மறுத்துவிட்டவன். தாதா ரஹீம் மீது நம்பிக்கை மிகுந்த பிரியத்தைத் தனக்குள் நெடுகிலும் வளர்த்துக் கொண்டே வந்திருந்தாள். ரகசியமாய் அவனைக் காதலிக்கவும் செய்தாள். அவனைச் சந்திக்க வேண்டும் என்று தனக்குள் வளர்த்துக் கொண்டு வந்திருந்த அவளது ஆவலும் இப்போது நிறைவேறுகிறது.

இந்தப் 'பைத்திய நாவலில் 'இடம் பெறும் ரஹீம்–தாதா இருவரும் மனிதாபிமான உணர்ச்சியில் மிக உயர்ந்த கலங்கரை விளக்கமாக உருவாகிறார்கள். ரஹீம், தாதா பெருமைக்குரிய தாய் பாத்துமா போன்றவர்கள் இருக்கின்ற வரை, நம் நாட்டு மக்களின் இக்கட்டான நிலை பற்றி, வாழ்க்கை நிலை பற்றி, நாம் ஏங்க

வேண்டியதில்லை. மலையாளத்தின் இதிகாசம் போன்றதாகிய இந்த நாவலைக் கருத்தூன்றிப் படிக்கும் ஒருவர் இந்த நம்பிக்கையுடன் தான் நாவலைக் கீழே வைப்பார்.

நாவலாசிரியரின் பின்வரும் வார்த்தைகள் அந்த வாசகரின் காதுகளில் ரீங்காரமாக ஒலித்துக் கொண்டுதான் இருக்கும்:

"என் தேச மக்களே அண்டை வீட்டுக் காரர்களே! நாம் ஒருவரையொருவர் கொலை செய்து கொள்ள வேண்டாம்!" - ''சகோதவரனே, கொல்லாதே' - என்ற புகழ் பெற்ற சிறுகதையைப் படைத்த ஆசிரியர் கூறும் கூர்மையான, கருத்தூன்றிய வார்த்தைகள்! மானுட நேசிப்பு என்பதை மதமாகக் கொண்ட ஆசிரியரின் வார்த்தைகள்!

மானுட மதிப்பீடுகளும், தனிப்பட்ட தைரியமும், மானுடக் காதலும் நம்பிக்கை மிகுந்த போராட்ட உணர்வும் கேசவதேவின் விசேஷக் குணங்கள் ஆகும். படைப்பாளராகிய கேசவதேவின் இந்தக் குணாம்சங்களை, இந்து -முஸ்லீம் கலவரங்களின் போது நிகழ்ந்த மதக்கொடூரங்களை இந்த நாவல்வழியே அவர் எடுத்துக் காட்டும் சிறப்பான இடங்கள் மூலமாக நாம் கண்டு கொள்ளலாம்.

'பைத்திய வீடு' என்னும் இந்த நாவலுக்குப் பிறகு ஆறு ஆண்டுகள் கழித்து அடுத்த நாவல் வெளிவந்தது. கலை நுணுக்கத்தின் ஒரு முழுமைத் தன்மை பெற்றுள்ள இப்படைப்பு, "உள்முகத் தனிமொழி" உத்தியில் அமைந்தது. இதன் பெயர், "குஞ்சு குறுப்புவின் சுயசரிதை".

இவ்விரண்டு அழகான படைப்புக்களுக்கும் இடையில் கேசவதேவின், "யாருக்காக? என்ற வித்தியாசமான நாவலும் வெளியாயிற்று. சோவியத்து ரஷ்யாவில் ஸ்டாலின் காலத்தில் நிகழ்ந்த வெளியேற்றங்கள் பற்றிக் கேரளச் சூழ்நிலையில் சொல்லும், செம்மையில்லாத, அற்புத நவிற்சி நூலாக இந்த நாவல் அமைந்தது. ரவி பொதுவுடைமைக் கட்சியின் ஸ்டாலின் பிரிவுத் தலைவன். அவன், தனது விசுவாசம் மிக்க தலைவனாகிய வீரையன் என்பவனுக்கு எதிராகச் சதி செய்து, அவன் கொலை செய்யப்படுவதற்கான ஏற்பாடுகளையும் செய்துவிடுகிறான். அதன் பிறகு, ரவி, தனக்கு ஆதரவாளனாக இருப்பவனும், தன் மனைவியின் சகோதரனும், இயக்கத் தோழனுமாகிய ஆர்க்கன்

என்பவனுக்கும் எதிராகக் கிளம்புகிறான். ரவி, தான் விரும்பும் எந்த நேரத்திலும் அவனைத் தீர்த்துக் கட்டிவிட முடியும் என்ற நிலை. ஆனால் நேரடியாகச் செய்வது அவ்வளவு பிரயோஜனப் படாது என்று தெரிந்து கொண்டு, அவனைத் தீர்த்துக் கட்டுமாறு தன் மனைவி பத்மாவுக்கு உத்தரவிடுகிறான். இதைத் தொடர்ந்து நாவலில் அற்புத நவிற்சியின் கலவையும், பிறரைத் துன்புறுத்தித் தான் இன்பம் காணும் செயற்கைச் சந்தோஷங்களும், தியாக உணர்வுகளும் ஒட்டு மொத்தமாகக் கலந்து ஒரு பெரிய குவியலாக ஆகி, ' யாருக்காக?' நாவல் உருவாகிறது (1950).

இந்நாவலின் முன்னுரையில் நாவலாசிரியர் கேசவதேவ் பேசுகிறார். அந்தப் பேச்சில், பொதுவுடைமைக் கொள்கையில் ஏற்பட்ட திடீர் மாற்றங்கள் சம்பந்தமாகத் தனக்குள் எழுந்த வேதனை மிக்க கேள்விகளைப் பற்றிப் பேசுகிறார்; புகாரின், கமனேவ், ஜினோவியெவ் ஆகியோருக்கு நேர்ந்த கதிபற்றித் தான் அடைந்த அதிர்ச்சி மிக்க அனுபவங்கள் குறித்துப் பேசுகின்றார் ஸ்டாலின், இட்லர் ஒப்பந்தம் பற்றிப் பேசுகின்றார்; 1942-இல் இந்தியாவில் நடந்த 'வெள்ளையனே வெளியேறு' இயக்கத்திற்குக் கம்யூனிஸ்டுகள் செய்த துரோகச் செயல்பற்றிப் பேசுகிறார்; இவை அனைத்தும் உண்மையாகவே உள்ளத்தைத் தொடும் முறையில் அமைகின்றன. முன்னுரையைத் தொடர்ந்து வரும் இந்த நாவலானது, எத்தனையோ பல சிறப்புக்களைப் பெற்றிருக்கும் நாவலாசிரியர் கேசவதேவ், உணர்ச்சிகளை எழுத்தாக்கும் போது, நழுவிப்போய்விடுகிற கேசவதேவாகவே இருக்கிறார் என்பதை எடுத்துக் காட்டிவிடுகிறது. 'யாருக்காக?' என்னும் இந்த நாவலைத் தொடர்ந்து வந்த 'குஞ்சுகுறுப்பினுடைய சுயசரிதை' என்னும் நாவல், 'யாருக்காக?' நாவலுக்கு ஒரு திருத்தமாக அமைகிறது.

இந்த நூலின் கதை எழுபது வயதுடைய முதியவரின் கதை; இது தன்மைக் கூற்று முறையில் சொல்லப்படுகிறது; மனித விதியின் துக்ககரமான புலம்பலாக அமைகிறது. குஞ்சு குறுப்பு உணர்ச்சிகரமான மனிதர்; நல்லெண்ணம் மிக்கவர்; தன் குழந்தைகளை வளர்க்கவும், வளர்த்து முறையான கல்வி கொடுக்கவும் காலம் எல்லாம் அரும்பாடுபடுகிறவர். ஆனால் வயோதிக காலத்தில், துர்ப்பாக்கிய நிலைக்கு ஆளாகிறார். அவருடைய மூன்று மகன்களுள் ஒருவன் புகழ்பெற்ற

இசைப்பாடகன் ஆகிறான்; அடுத்த இரண்டு பேர்களில் ஒருவன் 'குண்டர்கள்' தொழில் புரிபவனாகிவிட்டான்; மூன்றாமவன் கோஷங்களையும், கவிதைகளையும் எழுதி உச்சரித்துக் கொண்டு நடைமுறைக்குச் சாத்தியமற்ற 'புரட்சி' என்பது பற்றிப் பேசித் திரிகிறான்! இம்மூவரில் ஒருவர் கூடத் தந்தையைக் கவனிக்க வில்லை. ஓரளவே அன்பு செலுத்தி வந்த மருமகன்செய்த மிகச் சொற்பமான உதவியால் பிழைத்துக் கிடந்தார். இந்த நிலையில் தான் தனித்துவிடப்பட்டதாகவே எண்ணினார்; அவநம்பிக் கையில், வீணாகிப் போய்விட்ட உணர்வில், அவர் அழுங்கிக் கிடந்தார். இந்தப் படைப்பின் உருவமும் நடையும் முழுமையான அற்புதத்தில் அமைந்திருக்கிறது என்றே சொல்ல வேண்டும். பிற படைப்புக்களில், கேசவதேவ் கலைநேர்த்தி அம்சத்தின் மீது அக்கறை செலுத்தாதவராகவே காணப்படுகிறார். ஆனால் இந்த நாவலில், கலைநேர்த்தி அம்சத்தில் மிகச் சிறந்த மேதைமை படைத்த வராகவே கேசவதேவ் காணப்படுகிறார்; இந்த நாவல் இதை நிரூபித்துவிடுகிறது.

கேசவதேவ் படைத்த அடுத்த நாவல் 'ரௌடி' (1958) என்பது. ஒரு குறிப்பிட்ட கருத்தோட்டத்தில் பார்த்தால், இது இவருக்கே உரித்தான குணாம்சங்கள் கொண்ட வெளியீடு என்றே கொள்ளலாம். இந்த நாவலின் கதை ஓர் அனாதைச் சிறுவன் பற்றியது. அவன் ஈவிரக்கமின்றி, உள்ளூர் ஆதிக்கத் தலைவன் ஒருவனால் வசைபாடப்படுகிறான்; சுரண்டப் படுகிறான்; மோசக்கார வில்லன்கள் கும்பலுக்கு எதிராகவும், தற்காப்பு கருதியும், ஆயுதம் தாங்கிப் போராடும் நிலைக்கு, இறுதியில் அவன் தள்ளப்பட்டு விடுகிறான்.

கேசவதேவ் இந்த நாவலை, 'ஒரு கத்தியின் கதை' என்று மிகவும் நகைச் சுவையோடு வருணிக்கின்றார். ஒருவகையில் இந்த நாவல் அதிஅற்புத நவிற்சியின் நிகழ்ச்சித் தொகுப்பாகவே அமைகிறது! இருந்த போதிலும், இந்தக் கதையின் உளவியல்பூர்வமான அமைப்பு பாராட்டுக்கு உரியதாக இருக்கிறது.

'ஔசோ' என்னும் டம்பப் பேச்சுக்கார அடியாள் ஒருவன், கொல்லன் பட்டறையில் தனக்கு ஒரு கத்தி செய்து தரவேண்டுமென்று 'ஆர்டர்' கொடுக்கிறான். பட்டறைக்காரன் கத்தியைத் தயார் செய்து கொடுத்ததுதான் தாமதம், அந்த மோசக்காரன், தனது அச்சுறுத்தும் வேலையைப் பட்டறைக்

காரனிடமே காட்ட ஆரம்பித்துவிடுகிறான். கத்தி வடித்துக் கொடுத்ததற்கான கூலியை அவன் கேட்ட போது, அந்தக் கத்தியைக் காட்டிக் குத்திவிடுவதாகப் பயமுறுத்திவிடுகிறான். பிறகு அந்த ஆயுதத்தை ஏந்திக் கொண்டு போய்விடுகிறான்; பட்டறைக்காரனும் வருந்தியவாறே திட்டிக் கொண்டு போய்விடுகிறான்.

பரமு கோழைத்தனமான ஓர் அனாதைப் பையன். உள்ளூர்ப் பணக்கார கேளிக்கை மனிதர்களால் அனைத்து வகை அவமானங்களுக்கும் ஆட்படுகிறான். இதில் தவறான பாலியல் கெட்ட வழக்கங்களும் அடங்கும். பரமு மிகவும் அடக்கமான, மரியாதையான பையனாக இருக்கும் வரை இந்த நிலை நீடித்தது. இறுதியில், எதிர்த்துத்தாக்கும் தோரணைக்கு அவன் தள்ளப் படுகிறான். ஊர்ந்து திரியும் ஏதோ ஓர் உயிரினத்தின் ரத்தத்தைக் கத்தியில் தோயவிட்டு, அந்தக் கத்தியைக் கையில் ஏந்தி அவன் காட்டியவுடன், என்ன ஆச்சரியம்! அவனைப் பாராட்டுபவர்கள் பெருகிவிட்டார்கள்! விசிறிகளாகப் பலர் ஆகிவிட்டார்கள்!

இந்தக்கத்தியை, இந்த ஆதரவற்ற பையன், டம்பப் பேச்சுக்கார "ஔசோ" விடமிருந்துதான் திருடினான்; ஒரு வேளைச் சோற்றுக்குக் காசு கொடுப்பதற்காகத்தான் திருடினான். ஆனால் இப்போது அந்தக்கத்தி, அவனுக்கு ஏற்படும் தடைகளையெல்லாம் விரட்டுவதற்குப் பயன்படும் ஓர் ஆயுதாகவே ஆகிவிட்டது. பணக்காரக் கூட்டத்து ஜனங்கள், அவனுக்கு கருணையும் சலுகையும் காட்டி அவனுக்குத் தேவைப்படும் பொருள்களையெல்லாம் தரவும் ஆரம்பித்து விட்டார்கள். இப்போது அந்தக் கிராமத்தில் ஒரு கொடுங்கோல் ஆட்சியே செய்யத் தொடங்கிவிட்டான்.

கேட்பாரற்றுத் திரிந்த அந்தப் பையன், இப்போது அஞ்சத்தக்க, மரியாதைக்கு உரிய, போராடும் வீரனாக ஆகிவிட்டான். அவனது செயல்பாடுகள் எல்லாம் இப்போது பெரிய பெரிய இடங்களில்தான். நிலப்பிரபுக்கள் எல்லாம் ஒருவருக்கொருவர் பகைத்துக் கொள்ளும் போது, இவனைத் தங்கள் பக்கம் இழுத்துத் தங்களுக்குப் பாதுகாப்பாக வைத்துக் கொண்டனர்; காசு கொடுத்துக் குத்துச் சண்டைக் காரனாக அமர்த்திக் கொண்டனர்.

இந்தக் கதையின் அனைத்துப் பகுதிகளும் மிகப்பெரிய அளவில் மறைபொருள் அம்சத்தோடு அமைகின்றன. கதையில்

சொல்லப்பட்டுள்ள பரமு, ஔசோ இருவரின் துணிகரமான நடவடிக்கைகள் பேரளவில் நமக்குக் களிப்பூட்டுவனவாக அமைகின்றன. 'பச்சோந்தி'யைக் கொன்று திரிந்த பரமு, 'ரௌடி'பரமுவாக மாற்றம் அடைந்தது, 'ரௌடி'பரமு அந்தப் பகுதியின் ஒவ்வொருவருக்கும் 'மூத்த அண்ணனாக' மாறியது, என்றவாறு நிகழ்ச்சிகள் நிறைந்த இக்கதையானது, சோகமும் நகைச்சுவையும் ஒன்றிக் கலந்த ஓர் அருமையான கலையாகும். இந்நாவல், படிக்கச் சுவையானது; மகிழ்ச்சிதரத்தக்கது; அதுமட்டுமல்ல, சமகாலச் சமுதாயத்தின் மீதான ஆசிரியரின் காரசாரமான விமர்சனமாகவும் அமைகிறது.

குள்ளமான 'ஔசோ,' விபர், வெலூ, போன்ற வில்லன்கள், கைமல் போன்ற அயோக்கியர்கள், பரமுபிள்ளை, உன்னி பிள்ளை போன்ற உள்ளூர் கடைக்காரர்கள், கோவிந்த குறுப்பு, குஞ்சுபணிக்கர் போன்ற நிலப்பிரபுக்கள், ஒருவருக்கொருவர் துன்புறுத்தி அதில் வெற்றுச் சந்தோஷம் அடையும் நாயர் தலைவர்கள் - ஆகியோரது வருணனைகள் அனைத்தும் மிகவும் சுவையானவை.

கேசவதேவ் 'ஒருபாத்திர நாவல்' படைப்பதில்தான் மிகுந்த விருப்பம் உடையவர்; அத்தகைய கேசவதேவ் படைத்த இந்த நாவலில், 'ஒருபாத்திரமாய்' வரும் அந்தக் கோழைப் பையனைத் தற்காப்புக் கருதி அடாவடித்தனம் உடையவனாக உருவாக்கிப் படைத்திருப்பதும், உளவியல் யதார்த்த பூர்வமாய்ப் பாத்திரத்தின் பரிணாம வளர்ச்சியைக் காட்டிச் செல்லுவதும் நாவலில் அமைந்த முதன்மையான அழகு ஆகும்.

1961-இல் கேசவதேவ் இன்னொரு நாவலை வெளியிட்டார். அதன் பெயர் 'கண்ணாடி' என்பதாகும். அந்த நாவலை அவர் படைக்க நேர்ந்த சூழ்நிலைகள் குறிப்பிடத்தக்கவை.

கேரளாவில் பொதுவுடைமைக் கட்சி தோன்றுவதற்கு முன்பே, மாநிலத்தின் 'அறிவிக்கப்படாத' கம்யூனிஸ்டு ஆகக் கேசவதேவ் இருந்தார். பொதுவுடைமைக் கட்சி கேரளாவில் பதவிக்கு வந்ததைக் கேசவதேவ் எதிர்த்தார். கம்யூனிஸ்டுகள் பதவியில் இருக்கும்போது, கேசவதேவ், அவர்களை வெளிப்படையாகவே உரத்து விமர்சனம் செய்தார்; கொஞ்சமும் தளர்ந்துவிடாமல் அவர்களுக்கு எதிராகவே செயல்பட்டார். பின்னர் கேரளாவில் கம்யூனிஸ அரசு நீக்கப்பட்டது. அதைத்

தொடர்ந்து, அரிஜன மக்களில் பெரும்பாலோர் கம்யூனிஸ்ட் கட்சியின் அனுதாபிகள் என்று எண்ணி, அரிஜன மக்கள் வாழும் இடங்கள் மீது தாக்குதல் தொடங்கப்பட்டது. இதனால் அரிஜன மக்கள் அடைந்த துன்பங்கள் கேசவதேவின் உணர்வைத் தொட்டுக் கிளப்பிவிட்டது. இயல்பாய் கேசவதேவுக்கு எழுந்த தார்மீக கோபம் 'கண்ணாடி' என்னும் நாவலாக வெளிவந்தது. இந்நாவல் ஆழமான உணர்ச்சிகளின் வெளிப்பாடு. "துரதிர்ஷ்டவசமான மக்களாகிய அந்த அரிஜனங்கள் மீது பரிவு காட்டுங்கள்; அந்தச் சக மக்களிடம் மனிதாபிமானத்தோடு இருங்கள்; உதவி செய்யுங்கள்'' என்று கேசவதேவ் பெரும்பான்மை மக்களிடம் விடுத்த வேண்டுகோளாகவும் இந்த நாவல் அமைந்தது. வேறுமொழியில் சொல்வதென்றால் அரிஜனங்கள்மீது, கொடுமை காட்டுவதை நிறுத்துங்கள் என்று மக்களுக்கு எச்சரிக்கை விடுக்கும் நாவல் எனலாம்.

இந்த நாவல் கடந்த நாற்பதுகளின் முற்பகுதிக்கு நம்மை அழைத்துச் செல்கிறது. அந்தக் காலம் அழுத்தமும் கடுமையும் மிகுந்த காலம்; போர்க் கால நெருக்கடி மிகுந்த காலம்; அல்லது நெருக்கடிகளால் ஆன்ம உணர்வு அற்றுப்போயிருந்த காலம்; மாநிலத்தின் தொழில் நிறுவனங்களில், முதன்முதலாக, மிகவும் வெட்கமில்லாத முறையில், தொழிலாளிகள் சுரண்டப்பட்ட காலம். சமுதாயத்தின் ஆன்ம உணர்வற்ற இந்த நிலை, ஏற்கனவே நிலவிவந்த பழைய நிலப்பிரபுத்துவ மதிப்பீடுகளாகிய பெருந்தன்மையையும், அறப்பண்பையும் திடீரென்று உதறிப் போட்டுவிட்டது; அவை இருந்த இடத்தில், பணத்தை மட்டுமே மதிப்பீடாகக் கொண்ட முதலாளித்துவக் கொள்கையைக் கொண்டுவந்து நிறுத்திவைத்துவிட்டது. கழுத்தை நெரிக்கும் பணவெறி தீவிரப்பட்டுப்போன சமுதாயம்; நிலப் பிரபுக்கள் எல்லோரும் புதிய ஆர்வத்தோடு ஆலைச் சொந்தக்காரர்களாக ஆகிவிட்ட சமுதாயம்; -இந்தச் சமுதாயத்தின் முன்னே, கேசவதேவின் நாவல் ஒரு கண்ணாடியை நிறுத்தி வைக்கிறது; இந்தச் சமுதாயத்தின் பேராசையால் ஏழை ஜனங்கள் படும் துயரங்களைச் சித்திரிக்கிறது. அதற்கு மேலும், இந்த நாவல், மாநிலத்துப் பாட்டாளி வர்க்கத்தாரிடம் தோன்றியிருக்கிற விழிப்பு உணர்ச்சியை நமக்கு எடுத்துரைக்கிறது; இது நாள்வரை அமிழ்ந்து கிடந்து, ஏக்கமெனும் சேற்றிலிருந்து மீட்சி பெறுவதற்காகப் பாட்டாளி வர்க்கத்தினர் நடத்தி வந்த போராட்டத்தையும் சித்திரிக்கிறது.

'ஒரு பாத்திரக் கதை' என்னும் வகையே கேசவதேவுக்கு மிகவும் பிடித்தமான உருவம் ஆகும். இந்திய இலக்கியத்தின் 'நவீன மார்லோவ்' எனக் கருதப்படும் கேசவதேவுக்கு எப்போதும் முதன்மையான உத்தியாக இருந்து வந்துள்ளது. ஆனால், இந்தப் புதிய நாவலில் கேசவதேவ் அந்தப் போக்கிலிருந்து பாதியளவு விலகி நிற்கிறார். பாராட்டுதற்குரிய, இசைநயம் பொருந்திய, கேரளாவின் மூன்று தலைமுறையைச் சார்ந்த, ஆண்களும் பெண்களுமாகிய பாத்திரக் கூட்டத்திற்குள், முதன்மைப் பாத்திரங்கள் முதலாவது தலைமுறைக்காரர்கள்; இவர்கள் தாழ்த்தப்பட்ட அடிமைகளாகக்கிடக்கிறவர்கள்; கந்தன் – அழகி ஆகிய அரிஜனத் தம்பதியர் இருவரும் இந்த முதலாம் தலைமுறையின் பிரதிநிதிகளாக இடம் பெறுகின்றனர். இவ்விருவருடைய மகன்களும் மகள்களும் இரண்டாம் தலைமுறையின் பிரதிநிதிகளாக இடம் பெறுகின்றனர். இவர்களும் அடிமைப்பட்டவர்களே. ஆனால், இவர்களது எஜமானர்களின் இரக்கமற்ற தன்மையால் அதிர்ச்சியடைந்து, சிறிது சிறிதாகத் தங்களது மந்தப் போக்கிலிருந்து இப்பொழுதுதான் மீளுகின்றவர்களாக வருகின்றார்கள். புத்தம் புதிய சவால்களைச் சந்திக்கும் வலிமையை, திராணியைப் பெறாதவர்கள். எனவே இவர்கள் இன்னும் முழுமையான அச்சத்திலும் தோல்வியிலும்தான் இருக்கிறார்கள். மூன்றாம் தலைமுறைக்காரர்கள் இளைஞர்கள்; குழந்தைகள். இவர்களும் அச்சத்திற்கு அடிமைப்பட்டுக் கிடக்கின்றவர்கள்தாம். ஆனால், கிளர்ச்சி மனப்பாங்கினால் எழுந்து நிற்கின்றவர்கள்; இறுதியாக, எதிர்வர்க்கமாகிய பகைவர்களுக்கு எதிராக எழுந்து நிற்கிறார்கள்.

கந்தனுடைய அழகி, உள்ளூர்த் தலைவனும் நிலப்பிரபுவுமாகிய வக்கச்சனுக்குக் கள்ளக் காதலியாக இருக்கிறாள். அவன்மூலம் அழகிக்கு ஒரு பெண் குழந்தை பிறக்கிறது. அந்தக் குழந்தை யாருக்குப் பிறந்தது என்பது ஊரறிந்த ரகசியம். கந்தன் அதுபற்றியெல்லாம் சிறிதும் கவலைப்படவில்லை. அரிஜன மக்கள் மத்தியில், வழங்கும் பெயரான 'நீலி' என்னும் பெயரை அந்தக் குழந்தைக்கு இட்டு அழைக்கிறான். இவையெல்லாம் இருந்தும் கந்தனும் அழகியும் கணவனும் மனைவியுமாக ஒரு திருப்தியான வாழ்க்கையே வாழ்கின்றனர். அந்தப் பகுதியின் வாழ்க்கை விதி முறை என்பது காட்டு வாழ்க்கை விதிமுறைதான். வல்லான் வகுத்ததே வழி!

அந்தப் பெரிய மனிதர்களை எதிர்த்துக் கேள்விகேட்கவேண்டும் என்று யாரும் நினைத்தது கூட இல்லை; அனைத்து அவமானங்களையும் அவன் தாங்கிச் சகித்துக் கொண்டுதான் வாழ வேண்டியிருந்தது!

ஓர் அழகிய, எழில்மிக்க பெண்ணாக நீலி வளர்ந்தாள். கொச்சுராமன் மீது காதல்வயப்பட்டாள். கொச்சுராமன் ஈழவத் தொழிலாளி. மிகவும் ஏழ்மையான, விவசாய இனத்துச் சாதியான புலையர் சாதியைவிட வித்தியாசமான தோற்றம் உடையவன். கொச்சுராமனின் உறவினர்கள், புலையர் சாதியைவிடத் தங்கள் சாதி உயர்ந்தது என்று நினைக்கிறார்கள். எனவே கொச்சுராமன் – நீலி காதலால் இரண்டு சாதிகளிடையே உருவாகும் திருமண உறவை அவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. எனவே இளங்காதலர் இருவரும் கிராமத்திலிருந்து ஓடிவிடுகின்றனர்; எங்கே இடம் கிடைக்குமோ அங்கே தங்கலாம் என்ற திட்டத்தில் அவர்கள் போய் விடுகின்றார்கள். அவர்கள் நெடுந்தொலைவு அலைந்து திரிந்து பிறகு, இறுதியில் ஒரு பணக்காரக் கிறித்தவ நிலப்பிரபு ஒரு குடிசையில் அவர்களுக்கு இடம் தருகிறார்; அவர்கள் வேலை செய்யும் முறைக்கு ஏற்பச் சம்பளம் தருவதாகச் சம்மதிக்கிறார். ஆனால் ஒரு நிபந்தனையும் விதிக்கின்றார். கொச்சுராமனும் நீலியும் இந்து மதத்திலிருந்து விலகி, கிறித்தவ மதத்தைத் தழுவிக் கொள்ளவேண்டும். அவர்களும் இசைந்து, கொச்சுராமன் ‘வர்கி’ என்றும், நீலி ‘எலி’ என்றும் கிறித்தவப் பெயர் பெறுகின்றனர். இவ்வாறு வர்கியும் எலியும் அமைதியான பக்திபூர்வமான வாழ்க்கையைத் தொடங்குகிறார்கள். நிலப்பிரபுவாக இருந்து, இப்போது ஆலைச் சொந்தக் காரராக மாறியுள்ள அந்த முதலாளிக்குக் கடமை தவறாத வேலைக்காரர்களாக இருக்கிறார்கள்.

ஆண்டுகள் பல ஓடிமறைந்தன. இந்தத் தம்பதியர் இருவருடைய குழந்தைகள் பெரியவர்களாக வளர்ந்துவிட்டனர். வளர்ந்துவிட்ட இந்த உழைப்பாளிகள், பணக்கார ஆசாமிகள், வேலை கொடுத்தோம் என்னும் ‘பரோபகாரச் செயலை’க் காரணம் காட்டித் தங்களை எவ்வாறெல்லாம் பண்ணைகளிலும், ஆலைகளிலும் திட்டமிட்டு ஏமாற்றிக் கொண்டிருக்கிறார்கள் என்பதைப் புரிந்து கொள்ளத் தொடங்கினார்கள். விசுவாசம் மிக்க வேலையாட்களின் தலையில் இழிநிலை ஒட்டு மொத்தமாய்க் குவிந்து கிடந்தது. பின்னர் பணக்கார

எஜமானர்களின் அட்டூழியங்கள் வேலையாட்களின் உடலையும் துன்புறுத்தும் நிலைவந்தபோது, இளைய தலைமுறையினர் மிகவும் அதிர்ச்சி அடைந்தனர். வாழ்வதற்கான தங்களது அடிப்படை உரிமைகளைப் பாதுகாக்கும் முயற்சிகளில் ஈடுபட்டனர். தங்களது எதிர்ப்பையும் தெரிவிக்கத் தொடங்கினர். கொச்சுராமன் – நீலி இருவருடைய மகன்களும் மகள்களும் அதாவது, கந்தன் - அழகி இருவருடைய பேரப்பிள்ளைகள், காலப்போக்கில், தங்களது வாழ்க்கையின் துயரப் பகுதிகளை அழிப்பதற்காகப் போராட்டங்களை முன்னெடுத்துச் சென்றனர். அனைத்துப் போராட்டங்களிலும் அவர்கள் வெற்றியும் பெற்றனர்.

பாட்டாளி வர்க்கத்தின் விழிப்புணர்ச்சியை எடுத்துக்காட்டும் இந்த நாவல், கேசவதேவின் மனத்தைத் துலக்கிக் காட்டும் ஓர் அட்டவணை என்றே சொல்லலாம். உள்ளொன்று வைத்து ஊமை மனிதராகக் கேசவதேவ் ஒருபோதும் இருந்ததில்லை. அவர் எப்போதும் வெளிப்படையாகவே பேசினார். எங்கே பேசினாலும் அவர் அச்சமின்றியே பேசினார். கம்யூனிஸ்ட் அதிகாரத்தை நீக்குவதற்குக் காரணமான எதிர்விளைவுகளுக்குக் கேசவதேவின் 'கண்ணாடி' நாவல் ஓர் எச்சரிக்கைதானே! பெரும்பாலும் அப்படித்தான். சமுதாய நீதிக்காகவும் மனிதாபிமானத்துக்காவும் கருணை கூர்ந்து விடுக்கப்பட்ட ஒரு வேண்டுகோள்தான் இந்த நாவல். ஆலப்பே நகரம், அதைச் சுற்றியுள்ள பகுதியில் வாழும் ஏழை ஜனங்கள் பற்றிய கேசவதேவின் சித்திரிப்பு மிகவும் அற்புதமானது. பேராசிரியர் குப்தன் நாயர், அவரது கட்டுரைஒன்றில் ஆய்வுரை செய்து கூறியுள்ளது போல, தகழி சிவசங்கரபிள்ளை மற்றும் அவர் போன்ற பிறர், தொழிலாளர்கள் பற்றி வரலாற்று வரிசையான தகவல்களைத்தான் தந்தார்கள்; ஆனால் கேசவதேவ் இந்நிலையிலிருந்து மாறுபட்டு, வெறும் வரலாற்றுச் சித்திரிப்போடு நிற்காமல் அந்தத் தொழிலாளர்களின் உணர்வுகளோடும் உற்சாகங்களோடும் இரண்டறக் கலந்துவிட்டவராகே காணப்பட்டார். இதற்கான அற்புதமான சான்று 'கண்ணாடி' என்ற இந்த நாவலே ஆகும். 1961 – இல் 'கண்ணாடி' நாவல் குறைபாடு ஏதும் இல்லாத நாவல் என்று சிலரால் மதிப்பீடு செய்யப்பட்டது. எனவே, கேசவதேவ் படைத்த நாவல்க்ளில் இதுதான் மிகவும் சிறப்பான படைப்பு எனக் கொள்ளலாம்.

இந்த நாவலுக்கு எழுதப்பட்ட முன்னுரையில், ஆசிரியர் கேசவதேவ், வெளிப்படையாகவே சில செய்திகளைத் தெரிவிக்கின்றார். இலக்கிய விதிகள், இலக்கியத்தரம், பிரிவு ஆகியவை பற்றித் தாம் சிறிதும் அக்கறைப்படவில்லை என்றும், தான் அக்கறை கொண்டிருப்பதெல்லாம் தன் சகமனிதர்கள் எவ்வாறு வாழ்கிறார்கள் என்பது பற்றியும், அவர்களது வாழ்நிலையில் எவ்வாறு மேம்பாடுகளைக் கொண்டு வருவது என்பது பற்றியும்தாம் என்று தெரிவிக்கிறார்.* எனினும், இந்த நாவல், நாவலாசிரியருக்கு இருக்கும் உண்மையான கலைநேர்த்தி மேதைமையை வெளிப்படுத்துவதாகவே அமைந்துள்ளது. ஒரு வியப்புக்குரிய செய்தி; இந்தநாவல் ஆசிரியரின் வழக்கமான பாணியிலிருந்து விலகிச் சென்று ஒரு சோதனை முயற்சியாகச் செய்யப்பட்டது என்பதாகும்.

'கண்ணாடி' வெளிவந்த அதே ஆண்டில், கேசவதேவ் இன்னும் ஒரு கதையை வெளியிட்டார். அது 'ஒரு சுந்தரியுடைய ஆத்மகதை' என்பது. 162-பக்கங்கள் விரிந்து செல்லும் இந்தக் கதை 'சுதந்திரம் விரும்பி'யாக இருக்கும் பவானி என்னும் பெண்ணின் வாழ்க்கைக் கதையாகும். பவானி ஒரு பக்கம் உள்ளூர் 'ரோமியாக்களின்' கவனத்துக்கு ஆளாகிறாள். இன்னொரு பக்கம் அவளது வளர்ப்புத்தாயின் தொல்லை. அவள் ஒரு திமிங்கலப் பசிக்காரி. முதலில் எவன் பணம் கொண்டு வருகிறானோ அவனிடம் பவானியை 'எலிப்பொறியில் தள்ளி மாட்டிவிடுவது' போலத் தள்ளிவிட்டுவிட வேண்டும் என்று பணமே நோக்கமாகக் காத்திருக்கிறாள். இறுதியில், பவானி வீட்டைவிட்டே ஓடிவிடுகிறாள். நகர்ப் புறத்தில்,

* "இலக்கியம் படைக்கவேண்டும் என்பதற்காக நான் எழுதவில்லை; எழுத்தாளனாக ஆகவேண்டும் என்பதற்காவும் நான் எழுதவில்லை. இலக்கியம் எப்போதும் எனது முழு கவனத்துக்கு உரியதாக இருக்கவில்லை. என்னைச் சுற்றியுள்ள வாழ்க்கைதான் எனது அக்கறையுள்ள பிரச்சனையாக நெடுகிலும் இருந்து வந்துள்ளது. நான் வாழ்க்கையை விமர்சிப்பவன்; வாழ்க்கைக்கு விள்க்கம் தருபவன்; அந்த வேலையை நான் செய்யும் போது, அது சிறிதும் எதிர்பாராத விதமாக, ஓர் இலக்கியப் படைப்பாக மாறிவிடுகிறது. எனது எல்லா இலக்கியப் படைப்புக்களும் இவ்வாறு உருவானவையே. யாராவது விமர்சகர் ஒருவர் எனது படைப்புக்களில் 'இலக்கியப் படைப்பு' என்று ஒன்று இல்லை என்று சொல்கிறார் என்றால், அது என்னைச் சிரமப்படுத்தாது; நிச்சயமாக அதற்காக நான் வருத்தப்படமாட்டேன்..." -'கண்ணாடி' நாவலுக்கு எழுதிய முன்னுரையில்.

கரடுமுரடான மனிதர்கள் பலருடன், நேருக்குநேர் பலதடவை மோதிக்கொள்ளும் அளவுக்கு அவள் தள்ளப்படுகிறாள்.

இறுதியாக, அவள், மாடன் என்பவனைச் சந்தித்து, அவனுடன் இசைந்து போகவேண்டியதாகிறது. மாடன் அநாகரிகமானவன்; ஆனால் கண்ணியமுடையவன்; தலைச் சுமை தூக்கும் உழைப்பாளி. அவனைச் சுற்றி ஒரு கூட்டமே இருக்கிறது. பட்சி, மாதவி, குஞ்சி ஆகியோர் அன்பு மனம் கொண்ட குடிகாரர்களாக இருந்தார்கள்; அசிங்கமாய்ப் பேசுபவர்களாக அல்லது அவர்களைப் போன்றவர்களாக இருந்தார்கள். இன்னொரு கூட்டமும் இருந்தது. அது தாழ்ந்த வகுப்பைச் சேர்ந்த விலைமாதர் கூட்டம். இக்கூட்டத்தில் சுலோச்சனாவும் அவளது குழுவும் இருந்தனர். இந்தக் கூட்டம் பவானியின் மீது வெறுப்புக் காட்டும் கூட்டம். இத்தகைய குற்றவாளிப் பட்டாளத்திடமிருந்து மாடன் பலவீனமான அந்தப் பெண் பவானியைப் பாதுகாக்கிறான். சிறிது காலத்திற்கு அவளை மிகவும் பிரியத்தோடு கவனித்துக் கொள்கிறான். இந்த நிலையில் கடைசியாக, வசதிபடைத்த ஒருவன் பவானியின் குறுக்கே வருகிறான்; தன் விருப்பத்தைத் தெரிவிக்கிறான்; அவளும், அதுவரை தன்னை மிகப் பெருந்தன்மையோடு காப்பாற்றி வந்த பாதுகாவலனான, அந்தப் படிப்பறிவில்லாத, ஏழைமாடனை விட்டுவிட்டுப் பிரிந்து போய்விடுகிறாள்.

இந்த நாவலின் முக்கியமான பாத்திரம் மாடன். கேசவதேவ் முன்பு படைத்த கவர்ச்சிகரமான முதன்மைப் பாத்திரமாகிய 'பப்பு'வின் மறு அவதாரம் போலவே மாடன் தோன்றுகிறான். 'சாக்கடையிலிருந்து' நாவலில், இறுதியில் 'பப்பு' மறைந்து செல்லும் காட்சி எவ்வளவு உருக்கமானதோ, அவ்வளவு உருக்கமானது, மாடன் இறுதியில் மறைந்து செல்லும் காட்சி. நிகழ்ச்சிகளின் இயற்கையான தன்மைகளை நேருக்குநேர் கண்டு, அதன் காரணமாக நம்பிக்கை இழந்து, அந்த உணர்வில் அப்படியே மூழ்கிப்போய்விடாமல், தன்னம்பிக்கைக் கோட்பாட்டில் தெளிவுமிக்க, பொறுப்புள்ள ஒரு சமுதாய விமர்சகராகவே இங்கு கேசவதேவ் தோற்றமளிக்கிறார். மனித மனங்களில் தோன்றும் முரண்பட்ட பாச உணர்வுகள் குறித்து அவர் மிகவும் வருத்தம் அடைகின்றார். 'சாக்கடையிலிருந்து' நாவலில் பப்புவுக்கு லட்சுமி செய்த துரோகமானது எந்த அளவுக்கு ஆழ்ந்த உணர்ச்சியுடையதோ, அந்த அளவுக்கு ஆழ்ந்த

உணர்ச்சியுடையது, அவலச் சிக்கல் நிரம்பிய இக்கதையில் வரும் பவானியின் நெஞ்சில் தோன்றும் மாற்றமும். 'மலையாள நாவல் வரலாறு' என்னும் நூலில் டாக்டர் கே. எம். தாரகன் பொருத்தமாகக் குறிப்பிடுவதுபோல, கேசவதேவ் தம் படைப்புக்களில், மனிதன் பற்றிய முழு உண்மையைத் தேடுவது போலக் காட்சிகளை அமைத்திருப்பதானது, கேசவதேவின் கலைப்பாணியில் மிகவும் அரியதோர் அம்சம் ஆகும். அதுமட்டுமல்ல; இதுதான் அவரது உண்மையான, ஒப்புமையற்ற, தனிச் சிறப்புத் தன்மையாகும். 'ஒரு சுந்தரியுடைய ஆத்ம கதை' நாவலில், ஒரு மனிதனுடைய உண்மைத் தன்மை பரிபூரணமான முழுமையில் எப்படி இருக்கும் என்பதைக் கேசவதேவ் நமக்குச் சொல்கிறார். ஒரு / மனிதனுடைய உண்மையான, வீர சாகசச்செயல் என்பது எதில் அடங்கியிருக்கிறது? என்னும் வினாவுக்கு, பப்பு, மாடன் இருவருடைய கதைகள் கேசவதேவ் அளித்த புதிரான விடைகளாக அமைகின்றன. கேசவதேவ் தொடக்கத்திலிருந்து இறுதிவரை ஒரு கேள்வியைக் குறித்து அக்கறை கொண்டிருந்தார். வாழ்க்கை பற்றிய கேள்விகளிலேயே மிக அடிப்பபடையான கேள்வி வாழ்க்கையின் நோக்கம் என்ன? என்பதே. சமுதாயத்தில் தாழ்ந்தும், மித்தாழ்ந்தும், இருக்கும் மாந்தர்களிடமும், வீரசாகசப் பண்புகள் இருக்கும் என்பதன் வெளிப்பாடுகள்தான் இவை என்றும் கூடப் பப்பு-மாடன் கதைகள் அணுகப்படலாம்.

பப்பு,மாடன் ஆகிய பாத்திரங்களை முதன்மைப் பாத்திரங்களாக முன்னிறுத்திக் கேசவதேவ் படைத்திருப்பதில் ஒரு விசேஷம் தெரியவருகிறது. அதாவது, கேசவதேவின் இப்பாத்திரங்கள், சில சம்பிரதாயங்களுக்கு மாறாக, 'பைரன் பாணியில்' எதிர்ப்பு உணர்ச்சி மரபுகளைக் கொண்டவர்களாக இருக்கிறார்கள். இந்தப் போக்கு 'தன்னைத் தானே அழித்தல்' (1964) என்னும் கதையில் மிகச்சரியாகத் தவறின்றி அமைந்துள்ளது. நாயர் தலைவர் அழிவுக்கு ஆளாகும் கதையைக் கேசவதேவ் தமக்கே உரிய பலவண்ணப் பண்புகளோடு சொல்லுவதாகக் கதை ஆரம்பிக்கிறது. பிரபல நிலப்பிரபுவான நாயர் தலைவர் கிருஷ்ணகுறுப்புக்கு, அவருடைய அதிகார தோரணை, அவருடைய மருமகன்கள் மருமகள்கள் ஆகியோரால் கேள்விக்கு உள்ளாக்கப்பட்ட போது, ஏகப்பட்ட மனவருத்தம்! உணர்ச்சி மிகுந்த, அந்த வயது முதிர்ந்த நாயரின் மனத்துக்குள் உறைந்து கிடந்த அதிருப்தியை, உள்ளூர்

வக்கீல்களும் குமாஸ்தாக்களும் மேலும் கிளறிவிட்டார்கள். அவருடைய மருமகன்கள், மருமகள்கள் ஆகியோருக்கு எதிராக ஒரு போர்க்களத்தையே நடத்துவதற்காக, அவர், அவருடைய சொத்துக்களையும் விற்கவேண்டிய நிலைக்குக் கட்டாயப் படுத்தப்பட்டார். உள்ளபடியே அவர் ஒரு பெரிய முட்டாள். சிறிதும் தயக்கமின்றி மருமகனால், தான்கொல்லப்பட்டதாக அவரே எழுதிக் கொடுத்தார்; கொலை நடந்துமுடிந்த பிறகு கொலை செய்யப்பட்ட ஆள் வாக்குமூலம் எழுதிக் கொடுத்ததுபோல!

அந்த வயது முதிர்ந்த மனிதரின் விதி வித்தியாசமாக இருந்தது. அந்த மனிதரின் கதை நமக்குள் பரிதாபத்தை, ஓர் அலட்சிய பாவத்தை, பரிகாசகேளிக்கை உணர்வை எழுப்புகிறது. இந்த நாவல் (பக்: 208). கூட்டுக் குடும்பம் சிதைவுற்ற காலக்கட்டத்தில், கேரளாவில், சட்ட நுணுக்கமெல்லாம் தனக்குத் தானே தெரியும் என்று தனக்குத்தானே சட்டம் பேசித் திரிந்த மனிதர்கள் மீதான கடுமையான குற்றச்சாட்டாக அமைகிறது இந்த நாவல்.

1963–இல் கேசவதேவ் 'பக்கத்துவீட்டுக்காரர்கள்' என்னும் மிகச் சிறந்த நாவலை எழுதி முடித்தார். இந்த நாவல், கேசவதேவுக்குப் பல வெற்றிகளை ஒன்றன்பின் ஒன்றாகக் கொண்டுவந்தது. அந்த வெற்றிகளுள் மத்திய அரசின் சாகித்திய அகாதெமி விருது, சோவியத்து நாட்டு நேரு விருது ஆகிய இரண்டும் அடங்கும்.

இலக்கியம், வாழ்க்கை பற்றி வித்தியாசமான பல்வேறு நோக்குகள் கொண்ட பலரும், 'பக்கத்துவீட்டுக்காரர்கள்' நாவலை பல்வேறு கோணத்தில் பார்த்து விளக்கம் தந்தார்கள்; விமர்சனம் செய்தார்கள். கேரளாவில் செல்வாக்கு மிக்க இனம்நாயர் இனம். கேசவதேவ் இந்த இனத்தைச் சேர்ந்தவரே! இந்த நாவலில், அந்த நாயர் இனத்தின் இரண்டு குடும்பங்களின் வீழ்ச்சி எடுத்துரைக்கப்படுகிறது என்று ஒரு சாரார் கருதுகின்றனர். அப்படியானால், இந்த நாவல், நாயர் இனத்தின் சிறப்புமிக்க பழைய வரலாற்று நிகழ்வுகளின் கீர்த்தியையும், புகழையும் பழைமைத் தாகத்தோடுதீட்டிக் காட்டும் படைப்பு எனக் கொள்ளலாம். எனவே இந்த நாவல் சுவைமிக்க பழைய கதை என ஆகிறது. இந்த நாவல் நாயர் இனத்தின் சரிவு பற்றியும், அழிவு பற்றியும் விவரிக்கிறது. பெரிய நாயர் தலைவரின் இரண்டு

மருமகள்கள், தாங்கள் இருவரும் ஆதரவற்ற நிலையில் இருப்பதாக அச்சமடைந்து, தாழ்த்தப்பட்ட சாதிப்பையன் களோடு ஓடிவிடுகின்றனர். இந்த அவலம், தங்களது தலைவர்களை இழந்தபோது யாதவா இனத்துப் பெண்களுக்கு நேர்ந்த அவலம் போன்றது ஆகும்.

பேராசிரியரின் குப்தன் நாயர் வேறுவிதமாகக் கருதுகிறார். கேரளாவின் செல்வாக்குமிக்க இனங்கள் நாயர், ஈழவர், கிறித்தவப் பிரிவினர். இம்மூன்று பிரிவுகளும், நிலப்பிரபுத்துவ முறையிலான வாழ்க்கை முறைக்கு அரைகுறை மனத்தோடுதான் விடை கொடுக்க முன்வருகின்றன. அதே போல, புதிய உலகத்தை வரவேற்பதிலும் அரைகுறை மனதுதான். இவ்வாறிருந்த செல்வாக்கு மிக்க மூன்று இனங்களின் கால அடிப்படையிலான வரலாறே இந்த நாவல் என்று அவர் கருதுகிறார். அந்த மாறுதல் எவ்வாறு மெதுவாக நடைபயின்றது என்றும், வரலாறு என்னும் 'புல்டோசர்' எந்திரம் எவ்வாறு அனைத்தையும் சரிசெய்தது என்றும், கேசவதேவ் விவரிக்கிறார். இது விஞ்ஞான பூர்வமான சரியான நிகழ்ச்சியே என்றும் அவர் கருதுகின்றார். இந்தப் பொருளில் பார்த்தால், இந்த நாவல் பத்மநாபபிள்ளை என்னும் தலைமைப் பாத்திரத்தின் அவலக்கதை அல்ல; மாறுதல் காலத்திய கேரள மாநிலத்தின் மூன்று இனங்களின் மூன்று தலைமுறை நாயகன், நாயகிகள் பற்றிய மிக நீண்ட கதை என்றே சொல்லலாம். மரபு சார்ந்து வந்துள்ள நிலப் பிரபுத்துவ சமுதாயத்தில், உள்ளூர் தாழ்த்தப்பட்ட சாதியில் தோன்றி விசுவாசகுணத்தோடு தன்னைத்தானே உருக்கித் தியாகம் செய்து கொள்ளும் பாத்திரம் குஞ்சன்; குஞ்சன் எதிர்கொள்ளவேண்டிய நிலையில் இருக்கிற குஞ்சனின் பெரிய எஜமானர் பத்மநாபபிள்ளை; தேவைப்பட்டால், 'ஓக்' மரம் போன்றுள்ள அஞ்சலி மரத்தைத் தான் ஒருத்தியாகவே நின்று வெட்டிச் சாய்க்கக்கூடிய புராணகாலத்துப் பெண்போன்றவளாகிய பத்மநாபப் பிள்ளையின் பாட்டி குஞ்சுலெட்சுமியம்மா; பத்மநாப பிள்ளையின் இயல்புகளையெல்லாம் கொண்டு, அவரது வாரிசுகளாக வரும் நாயர் இனத்து இளைய தலைமுறை யினராகிய ராமச்சந்திரன், அவனுடைய சகோதரி வசுமதி; இவர்களுக்கு எதிர் இணையாக வரும் ஈழவ இனத்தைச் சார்ந்த வாசு, திவாகரன், யசோதரா ஆகிய மூவர் - ஆகிய அனைவரும் சரிசமமான வேகத்தில் நாவலில் படைக்கப்பட்டுள்ளனர்.

இவர்களது படைப்புச் சித்திரிப்பு கேசவதேவின் மேதைமையை விளக்குவதாக அமைகிறது.

கேரளாவின் மூன்று முக்கிய இனங்களின் பிரதிநிதியாகப் படைக்கப்பட்ட பாத்திரங்களின், மிகப் பெரிய பல்கருவி இசை போன்ற காதல் விவகாரங்கள், சச்சரவுகள், விழாக்கள், குடும்பப் பகைமைகள், வினைகள் – எதிர்வினைகள் ஆகிய அனைத்தும், விடுதலை பெற்ற ஐம்பதாண்டுக் காலப் பரப்பின் பின்னணியில் பல்வேறு நிகழ்ச்சிகள் வழியே சித்திரிக்கப்படுகின்றன. மாறுதல் காலத்துக் கேரளாவின் வரலாற்றை நுண்ணியல் பார்வையிலும் பேரியல் பார்வையிலும் பார்த்து எடுத்துச் சொல்லும் நாவலாகவும் இது அமைகிறது.

இந்த நாவலின் தலைமைப் பாத்திரமும், முதுகெலும்பு போன்றவருமான பத்மநாப பிள்ளையை எடுத்துக் கொள்வோம். அவர் பிரம்மாண்டமான, பெரிய, மிக உயர்ந்த, மனபலம் மிக்க பாத்திரம். அவர், அவருடைய பெருந்தன்மை, நேர்மைப் பாங்கு, மனப்பக்குவம் ஆகிய இயல்புகளின் காரணமாகவே அழிந்து போகிறார். மதிப்பீடுகள் மாறி வரும் உலகத்தில், வஞ்சகமும் தந்திரமும் நிறைந்த உலகத்தில், குஞ்சுவரீது, அவனது மனைவி போன்ற பகட்டான தொழிலதிபர்கள் உள்ள உலகத்தில் பத்மநாப பிள்ளை, எதிர்க்கப்பட்டுத் தோற்கடிக்கப் படுகிறார். உடலாலும் ஆத்மார்த்த ரீதியிலும் அவர் அழிந்து போகிறார்.

பிரம்மாண்டமான பாத்திரமாகிய இவருடைய பெண்மைத் தன்மை மிக்க மெல்லிய பண்புகளும் கூட மிகச் சிறப்பாகச் சித்திரிக்கப்பட்டுள்ளன. பத்மநாப பிள்ளையின் முதல் மனைவி தேவகி அம்மா, சீரழிந்து கொண்டிருந்த அசல் நாயர் இனத்துப் பெண்ணாக வருகிறாள்; அந்த இனத்தின் விநோதமான மரபைச் சார்ந்தவள்; தவிர்க்க முடியாமல் இவ்வாறு உருவாகிவிட்டவள்; பாலுறவு விவகாரங்களில் நெறிமுறை இல்லாத பெண்.* அவருடைய இரண்டாவது

---

* மேலைநாட்டுக்காரர்களே பொறாமைப்படும் அளவுக்குக் கேரள நாயர் இனத்தாரிடம் சுதந்திரமான காதல் வாழ்க்கை முறை ஒரு காலத்தில் நிலவி வந்தது. அத்தகைய கனவுலகத்தை டபிள்யூ. டபிள்யூ.லாரன்ஸ் 'நாயர்களின் சாம்ராஜ்ஜியம்' என்னும் நூலில் சித்திரிப்பதைப் பார்க்கலாம். இந்த நவீன காலத்தில், அந்த மரபின் ஒரு வித்தியாசமான வாரிசாகத் தேவகி அம்மாள் இருக்கிறாள்; அந்த மரபின் வகை மாதிரியாகவும், தனிப்பட்ட ஒருத்தியாகவும் இருக்கிறாள்.

மனைவி தாட்சாயணி அம்மா, ஒரு வகையான ரோமானியக் காவியப் பாணிப் பெருமாட்டி. பத்மநாபப் பிள்ளையின் சகோதரி சுமதி அம்மா உருவத்தில் தான் பெண்; மற்றபடி அவள், மதிப்பிற்குரிய நாயர் தலைவர் பத்மநாபப் பிள்ளை மாதிரியே இருப்பாள். மலையாள நாவலின் நம்பகத் தன்மை மிக்க திறனாய்வாளரும், மலையாள நாவல் சாகித்திய சரிதம் என்னும் நூலின் ஆசிரியருமான டாக்டர் கே.எம். தாரகன் குறிப்பிடுவது போல, சுமதி அம்மா மாட்சிமை மிக்க, அற்புதத் தோற்றமுடைய, ஒளி பொருந்திய பெண்ணாக இருந்தாள். கேரளப் புனைகதை உலகத்தின் பெரிய மேதையான சி.வி.ராமன் பிள்ளை படைத்தளித்த ஆண்-பெண் பாத்திரங்களுள், அதி அற்புதப் பாத்திரம் 'சுபத்ரா' என்னும் பாத்திரம். கேசவதேவ் படைத்த சுமதி அம்மா பாத்திரத்தை, சுபத்ராவுக்கு இணையாக வைத்து டாக்டர் தாரகன் பேசுகிறார்.

மிகவும் ருசிகரமான விஷயம், குஞ்சுவரீது, குஞ்சன், பத்மநாபபிள்ளை ஆகியோரின் மனைவிமார்களாகிய மூன்று பெண்களையும் சித்திரிக்கும் போது, கேசவதேவ், அவர்களுக்கு இடையே காணப்படும் நல்ல தன்மைகளின் வேறுபாட்டு அம்சங்களைத் தீட்டிக் காட்டுவது ஆகும். மூவரில் ஒவ்வொருவரும் கேரளப் பெண்மையின் மிக நுண்மையான பரிசுத்தத்தின் சித்திரிப்புக்களாகவே உள்ளார்கள். குஞ்சனின் மனைவி கல்யாணியை நவீன காலத்து ஊர்மிளை என்றே சொல்லி விடலாம்.

இந்த நாவலைப் பற்றிச் சுருக்கமாகச் சொல்வதென்றால் இப்படிச் சொல்லலாம்: சித்திரிக்கப்பட்டுள்ள பாத்திரப் படைப்பில் காணப்படும் வேறுபாட்டுத் தொடர்பு அம்சங்கள் மிக நுண்மையாக அமைந்துள்ளன; வியப்பளிப்பவையாகவும் இருக்கின்றன. பத்நாபப் பிள்ளை பாத்திரப் படைப்பை எடுத்துக் கொள்ளலாம். பத்மநாபப் பிள்ளை தன்னையே தியாகம் செய்யக் கூடியவர்; நேர்மையாளர்;அவல நாயகர்; அவரைக் கொண்டே வேறுபடுத்திக் காட்டிச் சித்திரிக்கும் நுணுக்கம் குறிப்பிடத் தக்கது. அவரது மூன்று முகப் பரிமாணம் சித்திரிக்கப் படுகிறது. குடிவெறியும், குடி ஆசையும் கொண்டு மிதந்து திரியும் அவரது குணாம்சம் அவருடைய பிற பண்புகளில் இருந்து மாறுபட்டது.

பப்புகுறுப்பு எப்போதும் மாப்பிள்ளையாக இருப்பவர். அவர் பதின்மூன்றாவது முறையாகத் திருமணம் செய்து

கொள்ளவில்லை என்று நாவல் நமக்குச் சொல்கிறது. அதற்குக் காரணம், பதின்மூன்றாவது முறையாகத் திருமணம் செய்யவிடாமல் மரணம்தான் அவரைத் தடுத்துவிட்டது. இப்படியாக அவர் தனது பன்னிரண்டாவது திருமணத்தோடு இறந்துவிட்டார். மாதவ குறுப்பு, சேவல் சண்டையைப் பொறுத்த வரையில், அதன் மீது, 'நெப்போலியனிய' பாணியில் கழிபெருங்காதலே கொண்டவர். சேவல் சண்டையின் போது, போட்டியில் கீர்த்தி பெற்ற சேவலைத் தோற்கடித்துத் தன் சேவலை ஜெயிக்க வைக்க வேண்டும் என்பதற்காக, போட்டி அமைப்பாளருக்குப் பல ஏக்கர் நிலங்களையே லஞ்சமாகக் கொடுத்தவர். அந்த நாசகாரக் கும்பலுக்குத் தலைவனாக வரும் குஞ்சுகுறுப்பு ஒருவர் பின் ஒருவராகப் பதினாறு பெண்களைத் திருமணம் செய்து கொண்டவன். ஒருவருக்கு ஒருவர் பகைத்துக் கொண்டு, சண்டை இட்டு இரண்டு நாயர் வீடுகள் வீழ்ந்ததற்குக் காரணம் இந்தக் குற்றவாளி குஞ்சுகுறுப்புதான்.அந்த இரண்டு வீடுகளும் இறுதியில் நொறுங்கி அழிந்து போயின. பச்சழிவீடும் மங்கலசேரி நாயர் வீடும் இவ்வாறு அழிந்து சூனியத்தால் விழுங்கப்பட்டுவிட்டன.

நிலப்பிரபுத்துவத்திலிருந்து முதலாளித்துவத்திற்கு மாறுதல் அடையும் காலக்கட்டத்தின் வரலாறு என்று இந்த நாவலை மதிப்பீடு செய்யலாம். நவீனத்துவம், அது கொண்டிருக்கும் பிடிமானங்களைப் பார்க்கும் போது, இந்த நாவலின் பாடுபொருளே அந்த நவீனத்துவம் தான் என்பது தெளிவாகும். இந்த அடிப்படையில் இந்த நாவல் இரண்டு உலகங்களைச் சித்திரிப்பதாகிறது.ஒன்று இறந்துவிட்ட உலகம்; அடுத்தது, இனி தோன்றுவதற்குப் போராடிக் கொண்டிருக்கிற உலகம். இவ்வாறாக, கேரள மாநிலத்தின் மூன்று தலைமுறை மக்களின் கதையாகிய இந்த நாவல், விலை மதிக்க முடியாத சமூக – அரசியல் ஆவணம் ஆகிறது. மேலும், இந்த நாவல், ஜனநாயக மக்கள் அடைந்த விழிப்புணர்ச்சியைச் சொல்லும் கதையாகவும் அமைந்து முற்றிலும் சிலிர்ப்பூட்டும் படைப்பாகவும் ஆகிறது.

சேசவதேவ் மூன்று இனங்களை நாவலில் சிரமம் ஏதுமின்றி வெகு இயற்கையாய் மேதைமையோடு சித்திரிக்கின்றார். நாயர் இனத்தின் நிலப்பிரபுத்துவப்பீடு, பெருமை, வீழ்ச்சி, மேகத்திரளிடையே ஞானவட்ட ஒளி, பிரகாசம் செய்வது போல் நாயர் இனம் அவல வீரத்துடன்

பிரகாசித்த காலங்கள் எல்லாம் தோன்றச் சித்திரிக்கப்படுகின்றன. இதே போன்று சித்திரிக்கப்படுகிறது ஈழவ இனத்தின் கதையும். ஈழவ இனம் ஒரு புதிய குழுவாகப் புத்துயிர்ப்பு பெற்ற இனம்; சென்ற காலத்தில் உரிமைகள் மறுக்கப்பட்டு, தாழ்ந்த நிலையில் வைக்கப்பட்டு, பல்வேறு தடைகளால் தட்டுத் தடுமாறிக் கிடந்த இனம் ஈழவ இனம். புனிதப் புரட்சிக்காரர் நாராயண குரு, அவரது தளபதி போன்ற தீர்க்கதரிசனக் கவிஞர் குமரன் ஆசான் போன்றவர்களால், இந்த ஈழவ இனம் எவ்வாறு சுதந்திர வெளிச்சத்திற்குக் கொண்டு வரப்பட்டது என்ற சித்திரிப்பு சிலிர்ப்பூட்டக் கூடிய ஒரு காப்பிய வருணனையே ஆகும். சிதைந்து போன நாயர் இனத்து அகதி மக்கள், இறுதியில் ஈழவ மக்களின் இல்லங்களில் புகலிடம் தேடி வருகின்றனர். சென்ற காலங்களில் அவமானப்படுத்தப் பட்டிருந்த அந்தத் தாழ்ந்த இனத்தவர்கள், இப்போது பழிக்குப்பழி எடுக்கும் நிலைக்கும், இடம் கொடுத்துக் காப்பாற்றும் நிலைக்கும் உயர்கின்றார்கள். அவர்களது முன்னாள் எஜமானர்களின் அனாதை மருமகன்களும், மருமகள்களும் இப்போது சில நிலைகளில் புகலிடம் அளிக்கப்படுகிறார்கள். வேறு சில நிலைகளில், புதுப்பணக்காரர்களாகிய அந்தத் தாழ்த்தப்பட்ட ஈழவர்களால், தீய செயல்களுக்கும் ஆளாக்கப்பட்டார்கள்.

இறுதிக்காட்சியில், மிகமுக்கியப் புள்ளிகளின் மருமகள்கள் இருவரின் நிலை சொல்லப்படுகிறது. ஒருத்தி விலாசினி என்ற அழகு; இவள் ஒரு முஸ்லீம் வியாபாரியுடன் ஓடிவிடுகிறாள்; மற்றொருத்தி, மிகவும் பேரழகுப் பெண் நந்தினி; இவள் ஈழவ நடிகன் ஒருவனோடு ஓடிவிடுகிறாள்.

நாட்டில் வாழும் கிறித்தவ மக்களின் நவீன வாழ்க்கை முறை, இணை சொல்ல முடியாத அளவுக்கு மிகுந்த அக்கறையுடன் இந்த நாவலில் சித்திரிக்கப்படுகிறது. இந்த மூன்று இனங்களில் ஏதாவது ஓர் இனத்தைக் குறிப்பிட்டு, கேசவதேவ், அந்த இனத்தைப் போதுமான அளவு புரிந்து கொள்ளவில்லை என்று, ஒருசார்பான விமர்சகர் கூட குறை சொல்லிவிட முடியாது. யதார்த்த இழைகளையும், சந்திர ஒளி போன்ற கற்பனை இழைகளையும் ஒன்றோடு ஒன்றை ஊடும் பாவுமாய் இழைத்து அவருக்கு உரிய பாணியில், எல்லை சொல்ல முடியாத கலையழகு பொருந்த கேசவதேவ் நாவலைப் பின்னித் தந்துள்ள நேர்த்தி மிக அருமையானது; உறுதியான மேதைமை

படைத்தது. "வியப்புக்குரிய மாய வித்தை யதார்த்தம்" என்னும் புதிய வார்த்தை, நோபல் பரிசு பெற்றவர்களிடம் கூட இப்போதுதான் அறிமுகம் ஆகியிருக்கிறது. ஆனால்,, இந்த "வியப்புக்குரிய மாய வித்தை யதார்த்தம்" கேசவதேவின் படைப்புப் பாணியில் அப்போதே அமைந்து விட்டது!

கேசவதேவ் தனது படைப்பு மேதைமை அனைத்தையும் 'பக்கத்து வீட்டுக்காரர்கள்' நாவல் மூலம் உலகிற்குக் கொடுத்துவிட்டார். இந்த நாவலைத் தொடர்ந்து படைத்த அவரது படைப்புக்கள், அனைத்திலும், ஏதாவது ஒரு வகையில், 'திடீர் முடிவுகள்' அமைந்திருந்தன. 'பக்கத்து வீட்டுக்காரர்கள்' நாவலுக்குப் பிறகு, அந்த மாபெரிய படைப்பில் கேசவதேவ் எட்டிப் பிடித்த உச்ச நிலையை, அவர் வேறு எந்தப் படைப்பிலும் எட்டவில்லை.

அவர் கடைசியாகப் படைத்த நாவல்களுள் 'சுகத்தை வேண்டி' என்ற நாவல், பொறுப்பற்ற ஒரு பெண்ணைப் பற்றியதாகும். பல வண்ணம் பொருந்திய இந்தக் கதையின் பின்னணி 'பஞ்சம்' ஆகும். அந்தப் 'பஞ்சம்' இரண்டாம் உலகப் போரின் போது, கேரள மாநிலத்தின், கடற்கரைப் பகுதிகளை மிகவும் பாதித்தது. அந்தப் பஞ்சப் பாதிப்பு, இந்த நாவலில் மனத்தைத் தொடுகின்ற முறையில் மறுபதிவு செய்யப் பட்டுள்ளது. கதையின் நாயகியின் தந்தை, சங்கு செல்வாக்கு மிகுந்த நிலப்பிரபு. பின்னர் தொழில்துறைக்கு மாறுகிறார். தொழில் துறையில் வெற்றி பெற முடியாமல் தடுமாறிப் போகிறார்; திவாலா ஆகிறார். ஒரு நாள் இரவில், தன் பகுதி வீட்டிலிருந்து, ஒரு போணிஅரிசிக் கஞ்சியைத் திருடிக் கொண்டு ஓடி வருகிறார். அப்போது தெரு நாய் ஒன்று அவர் மீது பாய்ந்து, கடிக்கிறது. நாயின் பாய்ச்சலில் இருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்ள முடியாத அவர், நடுவீதியில் விழுந்து இறந்து போகிறார். அவரது இறப்புக் காட்சிதான் நாவலின் தொடக்கக் காட்சி. சங்கு கஞ்சி திருடியது, வீட்டில் பட்டினியாய் இருக்கும் தன்னுடைய இரண்டு மகள்களுக்காகத்தான். ஆனால் அந்த வயதான மனிதனோ வீட்டுக்குத் திரும்பவில்லை; வீதியில் தெருநாயின் தாக்குதலுக்கு ஆளாகி அங்கேயே மடிந்து போகிறான்.

சங்குவின் மகள்கள் நகருக்கு வந்து சேர்கிறார்கள். சமுதாயத்தின் சம்பிரதாயங்களை எல்லாம் அவர்கள் மீறிக்

கொண்டு, எதிர்த்து, விபசாரம் செய்யத் தொடங்குகிறார்கள்; செழிப்படைகிறார்கள். இந்த நாவலின் ஒரு பகுதி 'பெர்னாட்ஷா பாணி' யில் எழுதப்பட்டுள்ளது. பஞ்சக் கொடுமைகள் பற்றி அவர் தீட்டியிருக்கும் பகுதிகள், 63-வயதிலும், கேசவதேவ் எவ்வளவு தூரம் அறிவாற்றலில் கூர்மையாக இருக்கிறார் என்பதைத் தெளிவுபடுத்துகின்றன. இருந்த போதிலும், 'சுகத்தை வேண்டி' என்ற இந்த நாவலைக் கேசவதேவின் குறிப்பிடத் தக்க படைப்பு என்று சொல்ல முடியாது.

'அந்த முதல்கதை' (1968) என்ற படைப்பு எதிர்பார்ப்புக்கு உட்பட்டதாக இல்லை. வெகு தொலை தூரப் பகுதியில் தங்கியிருக்கும் அந்த இளைஞனுக்கு அந்நியப் பொருள்கள் மீது மிகுந்த ஆசை. அப்படிப் பட்ட இளைஞன் பற்றிய கதை இது. அவன் தன் முழு நேரத்தையும் எழுதுவதிலேயே செலவழிக்கிறான். எனினும், தன் அக்கம்பக்கத்தார்களின் அனைத்து பிரச்சனைகளாலும் கவரப்படுகிறான். அங்கே, அவன், ஓர் ஏழைப் பெண்ணுக்குப் 'பாதுகாவலன்' பொறுப்பை ஏற்றுக் கொள்ள வேண்டியிருக்கிறது. அந்தப் பெண் கடத்தல் ஆசாமி ஒருவனால் துன்புறுத்தப்பட்டவள். அவளுக்கு அவன் பாதுக்காப்பளித்து, தனது வேறு பிற திட்டங்களையெல்லாம் விட்டு விடுகிறான்.

இந்தக் கதை கேசவதேவின் சொந்த வாழ்க்கையின் ஒரு பகுதியை நமக்கு நினைவூட்டுகிறது. அவருடைய சுயசரிதைக் குறிப்புக்கள் சிறிது சிறிது இருந்தபோதிலும், நாவல் ஓர் ஒழுங்கில் இல்லாமல், சோர்வு தரும் படைப்பாக இது அமைந்துவிட்டது. அவரது வேறு எந்தப் படைப்பும் இந்த அளவுக்குச் சோர்வு தரவில்லை.

எப்படியானாலும், கேசவதேவின் இயல்பு, திடீரென்று எதையாவது உரத்துச் சொல்லிக் கொண்டிருப்பார். அதே ஆண்டில், சமகாலத்தவர்களுக்குக் குறிப்பிடத் தக்க எச்சரிக்கை விடுக்கும் முறையில் இன்னொரு நாவலைக் கொடுத்து, உலகத்தை வியப்பில் ஆழ்த்திவிட்டார் கேசவதேவ். அந்த நாவல் 'அதிகாரம்' என்பதாகும்.

இந்த நாவலைக் கேசவதேவ் ஒரு முன்னுரையோடு தொடங்குகிறார். இது ஆசிரியர் நூலுக்கு எழுதும் வழக்கமான முன்னுரை அல்ல. தவளைகள் பிரயாணம் மேற்கொள்ளும் ஒரு பழங்கதையோடு தொடங்குகிறது இம் முன்னுரை. தவளைகள்

எல்லாம் ஒன்றாய்ச் சேர்ந்து, பிரம்ம தேவனைச் சந்தித்து, தங்களை ஆட்சி செய்வதற்கு ஒரு ராஜாவை அனுப்புமாறு கேட்டுக் கொள்வதற்காக அவை தூதுக் குழுவாகச் செல்கின்றன.

பிரம்மதேவன் தவளைகளுக்கு ஒரு மரக்கட்டையைக் கொடுக்கிறான். தங்கள் ராஜா இப்படிப் பேச்சு மூச்சின்றிக் கிடக்கின்றாரே, என்று தவளைகள் ஏமாற்றம் அடைகின்றன. அவை மீண்டும் பிரம்ம தேவனிடம் சென்று, தங்களுக்கு ஒரு செயல்பாடு மிக்க ராஜா வேண்டும் என்று கேட்டுக் கொள்கின்றன. பிரம்ம தேவனும், 'சரி', தருகிறேன்' என்றார். உடனே, ஏற்கனவே தரப்பட்டிருந்த மரக்கட்டையின் மீது ஏறி உட்கார்ந்த நிலையில் ஒரு நாரை தோன்றியது; தவளைகளும் பார்த்தன. தவளைகளின் குளத்தில் மையத்தில் அந்த நாரை வந்து அமர்ந்தது.

கேசவதேவ் தொடர்ந்து பேசுகிறார்: "தவளைகளின் இராஜ்ஜியத்தில், தவளைகளை ஆளுவதற்கு ஒரு நாரை ராஜாவின் ஆட்சி இப்படித்தான் ஆரம்பித்தது. இன்றும் கூட நாரை மனிதர்கள்தான், தவளை மனிதர்களை ஆளுகின்றார்கள்"

இந்த நாவலில் கேசவதேவ், 'செலிக்கரா' என்னும் கற்பனை ஊரைப் படைக்கிறார். இது சுதந்திரப் போராட்ட வீரர் ஒருவர் வாழும் நகரம் போலவும், நெருக்கமில்லாத, கூரை வேய்ந்த கேரளாவின் புறநகர்ப் பகுதி போலவும், சுதந்திர இந்தியக் கிராமம் போலவும் சித்திரிக்கப்படுகிறது. அந்த இடத்தில் நிகழும் வாழ்க்கை மாற்றங்களை இந்த நாவல் மிக முக்கியமாக விவரிக்கிறது. காலனி ஆதிக்கத்தின் அடிமைத்தனத்தில் இருந்து விடுபட்டு, சுதந்திரம் பெற்ற ஓர் இந்தியக் கிராமத்தில் நிகழுகின்ற மாறுதல்களின் நாடித் துடிப்பைக் காட்டுவதால், இந்த நாவல் மிக முக்கியமான ஆவணமாகவே அமைகிறது. நிகழ்ந்து கொண்டிருந்த மாறுதல்கள் பற்றி இந்த நாவல் ஒரு கணக்கெடுப்பு ஆய்வே நடத்துகிறது எனலாம். நமது சமுதாயத்தின் ஒட்டுமொத்தமான, சமுதாய–அரசியல் ஒழுக்கம் பற்றிய விதிமுறைகள் சம்பந்தமான கண்டுபிடிப்புக்களையும் இந்த நாவல் முன் வைக்கிறது. இவை அனைத்தும், கோபதாபமும், ஆத்திரமும் கொண்ட தீர்க்கரிசி ஒருவரின் ஆற்றல் மிகுந்த நடையில் தெரிவிக்கப் பட்டுள்ளன. முன்

எப்போதும் இருந்ததை விடவும், கேசவதேவ், இங்கே தான் தனது முழு மேதைமையோடு தோன்றுகிறார்.

"அதிகாரம் களங்கம் செய்கிறது;
முழு அதிகாரம் முழுமையாய்க்
களங்கம் செய்கிறது!"

ஒவ்வொருவராலும் பாராட்டப்படுகிற விடுதலைப் போராட்ட வீரர் கோபாலன் நாயர். தன்னையே தியாகம் செய்யும் தலைவர்; நீதிக்காகப் போராடும் போராளி; இத்தகைய இவர், வரலாறு அவருக்கு அதிகாரத்தைக் கொடுத்தவுடன், மிகச் சீக்கிரத்திலேயே மாறிவிடுகிறார். மாசுமறுவற்ற, மக்கள் தலைவராகிய கோபாலன் நாயர், அதிகாரத்திற்கு வந்ததும், முழுவதுமாய்க் களங்கப்பட்டுப் போகும் நிலைக்கு எவ்வாறு ஆனார்? என்றும், இறுதியில் 'அதிகாரம்' நாவல் நமக்குச் சொல்லுகிறது. கட்டுக்காட்டாய் ரூபாய் நோட்டுக்கள், பண்ணைச் சொத்துக்கள் ஆகியவை அவரைச் சுற்றி ஆட்சி செலுத்தின; அதே போல, மாலை மரியாதைகள், விருந்து உபசாரங்கள், பொது இடங்களில் மாபெரும் வரவேற்புக்கள் இப்படி இவையும் அவரைச் சுற்றிக் கொண்டிருந்தன.

புதிதாகச் சட்டமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ள கோபாலன் நாயருக்குக் குதூகலமாகக் கொடுக் கப்படும் வரவேற்பு நிகழ்ச்சியோடு நாவல் தொடங்குகிறது. அதே போல் நாவலின் இறுதியிலும் ஒரு வரவேற்புக் காட்சி. பொதுமக்கள் சேர்ந்து கம்யூனிஸ்ட் கட்சியின் சட்டமன்ற உறுப்பினர் ஒருவருக்கு வரவேற்புக் கொடுக்கின்றனர். அந்தக் கம்யூனிஸ்டுக் கட்சி உறுப்பினர் தேர்தல் களத்தில் கோபாலன் நாயரைத் தோற்கடித்தவர். இவ்விரண்டு வரவேற்பு நிகழ்ச்சிகளின் வரவேற்புக் கமிட்டிகளில் இடம் பெற்றிருப்பவர்கள் அதே ஆட்கள்! மிதவாத நிறுவனங்களால் ஆதரிக்கப்பட்டவரும், இனவாத அரசியல் கூட்டத்தாரின் கொக்கி போன்றவரும், பெரிய நிலப்பிரபுவுமான பனவெலி கோவிந்தபிள்ளை! கொலைபாதகனான லேவாதேவிக் கடைக்காரனும், இப்போது,' பேங்க்கர்' என்று அழைக்கப்படுபவனுமான, 'பேங்க்கர் தாமஸ்'! சமீப காலம் வரை முட்டை விற்று வந்தவனும், வீதிக்கு வீதி பொருள் விற்கும் ஒரு வியாபாரியாக இருந்தவனும், 'மைதீன்' என்ற பெயர் உடையவனும், ஆனால் இப்போது மரியாதையோடு 'ஹாஜி' என்னும் அடைமொழி சேர்க்கப்பட்டுள்ளவனுமான

மைதீன் ஹாஜி! - ஆகிய இவர்கள் அன்றும் வரவேற்புக் குழுவினர்கள்! இன்றும் வரவேற்புக் குழுவினர்கள்! அனைவரும் சுய நலத்தின் பிரதிநிதிகள்! கேசவதேவின் மொழிகளில் இப்படிச் சொல்லலாம்: "இங்கே எதுவும் புதிது அல்ல; பழைய நிகழ்ச்சிகளே திரும்பவும் நிகழ்கின்றன."

நாவலின் இடம் பெறும் ஸ்ரீபாலோட் என்னும் கவிஞரும் அப்படித்தான் இருக்கிறார். கவிஞரும் அன்றைய சந்தர்ப்பவாதிகளோடு தான் இருக்கிறார். இந்த மனிதர், ராஜா பதவியில் இருக்கும் வரை "ராஜாவுக்கு ஜே!" சொல்லத் தயாராக இருந்தவர்! முன்பு போலவே இப்போது "மந்திரிக்கு ஜே!" சொல்லுவதற்குத் தயாராக இருப்பவர். இதில் வருந்துவதற்குரிய ஒரு விஷயம் என்ன என்றால், கால்முடமாகிய விடுதலைப் போராட்ட வீரர் ராகவன், காச நோயாளியான ராம கிருஷ்ண பிள்ளை, சிவராமபிள்ளை மற்றும் இவர்கள் போன்றவர்களுக்கு இங்கே இடம் இல்லை என்பது தான்!

தேநீர்க்கடையின் வெட்டிப் பேச்சு அரசியலைச் சித்திரிக்கும் இடத்தில் சிறிது நகைச்சுவை இருக்கிறது. 'பாட்டாளி ஓட்டல்' நடத்துபவர்களுக்கும், 'மகாத்மா ரெஸ்டாரண்ட்' நடத்துபவர்களுக்கும் இடையே உள்ள போட்டியைச் சித்திரிக்கும் இடத்தில் நகைச் சுவை இருக்கிறது.அதே போல, இனவாதம் பேசுவோரின் கையாட்களான ரம்பா, கமலாட்சி, மரியம், சைனபா ஆகிய நடத்தைக் கெட்ட பெண்களுக்கும், நாயர், ஈழவ, கிறித்தவ, இஸ்லாமியத் தந்திரவாத அரசியல்காரர்களுக்கும் இடையே போட்டியைச் சித்திரிக்கும் இடத்திலும், நகைச்சுவை இருக்கிறது. அதே போல, இனவாதியான கோவிந்த பிள்ளை மகனுக்கும் மருமகனுக்கும் இடையே நடக்கும் சண்டை பற்றிய சித்திரிப்பில் சிறிது வேடிக்கை இருக்கிறது. அவர்கள் ஒருவருக்கொருவர் பரஸ்பரம் சொல்லிக் கொள்ளும் குற்றச் சாட்டுக்கள் வெறும் கண்துடைப்பே. மற்றபடி பிற நடைமுறைப் பிரச்சனைகளில் அவர்கள் ஒரு குட்டையின் மட்டைகளே! இவற்றையெல்லாம் கவனிக்கும் போது, இந்த நாவல் அந்தக் காலத்து வாழ்க்கை பற்றிய புள்ளி விவரங்களைச் சிதறலாகத் தருகிறது என்று சொல்லப்படலாம். வேறு வார்த்தைகளில் சொல்வதென்றால், இது, நாற்றம் எடுத்தப் போன ஊழல் நடவடிக்கைகள் பற்றிய கதை; நாம் மிக நன்றாகத் தீட்டி வைத்துள்ளோமே, நகரியத்

திட்டங்கள், அவைகளுக்குப் பின்னால் இருக்கும் ரகசியச் சதிகள் பற்றிய கதை!

அதுமட்டுமல்ல. பள்ளி/கல்லூரி நடத்துகிறோம் என்ற பெயரில் நடந்து வரும் மிக மோசமான நவீன காலத்திய வியாபாரத்தை நாவல் நகைச்சுவையோடு அம்பலப்படுத்துகிறது. சாதி அமைப்பு மீது வெறுப்பு ஏற்பட்ட ஆரம்ப காலங்களில் இந்துக்கள் கூட்டம் கூட்டமாக மதம் மாறிய வரலாறும் இந்த வரலாற்று ஏட்டில் மிக விரிவாகவே விளக்கப்பட்டுள்ளது.

இவையெல்லாம், சந்தேகமின்றி, சுவாரஸ்யம் மிக்கவையே. எனினும் இந்தப் படைப்பின் அடிநாதமாக இருப்பது அவலம்! நம் சிறப்பு மிக்க புரட்சிக் கவிஞரும், சமூக நீதிக் கவிஞருமான, தீர்க்கதரிசி குமரன் ஆசான் அவர்களுடைய பாடல் அடிகளைத் தனக்குள்ளே இசைத்தவாறே நாவலின் கதாநாயகன் கீழே வீழ்கிறானே அதுதான் அவலம்!

“சுதந்திரம் தான் தேவாமிர்தம்!
அதுதான் உயிர்!
அது இல்லாத வாழ்க்கை
சாவைப் போன்று பயங்கரமானதே!”

தனக்குப் பரிச்சயமாய் இருந்த இந்தக் கவிதை அடிகளை இசைத்துப் பார்க்க, அவன் பதவியில் இருந்த காலத்தில் மறந்து தான் போயிருந்தான்!

ஆங்கிலக் கவிஞன் சொன்னான்:

“இருந்தாலும் வீழ்ந்தாலும் தேவதை தேவதைதான்” நாவலில் சொல்லப்படும் கோபாலன் நாயரின் வரலாறு ஒரு வீழ்ச்சியின் வரலாறே ஆகும். இருப்பினும் இன்னொரு பக்கம், விடுதலை வீரர் சிவராம பிள்ளையின் சித்திரிப்பு காலங்காலத்திற்கும் நிலைத்து நின்று வசீகரிக்கக் கூடியதாக அமைந்துள்ளது. இகழ்ந்து தள்ளுதற்குரிய மானுடத்தின் சிற்சில வகை மாதிரிகளும் நாவலில் இருக்கத்தான் செய்கின்றன. மனிதருக்குள் இப்படி ஒரு உயர்ந்த கலங்கரை விளக்கமும் யதார்த்தமாய் இருப்பது சாத்தியம்தான் என்பதற்கு அடையாளமாய் நிற்கிறது சிவராமபிள்ளையின் பாத்திரச் சிறப்பும் சித்திரிப்பும். நாவலைப் படிக்கும் போது நாம் கண்டுணர்கிறோம்; ஆறுதல் அடைகிறோம்.

அதிகாரம் - அதனால் விளையும் பிரச்சனை கேசவதேவை வேதனைப்படுத்திவிட்டன! அந்த வேதனையை அவருடைய நெஞ்சம் உணர்ந்தது! பட்ட வேதனையும், நெஞ்சத் துடிப்பும் தான் இந்த நாவலில் சொல்லப்பட்டுள்ளன என்றால் அதில் தவறுதல் ஏதுமில்லை.

காலவரிசைப்படி பார்த்தால், கேசவதேவ் அளித்த அடுத்த நாவல் 'ஒரு லட்சம் ரூபாயும் ஒரு காரும்' (1969) என்பது. இது மாதவன் என்னும் ஒரு தொழிலாளி பற்றிய கதை. திடீரென்று லாட்டரிப் பரிசுச் சீட்டு விழுந்ததில் அவன் ஒரு லட்ச ரூபாய் பெற்றுப் பணக்காரன் ஆகிவிடுகிறான். உடனே அவன் கிராமத்தின் 'முக்கியமான புள்ளி' யாக ஆகிவிடுகிறான். அதுவரை அவனைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாத அவனுடைய உறவினர்கள் எல்லாம் திரண்டு வருகிறார்கள்; வந்து அவனுக்குப் பணிவிடை செய்யவும், அவனை மகிழ்ச்சிப் படுத்தவும் முனைகிறார்கள். உறவுக்காரர் அனைவரும், அந்த பகுதியில் வாழும் ஜனங்கள் அனைவரும், பெரிய நிலப்பிரவும் தங்கள் மரியாதையைச் செலுத்தவும், பண உதவி பெறவும், அவனிடம் வந்து குழுமுகிறார்கள். இனவாரி அமைப்புக்களின் செயலாளர்கள், மற்றும் வேறு பலரும் அவனிடம் விரைந்து வருகிறார்கள். அவன் இருக்கும் இடத்தில் அவனுக்குப் பெரிய வரவேற்பு அளிக்கப்படுகிறது; அந்த நிகழ்ச்சியில் மாநில மந்திரியும், மாண்புமிகு ஆளுநரும் பங்கேற்கின்றனர்.

சந்தேகத்திற்கு இடமின்றி, இவ்வருணனைப் பகுதி, சமுதாயத்தில் நிலவி வரும் காசைக் கடவுளாகக் கும்பிடும்* வழிபாட்டுப் பழக்கத்தின் மீதான கடுமையான கண்டனம்தான். நமது மிக விரிந்த அரசியல் எவ்வாறெல்லாம் அழிந்து போகிறது என்பதையும் அம்பலப்படுத்திக்காட்டுகிறது நாவல்.

வரதட்சணை முறையின் கொடுமை, மிக விசித்திரமான அளவுக்கு வளர்ந்து போயுள்ள உறவினர்க்குச் சலுகை காட்டும் முறை, மிக முக்கியமாக இரக்கமற்ற தன்மை, நம் காலத்தில் நிலவும் சமுதாயத் தீமைகளை மக்கள் கூட்டம் உணர்ந்தறியாத நிலைமை, ஆகிய இவை அனைத்தும் சேர்ந்து, எப்போதும் புரட்சிகர மனிதாபிமானம் கொண்ட ஆசிரியரைச் சோர்வடையச் செய்திருப்பதாகவே இந்நூல் காட்டுகிறது. இந்த

* Mammon - worship -பேராசைக் கடவுளை வழிபடுதல்.

நாவல் வெளிப்படையான ஓர் அங்கதப்படைப்பே; அதே நேரத்தில், மிக மெல்லிதான அவலக் கூறுகளும் தெளிவாகவே இடம் பெற்றுள்ளன.

இந்த நாவலில் வேடிக்கை நிகழ்ச்சிகளும் ஏராளமாய் அமைந்துள்ளன. நாட்டுப்புறத்து முட்டாள் ஒருவன், நகர்ப்புறத்துக்கு மேற்கொள்ளும் பயணத்தை உதாரணாகக் குறிப்பிடலாம். அந்தக் கிராமத்தான் ஒரு லட்சம் ரூபாயை ஒரு பெரிய பாத்திரத்துக்குள் போட்டுத் தூக்கிக் கொண்டு வீட்டுக்குப் பயணம் புறப்படுகிறான். பணம் கொண்டு செல்ல, அரசாங்கம் எத்தனையோ பல ஓலை முறைகள் வைத்திருக்கிறது. இதையெல்லாம் அறியாத அவன் பெரிய பாத்திரத்தைத் தூக்கித் திரிவது வேடிக்கையான சம்பவம்! இந்த நாவல் ஒரு குறிப்பிடத்தக்க சமுதாய விமர்சனமாகவும் அமைகிறது.

இந்த நாவலின் முன்னுரைப் பகுதியில், கேசவதேவ், தன்னுடைய இலக்கியக் கொள்கையை மறுபடியும் தெளிவு படுத்துகிறார்.

“செய்யவேண்டும் என்று நான் நம்பியதெல்லாம், சமுதாயத்தின் விதியை மேம்படுத்த வேண்டும் என்பதே! என்னுடன் வாழும் சக மனிதர்களின் துயரங்களைத் தணிக்க வேண்டும் என்பதே! இந்த எனது நம்பிக்கையின் நிழல், எனது அனைத்துப் படைப்புக்களிலும் படிந்திருக்கின்றன. அவ்வாறு படிந்திருப்பதை இந்தச் சிறிய நூலிலும் பார்க்க முடியும்.”

உண்மைதான்!

நாட்கள் கடந்தன. முதுமை கேசவதேவின் மனத்தை அழிக்கத் தொடங்கியது. மிகவேகமாக உச்சத்திற்குச் சென்ற அந்த மனிதர் திடீரென்று ஒரு மரக்குச்சி விழுவதைப் போலக் கீழே விழ ஆரம்பித்தார். ‘காதல் முட்டாள்’ (1972) என்னும் நாவல், விநோதமான கதையாக வெளிவந்தது. காதலுக்காகத் தன்னையே தியாகம் செய்யும் அப்பாவியின் கதை. இவனும் காரணமில்லை, வேறு யாரும் காரணமில்லை - யார் என்று சொல்ல முடியாத நிலையில் அவன் தன்னை இழக்கிறான். ஆனாலும் இக்கதை உருக்கமானதாகவும் இல்லை; விநோதமானதாகவும் இல்லை; மிகவும் தளர்ந்து போயிருந்த முதுமை வயதில் கேசவதேவ் இதுபோன்ற ஒரு தலைப்பில், ஏன் ஒரு படைப்பை எழுதினார் என்பது புரியாத புதிராகவே உள்ளது.

இருப்பினும், அணையும் சுடரிலிருந்து 'மினுக்' கென்று பொறி வருவதுபோல, கேசவதேவிடமிருந்து இன்னொரு படைப்பு வந்தது. 'உன்னைக் குற்றம் சாட்டுகிறேன்' - என்ற அவரது வழக்கமான குற்றம் சாட்டும் பாணியில் அமைந்த நாவல்; பெயர் " ஒரு நொண்டியின் கதை" (1974).

இக்கதையின் முக்கியமான பாத்திரங்கள் தாமு, தோமா இருவரும் ஆவர். இருவரும் வேலை தேடிக்கொண்டு கிராமத்திலிருந்து வெளியேறுகின்றனர். வேலை எதுவும் கிடைக்கவில்லை. இறுதியில் அவர்கள் ஒரு சன்னியாசியைப் பார்க்கின்றனர். அந்தச் சன்னியாசி, விபூதி, குங்குமம், திருவோடு ஆகியவை அடங்கிய பையுடன் வீதியில் தூங்கிக் கொண்டிருந்தான். அந்த மதிப்பு மிக்க பொருள்களையெல்லாம் இவர்கள் எடுத்துக் கொண்டு ஓடி விடுகின்றனார்.

பக்கத்துக் கிராமத்துக்குப் போய் இளைய சன்னியாசிகளைப் போல இருவரும் வேஷமிட்டு நடித்தார்கள். நல்ல சம்பாத்தியம்!

ஒரு தாயும் மகளுமான இரண்டு பெண்கள் அந்த இளம் சன்னியாசிகளைச் சந்தித்தனர். தாய் அவர்களைப் பார்த்து, "என் மகள் தாயாகும் வாய்ப்பு வருமா?" என்று கேட்கிறாள். சன்னியாசிகள் இருவரும் எல்லாம் தெரிந்தவர்கள் என்று நம்பி அவள் கேட்ட கேள்விக்கு, அவளது நம்பிக்கை பொய்க்காதவாறு பதில் அளிக்க அவர்கள் தயார் ஆனார்கள். "நீ தாய் ஆவாய்" என்று அந்த இளம் பெண்ணை ஆசீர்வதித்தார்கள். இந்த மாதிரி சன்னியாசிகளைக் கடவுளின் மனிதர்கள் என்று நம்பும் நம்பிக்கை ஏற்கனவே சமுதாயத்தில் உண்டு. அந்த நம்பிக்கையைப் பயன்படுத்திக் கொண்டார்கள் அந்த இளைய சன்னியாசிகள்! பின்னர் அவர்கள் இருவரும், இவ்வாறு சன்னியாசிகளாக வேடமிட்டுத் திரிவதைக் காட்டிலும், "காந்திக் குல்லாய்" வியாபாரத்தைக் கமிஷன் அடிப்படையில் செய்கிறோம்; செய்து கட்சிக்கு நிதி தருகிறோம் என்று வியாபாரம் செய்தால் மிகவும் லாபகரமாக இருக்கும் என்று உணர்ந்தார்கள். எனவே நகர்ப்புறத்திற்குச் சென்று, 'காந்திக் குல்லாய்' வியாபாரத்தில் ஈடுபட்டார்கள். கட்சிக்கு நிதி சேர்ப்பதாகச் சொல்லி நன்கொடைகளும் கேட்டார்கள். இப்படிச் செய்யுங்கள் என்று இவர்களைக் கட்சிக்காரர்கள் யாரும் கேட்டுக் கொள்ளவில்லை. கொஞ்ச காலம் வரைக்கும் இந்த 'வியாபாரம்' செழிப்பாக நடந்தது.

அதற்குப் பிறகு, இந்த மோசடிக்காரர்களின் கண்கள் 'கொழு, கொழு' என்று உருண்டு திரண்டு வளர்ந்திருந்த ஒரு பெண் மீது விழுந்தன. அந்தப் பெண் தன் கணவனோடு சண்டை போட்டுவிட்டு, தனியே வசித்தாள்; வசதியாக இருந்தாள். இவர்கள் இருவரும் அவளையும், அவளுடைய அப்பாவித் தந்தையையும் ஏமாற்றச் சதித்திட்டம் தீட்டினார்கள். அந்தப் பெண்ணின் சொத்துக்களிலிருந்து பணம் எடுத்து, உணவு விடுதி நடத்தும் தொழில் செய்யலானார்கள். பின்னர், அவளைத் தங்களது பாலியல் விருப்பத்துக்கும் மிக சுதந்திரமாகப் பயன்படுத்துகிறார்கள். உணவு விடுதி நடத்தும் தொழிலோடு, ஒரு கட்டத்தில் விபச்சாரத் தொழிலும் நடத்தத் தொடங்கினார்கள். அதன் மூலம் நல்ல வருமானம் கிடைத்தது. சத்தியானந்தா, ஞானானந்தா, என்ற போர்வையில் இருந்த அந்தப் போக்கிலிகள், இறுதியில் பேராசை கொண்டவர்களாய், அவர்களைக் காப்பாற்றி நிதி உதவியும் செய்த அந்த மனிதரையும், படுக்கை அறை நாயகியாகவும் இருந்த விஜயா என்ற அந்தப் பெண்ணையும் கொலையும் செய்து விடுகிறார்கள். முடிவாகப் போலீஸ்காரர்களால் கைது செய்யப்பட்டுச் சிறையில் அடைக்கப்படுகிறார்கள்.

'நொண்டியின் கதை' என்பது பழைய மாதிரியே வேடிக்கையும் அவலமும் கலந்த கலவைப் படைப்பு. இந்தத் தன்மையின் காரணமாகவே இப்படைப்பு வெற்றி பெறாத முயற்சியாகிவிட்டது. கல்வி அறிவில்லாத, எளிதில் ஏமாந்து போகிற, கிராமத்துப் பெண்கள், ஜனங்கள் பற்றி கேசவதேவ் இந்நாவலில் எழுதியுள்ள தமாஷான பகுதிகள், சந்தேகத்திற்கு இடமின்றிக் காரசாரமானவையே. ஆனால் 253-பக்கங்கள் வரை விரிந்து செல்லும் ஒரு சமுதாயப் படைப்பில் இது கருத்தில் புலப்படாத ஓர் அம்சமாகவே அமைந்துவிடுகிறது.

அதே ஆண்டில் 'நொண்டியின் கதை' மாதிரியில், இன்னொரு படைப்பும் வந்தது. அதன் பெயர் : 'வெளிச்சம் வருகிறது' என்பதாகும்.

1976-ஆம் ஆண்டில் கேசவதேவின் கடைசி நாவல் வெளிவந்தது. அதன் பெயர்: 'விற்பனையாளன்' என்பதாகும்.

இந்தக் கதையில் இழிகுணம் கொண்ட தந்தை ஒருவன் வருகிறான். அவன் தன் சொந்த வாழ்க்கைக்காகத் தன் மகளை விபச்சாரத் தொழிலுக்கு ஆட்படுத்த நினைக்கிறான். கேசவதேவ்

பெற்றெடுத்த தங்கம் போன்ற பாத்திரமான தங்கம்மா என்ற அவள், கண்ணியமாக வாழ்வதற்குத் தனக்கு வேறு வழி இல்லை என்று எண்ணித் தற்கொலை செய்து கொள்கிறாள். அந்த இளம் பெண்ணின் தர்மசங்கடமான வாழ்க்கைச் சித்திரிப்பு, உள்ளூர்ப்பணக்காரர்களான சங்கரன், பைலி, ராமகிருஷ்ணன், ஆகிய வில்லன் பாத்திரங்களின் சித்திரிப்பு ஆகியவை மிகவும் சுவாரஸ்யமானவையே. இவையெல்லாம் இருந்த போதிலும், நாவல் மிகவும் மந்தமாகவே நடைபோடுகிறது. குறிப்பிட்டுச் சொல்லும் தகுதி படைத்த மனித முயற்சியின் உருக்கமான படைப்பாக இது அமையவில்லை.

குடும்பக்கட்டுப்பாட்டுத் திட்டப் பிரச்சாரப் படைப்பாகக் கேசவதேவ் எழுதியது, "நானா பழிக்கப்படவேண்டும்?" என்பதாகும். 'கனவு' என்று இன்னொரு காதல் கதைப் படைப்பு. இவ்விரண்டு நாவல்களும் இங்கே விரிவாக விவாதிக்கப்படவில்லை. கேசவதேவ் படைத்த இவ்விரண்டு நூல்கள் பற்றி நாம் சொல்லக் கூடியதெல்லாம் இதுதான்: "இவ்விரண்டு நாவல்கள் பற்றி நாம் சொல்லக் கூடியது, அவை இரண்டும் மோசமானவை அல்ல."

# 3. சிறுகதையாளர் கேசவதேவ்

ஐம்பதாண்டுக் காலச் சுறுசுறுப்பான பொது வாழ்க்கையில், கேசவதேவ் பல்வேறு செயல்பாடுகளில் ஈடுபட்டிருந்தார். எனினும் 300-க்கும் அதிகமான சிறுகதைகளை எழுதினார். அவைகளுள் சிலகதைகள் மிகவும் உயர்ந்தவை; மலையாளத்தின் மிகச் சிறந்த சிறுகதைகளுள் சேர்க்கப்பட வேண்டியவை.

"நான் கதவைத் திறப்பேன்"-என்ற சிறுகதை பற்றிச் சிந்திப்போம். இக்கதை கலையம்சம் பொருந்திய சின்னஞ்சிறிய ஓர் அற்புதம். ஓர் அறைக்கு உள்ளேயும் வெளியேயுமாய், ஓர் ஆணுக்கும் பெண்ணுக்கும் நிகழுகின்ற, ஆச்சரியப்படும் அளவுக்கான மிகச்சிறிய உரையாடலைக் கொண்ட சிறுகதை. "நான் கதவைத் திறப்பேன்" என்று அந்தப் பெண் பேசும் வார்த்தைகளோடு 'உச்சநிலை' பெறும் சிறுகதை; இது சிறப்பு மிகுந்த காதல்கதை; உரைநடையில் அமைந்த இசைபோன்ற கதை; அந்த இசைத் தன்மையோடு இனம் காணமுடியாத ஏதோ ஓர் தனித்தன்மை கலந்துள்ள கதை; முழுவதும் சுயமான கதை; அனைத்துப் பருவத்து வாசகர்களுக்கும் சிலிர்ப்பைத் தரக்கூடிய கதை; ஏதோ பெருமைக்குரிய ஒன்றைத் தனக்குள் உண்மையாகவே உள்ளடக்கிக் கொண்டுள்ள சிறுகதை; ஆதாம்-ஏவாள் இருவரது குரல்களும் இணைந்து பொருந்தி அமைந்த சிறுகதை; சாசுவதமான மேல்-கீழ் சுருதிகள் இணைந்து பொருந்திய சிறுகதை; மொழிநடையில் வியக்கத்தக்க அளவுக்குக் கவித்துவ முழுமை அடைந்த சிறுகதை; ஐம்பத்தொரு ஒலிமுறையும் எழுத்தும் கொண்ட மொழியில் தனிச்சிறப்புப் பண்பும் மேதைமையும் பெற்ற சிறுகதை!

அல்லது, 'திரைக்குப்பின்னால் என்ற கதையை எடுத்துக் கொள்வோம்! பொறாமையும் சச்சரவும் மிக்க, கணவன்-மனைவி பற்றிய சுவையான சிறுகதை இது. அவர்கள் இருவருக்கும் இடையில் ஒரு சச்சரவு திடீரென்று ஆரம்பித்துவிடுகிறது; சிறிது சிறிதாய் வளர்ந்து உச்ச நிலைக்கு வந்து விடுகிறது; இருவரும் ஒருவரையொருவர் நட்பு பாராட்டி வாழ்வது, அடிப்படையில்

அவசியமானது என்று அவர்கள் உணர்ந்ததும், அலையானது பின்னடங்கிப் போவது போல அவர்களது சச்சரவும் இறங்கி ஓய்ந்துவிடுகிறது. இறுதியில் தட்ப வெப்பத்துடன் இருவரும் ஒருவரையொருவர் தழுவிக் கொள்கின்றனர். இந்தக் கதையை எந்தவகை வாசகரும் விரும்பிப் படிக்கலாம்.

"நான் கதவைத் திறப்பேன்," "திரைக்குப் பின்னால்"ஆகிய இரு காதல் கதைகளும், படிக்கும் வாசகர்களுடைய புலன்களுக்கு நிலவின் வசீகரத்தையும், இனிமையையும் ஒன்று திரட்டித் தருகின்ற கதைகள். ஆனபோதிலும், கேசவதேவுக்கே உரித்தான அம்சங்கள் இவற்றில் இல்லை. அவருக்கே உரித்தான அம்சங்கள் நெருப்பும் ஜ்வாலையும்தாம்! அவருக்கே உரித்தான சிறப்புக் கூறுகள் தீவிரமும் தீர்க்க தரிசனமும்தாம்!

"கொல்லாதே, சகோதரனே கொல்லாதே"–என்னும் சிறுகதை கட்டளை இடுவதாகவும், பொழுது போக்கு அம்சம் உடையதாகவும் அமைந்த முக்கியமான கதை. கிறுக்குத்தனமான கட்சி அரசியலின் காரணமாக, நமது சமுதாயத்தில் வன்முறைப் புயல் கிளம்பியிருந்தபோது கதை நிகழ்கிறது. கேரளக் கம்யூனிஸ்டுக் கட்சி, கல்கத்தா தீர்மானத்தின்படி, குத்துவாளும் அமிலப் பல்பும் ஏந்தி விடுதலைப் போராட்டத்தை நடத்துவது என்று கொள்கை அளவில் தன்னை ஆயுதபாணியாக்கிக் கொண்டு, தனக்குப் பலம் இருக்கும் இடங்களிலெல்லாம் ஒரு ரத்தக் களரிக்குத் தயாராகிக் கொண்டிருந்த நேரம்! கட்சிக்குக் கீழ்ப்படியாமல் வெளிப்படையாகவே தனது மறுப்பைக் கேசவதேவ் தெரிவிக்கும் முறையில் இந்தக் கதை அமைகிறது. மனிதனைப் புரிந்து கொள்வதுதான் மனிதன் ஒருவனுடைய மனிதாபிமானம் ஆகும்; ;சக மனிதனுடைய துக்கங்களை உணர்ந்து கொள்வதுதான் மனிதாபிமானம்! நம்மைச் சுற்றியும், தொல்லையும் துயரமும் பட்டுக் கொண்டுள்ள தனி மனிதர்களைப் பல்லுக்குப் பல், நகத்துக்கு நகம் என எதிர்த்துக் கொள்வது மனிதாபிமானம் ஆகாது; வெறுப்பு என்னும் கொள்கையைப் பரப்புவது மனிதாபிமானம் ஆகாது என்று கேசவதேவ் இக்கதை வழியே தன் மக்களுக்கு எச்சரிக்கை விடுத்தார்.

சகமனிதர்களின் கண்ணீரைத் துடைக்கிறேன் என்று சொல்லிக் கொண்டு ரத்தத்தைச் சிந்துவது எவ்வளவு மோசமான செயல் என்பதை இக்கதை மூலம் கேசதேவ் பிரகடனம்

செய்துகாட்டுகிறார். இவை அனைத்தும் இக்கதையில் ஒரு பிரச்சார நெடியில்லாமல், மிகவும் கலாபூர்வமான பாணியில், ஒரு வாழ்க்கை நாடகத்தைப் படைத் தளிப்பதுபோல, முழுவதும் எளிய மொழிநடையில், சொல்லப்பட்டுள்ளன.

கேசவதேவின் சிறுகதைகள், சாதாரண மனிதர்களின் சாகசச் செயல்களை உள்ளத்தைத் தொடும் வகையில் மிக யதார்த்தமாகச் சித்திரிக்கின்றன. 'ஸ்ரீதனம்' என்ற சிறுகதையில் மரியக்குட்டி என்ற கிராமத்துப் பெண், மிகமோசமான பழக்கமாகிய 'வரதட்சணை' பழக்கத்தை எதிர்க்கிறாள். அவளது எதிர்ப்புச் செயலை நூறுமுறை புகழ்ந்தாலும் அது தகும் கதையின் ஒரு மனோதத்துவமான சூழ்நிலையில், "விலைக்கு வாங்கப்பட்ட ஒரு புருஷன் எனக்கு வேண்டாம்" என்று அவள் முழங்குகிறாள். வரதட்சணைப் பணத்தில் சிறிது குறைகிறது என்று மணமகன் மணமேடைக்கு வரமறுக்கிறான். இதை அறிந்த மணமகளின் தந்தை தேவாலயத்தில் மூர்ச்சையடைந்து விழுகிறான்.

கல்யாணம் என்னும் பங்குச் சந்தை வியாபாரத்தில் அந்த எருதுகளும், பட்டுப் பூச்சிகளும் இடம் பெறுவது பற்றிக் கேசவதேவ் வருணிக்கும் இடம் மறக்க முடியாத இடம்.

"முதலாளி, மங்கதன், அந்த மூன்றாவது பார்ட்டி ஆகிய அனைவரும் நீண்ட விவாதத்தில் ஈடுபட்டார்கள்; ஆயிரத்து ஐநூறு ரூபாய் என்பது இறுதி மதிப்பீடாக இருந்தது; மங்கதன் இதுபற்றிச் சிந்தித்துப் பின்வருமாறு சொன்னான்: "ரூபாய் நாலாயிரம் வரைக்கும் எனக்கும் வந்தது; ஆனா்ல் பொண்ணு நல்லா இல்லே; யாராவது ஆயிரம் ரூபாய் மட்டும் கொடுப்பதற்கு முன்வந்தாலும் பரவாயில்லை, ஆனால் பொண்ணு அழகா இருக்கணும்; உயர்ந்த சாதியா இருக்கணும்; அப்படி எனக்கு நானே சொல்லிக் கொண்டேன். இதுதான் என் முடிவு . உன் மகள் நல்லா, பார்க்க அழகா இருக்கு; நீயும் பழங்கால வீட்டுக்காரனாகவும், உயர்ந்த கௌரவமான ஆளாகவும் இருக்கே; அதனாலே ரூபாய் ஓராயிரத்து ஐநூறு போதும். ஆனால், ஓராயிரத்து நானூற்றித் தொண்ணூற்றி ஒன்பது ரூபாய் நீங்கள் கொடுக்கத் தயாராய் இருந்தாலும் இந்தக் கல்யாணம் நடக்காது; எங்களுக்கு முழுசா முனைமுறியாமே ஆயிரத்து ஐநூறு ரூபாய் இருக்கணும்; ஒரு செப்புக்காசு கூடக் குறையக்கூடாது... இதுதான் சொல்றது.."

அழகு பொருந்திய அந்தப் பெண்ணுக்கு அன்று சந்தோஷமான திருமணதினம். அவள் மணமேடைக்குப் போகும் நேரம்; அவளுடைய தோழிகளுள் ஒருத்தி, அவர்களுக்கு எதிரே இருந்த பெரிய கண்ணாடிக்குள் பிரதிபலிக்கும் உருவத்தின் மீது ஓர் ஆசையான பார்வையைச் செலுத்திவிட்டு, "இந்த மணமகன் அவிரச்சன் இரவில் ஓர் அசல் சொர்க்கத்தையே காணப் போகிறான்!" என்று சிறிது சப்தமாகச் சொன்னாள். தோழியின் பாராட்டைக் கேட்டவுடன் மணமகள் மரியக்குட்டி முகம் சிவந்து மிகவும் நாணமடைகிறாள். அந்த நேரம். மணமகளின் தந்தைக்கு வாக்குறுதி கொடுத்திருந்த லேவாதேவிக் கடைக்காரன், வாக்குறுதியின்படி நடக்கவில்லை என்றும், அதனால் தந்தை, வரதட்சணைத் தொகையில் கொடுத்து முடிக்க வேண்டிய பாக்கியைக் கொடுக்க முடியவில்லை என்றும், இதையறிந்த மணமகன் திருமணத்திற்கு ஒத்துக்கொள்ள மறுக்கிறான் என்றும், ஆகிய செய்திகள் மணமகளுக்குக் கிடைக்கின்றன. அவளுடைய பெற்றோர் என்ன செய்வதென்று தர்மசங்கடமான நிலையில் தவித்துக் கொண்டிருந்தனர். மரியக்குட்டி, அங்கே கூடியிருந்தவர்களிடம் திடீரென்று சொன்னாள்: "இந்த அவிரச்சனை நான் திருணம் செய்து கொள்ள விரும்பவில்லை; இவனை எனக்குப் பிடிக்கவில்லை." இவ்வாறு சொல்லி அவள் தன் பெற்றோர்களின் மானத்தைக் காப்பாற்றுகிறாள்.

தன்னைத்தானே தியாகம் செய்து கொள்ளும் கிராமத்துப் பெண்ணாகிய மரியக்குட்டி பற்றிய 'ஸ்ரீதனம்' என்னும் சிறுகதை, கேசவதேவ் படைத்த குறிப்பிடத்தக்க சிறுகதைகளுள் ஒன்றாகும். அவரது படைப்புக்களுள் இது ஒரு முன்மாதிரிப் படைப்பும் ஆகும்.

கேசவதேவ் ஒரு செழுமை மிக்க எழுத்தாளர்; அவரது சில கதைகளில் உருவச் சட்டகம் சரியாக அமையவில்லை. எனினும், உருவம் பற்றிய அவரது மேதைமை உண்மையிலேயே பிரமிக்கத்தக்க முறையில் பல கதைகளில் காணப்படவே செய்கின்றன.

உதாரணமாக, 'தீனம்மா,' 'முதலைப்பாரு' ஆகிய இரண்டு கதைகளையும் எடுத்துக் கொள்ளலாம். குரூரமான உருவத்தோற்றம் உடையவளான கிராமத்து இளம்பெண் 'தீனம்மா' பற்றியது ஒரு கதை. அவளுக்கு இருந்த சில விசித்திரமான அம்சங்கள் காரணமாக, சுற்றியிருந்த பலரும் அவளை மிகவும் கேலிசெய்கிறார்கள். முள்ளால் குத்துவதுபோல

மற்றவர்கள் நடந்து கொண்டபோதெல்லாம், அவள் வேதனை யடைந்தாள்; ஆனால் அவள் யார்மீதும் வெறுப்புக் கொள்ள வில்லை. இதற்கெல்லாம் காரணம் தனது தோற்றம்தான் என்றும், அதுதான் சிலருக்கு வேடிக்கையாக இருக்கிறது என்றும், அவள் தன்னடக்கத்தோடு ஒப்புக்கொள்கிறாள். பெருமைக்குரிய இத்தகைய தீனம்மா, ஒரு நினைவுச் சின்னத்தின் அமைதியைப் போல அமர்ந்திருப்பாள்; துன்பங்களைக் கண்டு முறுவலித்துக் கொள்வாள். இறுதியாக, அவளது உள்ளத்தின் அழகைக் கண்டு கொள்ளும் கலைஞன் ஒருவன் வருகிறான். அவன் அவளது நெஞ்சத்தை ஊடுருவிப் பார்க்கிறான். அவள் தன்னுடைய ஆன்மாவில் ஓர் அரிய அன்பெனும் பண்பினைப் பெற்றவளாக இருக்கிறாள் என்பதைக் கண்டு சிலிர்ப்படைகிறான்!

அந்த 'முதலைப்பாரு' கதைதான் எவ்வளவு வித்தியாச மானது! பாரு அருவருப்பான, வெறுப்புத் தருகிற தோற்றமுள்ள ஒரு பெண். எனவே ஜனங்கள் அவளை 'முதலை' என்றே வருணிப்பார்கள்! எப்படி இருந்தபோதிலும் அவளும் பிறரைப்போல ஒரு பெண்தானே! சதையும் ரத்தமுமாய் உடல் எடுத்து உணர்வுகளும் பெருமை நினைப்புக்களும் உடைய பெண்ணாக இருந்தாள்! ஓர் ஆண்மகனின் வாசனையைத் தன் மூக்கினால் முகர்ந்து பார்க்க வேண்டுமென்று அவள் எல்லையற்ற ஆசை கொண்டாள். அந்த ஆசையானது வழியில் போவோர் வருவோர் பேசும் பேச்சுக்களை ஆர்வமாகக் கவனிக்க வைத்தது. ஒரு சிறிய தலையசைப்புக்கும் கூட அவள் சிரத்தை யோடு பதில் சொன்னாள். அந்தத் தலையைசைப்பு உறவுகள் அவளுக்கு ஓர் ஆண்மகனிடமிருந்து ஓர் இனிய வார்த்தையைக் கூடத் தருவதாக இல்லை; அவளுக்கு என்று இருக்கும் கூட்டாளிகள் –உறவினர்கள் 'குட்டன்' என்னும் நாயும், 'கந்தன்' என்னும் பூனையும்தாம்.

ஒருசமயம் இப்படி நடந்தது. ரஹீம் என்ற இளைஞன் ஒருவன், முப்பது வயதை நெருங்கிக் கொண்டிருந்த, காதல் பசி கொண்டிருந்த அந்தப் பெண்ணோடு தெருவில் பேச்சுக் கொடுத்தான். அவள் மெய்சிலிர்த்தாள். அவள் அளித்த பதில் அவனுக்கு மேலும் ஆர்வம் ஊட்டியது. அவன் அவளோடு இணக்கமாகப் பேசினான். தான் மிகவும் புழ்ந்து பேசப்படுவதாக அவள் உணர்ந்தாள்; மிகவும் கிளர்ச்சியடைந்தாள். தனது உடல் கவர்ச்சிதான் இறுதியாகப் புகழ்ந்து உரைக்கும் ஓர் ஆண் மகனைக் கொண்டு வந்திருக்கிறது என நினைத்தாள்.

அவனுக்காகத் தான் எதையும் அளிப்பதற்கு ஆர்வம் உடையவள் ஆனாள். ரஹீம், அவள் பணம் ஏதாவது வைத்திருக்கிறாளா என்று தந்திரமாகக் கேட்டான். ஆம்; அவள் சொந்தமாகக் கொஞ்சம் பணம் வைத்திருந்தாள். அவன் அவளை மணந்து கொண்டால், அவள் அவனுக்குப் பணம் தருவாளா? கட்டாயம் தருவதாகச் சொன்னாள். அதுமட்டுமல்ல, அவனுக்குத் தன்னையே தருவதாகச் சொன்னாள். அழுக்கு 'லினன்' துணிகள் துவைத்தல், கல் ஆலையில் கூலிவேலை செய்தல், ஆகிய கடுமையான உழைப்பின் மூலம், அவள் இதுவரை சம்பாதித்திருந்த அனைத்தையும் அவனுக்குத் தருவதாகச் சொன்னாள். "இன்று இரவு நான் உன்னிடம் வரட்டுமா?" என்று அவன் கேட்டான். அவளும் 'சரி' என்று மிகுந்த கிளர்ச்சியோடு சொன்னாள்.

அன்று இரவு ரஹீம் அவளைத் தழுவி முத்தமிட்டபோது, அவள் முழுவும் கிளர்ச்சியடைந்தாள். அவளை அவன் காதலிப்பதாகவும், மிகவிரைவிலேயே அவளைத் திருமணம் செய்து கொள்ளப் போவதாகவும் அவன் சொன்னபோது அவள் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. சிறிதுநேரம் கழித்து, அவள் உறக்கத்திலிருந்து விழித்துப் பார்த்தபோது, தரையில் விரித்திருந்த படுக்கையில் தன்னுடன் படுத்திருந்த ரஹீமைக் காணவில்லை; அவன் எங்கோ போய்விட்டான். அவள் விளக்கை ஏற்றித் தேடிப்பார்த்தாள். கந்தல் துணிப்பையில் ஒரு ரூபாய், இரண்டு ரூபாய், ஐந்து ரூபாய் நோட்டுக்களாகத் தன் வாழ்க்கை முழுவதிலும் அவள் பாடுபட்டுச் சேர்த்து வைத்திருந்த, எவ்வளவுதான் இருக்கிறது என்று எண்ணிக்கூடப் பார்த்திராத, அத்தனை ரூபாய்களும் இப்போது அவனோடு போய்விட்டன! அதன்பிறகு ரஹீம் எங்கேயும் தட்டுப்படவே யில்லை!

மனிதன் மீதும் மற்றும் பிற பொருள்களின் இயற்கையான தன்மைகள் மீதும், அவற்றின் உண்மைகள் மீதும் நாம் கொண்டிருக்கின்ற நம்பிக்கையை, இதுபோன்ற வித்தியாசமான காதல்கதை, சிலர் கருதுவதுபோல, சிதைத்து விடுகிறது என்பது பயங்கரமான உண்மையே!ஆனால், இதில் வியப்புக்கு உரிய விஷயம், கேசவதேவ் எவ்வாறு ஒரே மாதிரியான விஷயத்தை இருவேறு வித்தியாசமான கதைகளாக, 'தீனம்மா,' 'முதலைப்பாரு' என்ற பெயர்களில் உருவாக்கினார் என்பதே!

இதே கதைப்பொருளில் இன்னும் ஒருகதை இருக்கிறது. கேசவதேவ் 'எதிர்காலக் கணவன்' என்று அதற்குப் பெயரிட்டார். இந்தக் கதை திகைத்துப்போகும் அளவுக்குப் பல வேறுபாடு களைக் கொண்டு அமைந்துள்ளது.

சரோஜினி ஒரு 'லட்சியக் கணவன்' பற்றி நீண்டகாலம் கனவு கண்டு கொண்டிருந்தாள். சலிப்படைந்துபோன, திருமணம் ஆகாத அந்தப் பெண், கடைசியில், தனது தன்னந்தனி வாழ்க்கைக்கு எப்படியாவது ஒரு முடிவு காண வேண்டுமென்று விரும்புகின்றாள். "யார் வேண்டுமானாலும் இருக்கலாம்; அது யாரை மாதிரி வேண்டுமானாலும் இருக்கலாம்"–என்று அவள் தனக்குத்தானே சொல்லிக் கொள்கிறாள். இறுதியாக, கோந்தி அண்ணன் அவளைச் சந்திக்கிறான்.

அவனுக்கு வயது ஐம்பது; பார்க்க அசிங்கமான தோற்றம். தனது பகல் நேரத் தேனீர்க்கடையை அடைத்துவிட்டு வீட்டுக்குத் திரும்புகிறான். போகும்வழியில், அவன் எப்போதும் சரோஜினியின் குடிசைக்கு முன்பு தரையில் சிறிது நேரம் உட்காருவது வழக்கம். ஒரு மூலையில் இருக்கும் தன் குடிசைக்கு அங்கிருந்து புறப்படும்போது, " நீ எப்படி இருக்கே" என்று கேட்பாள்.

இவ்வாறு இருக்கும் போது திடீரென்று இரண்டு இதயங்களும் பற்றிக் கொண்டன. தன் வெற்றிலை பாக்குப் பையைத் திறந்து கொண்டு கோந்தி அண்ணன் அவளிடம், "சரோ, இந்த நேரத்தில் இங்கே நீ என்னதான் கனவு கண்டு கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டான்.

"கனவெல்லாம் இல்லே, கோந்தி அண்ணன்! எனக்குத் தூக்கம் வருவதில்லே! பொதுவான விஷயங்கள் பற்றி யோசித்துக் கொண்டிருக்கிறேன்'' என்றாள். பிறகு ''அம்மாவை எழுப்பட்டுமா" என்று கேட்டாள். உள்ளே அவளுடைய அம்மா நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தாள். அவன் விரும்பினால் அவரை சரோஜினி எழுப்பக்கூடும்; இல்லாவிட்டால் எழுப்பமாட்டாள்.

''வேண்டாம், வேண்டாம். நீ அவளை எழுப்ப வேண்டாம். நான் ஒரு நிமிடத்தில் போய்விடுவேன்"– என்றான் அவன். பிறகு வெற்றிலையை விரல்களுக்கு இடையில் வைத்துக் கொறித்துக் கடித்துக் கொண்டு, அந்த வயதான, திருமணம் ஆகாத கிழவன், அவளிடம் மிக அமைதியாகக் கேட்டான்:

"எத்தனை நாளைக்கு நீ இப்படியே இருக்கப் போறே, சரோ?" அவன் என்ன பொருளில் கேட்கிறாள் என்று புரிந்து கொள்ளாதது போலச் சிறிது நேரம் நடித்தாள். பின்னர் மெதுவாகச் சொன்னாள்: "இல்லை; இல்லை கோந்தி அண்ணன்; நான் இங்கே ரொம்ப நாள் இருக்கப் போறதில்லே. சீக்கிரம் போய்ச் சேரணும்..."

அவள் சொன்னதைக் கேட்டு அவன் சிரித்தான்; பிறகு சொன்னான்: "நல்ல வேடிக்கை இது! நான் கேட்டது என்ன! என் பிரியமுள்ள நீ எத்தனை நாளைக்கு இப்படித் தனியாக இருக்கப் போகிறாய் என்று கேட்டேன்...."

அவள் இப்போது தன் கருத்தை வெளிப்படுத்தினாள்: "நீயும்தான் தனியா இருக்கே..." அவள் வாக்கியத்தை முடிக்கும் முன்பாகவே கோந்தி அண்ணன் கருத்து மாறிவிட்டது.

"எனக்காக வருத்தப்படவேண்டாம்..." என்று அவன் அவளிடம் சொன்னான். அவள் உடனே மறுத்துச் சொன்னாள்: "நீயும் எனக்காகக் கவலைப்படவேண்டியதில்லை." அப்படிச் சொன்ன அந்த மாத்திரத்திலேயே அவர்கள் ஒவ்வொருவரும் பரஸ்பரம் ஒருவர்மீது ஒருவர் கவலைப்படத் தொடங்கி விட்டார்கள். அவர்களது 'தனிமை' இப்போது ஒரு முடிவுக்கு வந்துவிட்டது!

'எதிர்காலக் கணவன்'- என்ற சிறுகதை மூலாதாரமான உணர்ச்சியைப் பற்றிய கதை எனறால், 'தியாகம்' என்னும் சிறுகதை ஒரு மனிதனுடைய (பெண் ஒருத்தியினுடையதும்) மனிதாபிமானமும், வலிமையும் உணர்ச்சி என்பதற்கு மேல் ஒரு நிலைக்கு உயர்வது பற்றிய கதை. விதவைப் பெண் ஒருத்தியின் வேதனை, ஏமாற்றம், ஆகியவற்றை இக்கதை சித்திரிக்கிறது. அவள் மறுமணம் செய்து கொள்வது என்னும் தன் விருப்பத்தை நிறைவேற்றுவதா வேண்டாமா என்று தடுமாற்றம் அடைகிறாள். தன் மாற்றுரிமை மகன் மீது அன்பு கொள்ளும் கிரேக்கப் புராணத்து 'ஃப்பேட்ரா'வைப் போலவே, சந்திரிகா என்ற அந்தப் பெருமாட்டி, சிறிது தயக்கத்திற்குப் பிறகு, தன் நெஞ்சில் தோன்றிய உணர்ச்சியை நெரித்துக் கொன்று விடுகிறாள். தனது சொந்த ஆசாபாசத்திற்காகச் செயல்படுவதைக் காட்டிலும், தனது மகனுக்காகக் கடமையாற்றுவதே மிகவும் முக்கியம் என்று தனக்குள் சொல்லிக் கொள்கிறாள். பிரச்சினை அத்தோடு முடிவு பெறுகிறது; கதையும் அத்துடன் முடிகிறது.

'மீன்காரக் கோரன்' என்ற சிறுகதை முற்றிலும் மாறுபட்ட சிறுகதை; அதாவது ஒரு கீற்றுப் போன்ற சிறிய மங்கலான கதை; இது 'மோபி டிக்' என்ற பெரிய நாவலின் சிறிய வடிவம்போல அமைந்துள்ளது. பெரிய அந்த நாவலில் இடம் பெறும் கருணை மிகுந்த அவலத்துக்குரிய 'ஏஹப்' என்னும் பாத்திரத்தை நிகர்த்த பாத்திரமாக, மிக மாறுபட்ட, வித்தியாசமான பாத்திரமாக 'மீன்காரக் கோரன்' வருகிறான்.

இந்தச் சிறுகதையைப் பற்றிக் கேசவதேவ் அப்படி ஒன்றும் உயர்வாகக் கருதவில்லை. எனவே, அவர், அவருடைய மிகச் சிறந்த, 38 - சிறுகதைகள் அடங்கிய முதலாவது தொகுதியில் இந்தக் கதையைச்சேர்க்கவில்லை. எனினும், 'மீன்காரக் கோரன்' சிறுகதை இரட்டிப்புச் சிறப்புப் பெற்ற கதை; கதாசிரியர் கேசவதேவின் பிற அனைத்துப் படைப்புக் களைவிடவும் மிகப் பெரிய பாதிப்பை ஏற்படுத்தக்கூடிய கதை.

மீன்காரக் கோரன் பூனைகளையும், நாய்களையும் பார்க்க நேர்ந்தால், அவற்றைக் கிழித்துப் போட்டுக் கொடுமைப் படுத்துவான். ஒரு நாள். சிறிய, தாய் இல்லாத ஒரு நாய்க்குட்டிமீது அவனுக்கு இரக்கம் வந்து விட்டது. அவன் குடிசையில் தன்னந்தனியாய் வாழ்ந்து வருபவன். யாராவது ஒரு பெண் அவனை ஏற்றுக் கொள்ளும் அளவுக்கு அவன் அழகாகவும் இல்லை. இந்தத் தன்னந்தனி வாழ்க்கையின் போது, அந்தச் சின்ன நாய்க்குட்டியின் மீது அவன் செலுத்திய அக்கறை சிறிது சிறிதாக வளர்ந்து, அன்பாக முதிர்ந்து, அதன் மீது மோகமே கொண்டுவிட்டான். அதற்கு உணவூட்டுவதும், பிரியம் பாராட்டுவதும், விசித்திரமான முறையில் அன்பு செலுத்துவதுமாய் அவன் ஆகிவிட்டான். இவையெல்லாம் அவனது இயல்பான பழக்கத்திற்கு முற்றிலும் மாறுபட்டவை.

அந்தச் சிறிய பெண் நாய்க்குட்டியின் மீதுதான் அவனுக்கு என்ன அன்பு! என்ன கருணை! அதற்கு 'சுதா' என்று பெயரும் வைத்தான்.

ஒரு நாள் இப்படி நடந்தது. கோரன் வளர்த்துவந்த பெண்குட்டிநாய், தன் இனத்து ஆண் நாயுடன், மறைவான ஒருபகுதியில் சேர்ந்து இருப்பதைக் கண்டான். பொறாமையால் அவனுக்குப் பைத்தியமே பிடித்துவிட்டது. உடனே அவை இரண்டையும் பற்றிப் பிடித்து, தன் படகுத் துடுப்பினால் அடி, அடி, என்று அடித்தான். அந்த ஆண்குட்டி ஒரு நொடியில்

தூசியாய் நொறுங்கிவிட்டது. அதைத் தூக்கித் தொலைவில் எறிந்தான். அந்தப் பெண் நாய்க் குட்டியும் எங்கேயோ ஓடிப்போய் விட்டது! கோரன் பைத்தியம் பிடித்தவனைப் போல் அதைத் தேடியலைகிறான்!

ஓர் எளிய உணர்ச்சிப் படைப்பு என்ற அளவில் 'மீன்காரக் கோரன்' இணையற்ற சிறுகதையாகும். இலக்கிய உருவம், பாணி ஆகியவை பற்றி அதிகம் பொருட்படுத்திக் கொள்ளாத ஒரு கலை நேர்த்தி மேதையின் மிக அற்புதமான படைப்புக்களுள் இச்சிறுகதையும் ஒன்று ஆகும்.

'வாசுவும் வரீதுவம்' என்னும் சிறுகதையும் இதுபோலவே ஒரு சிறிய காப்பியம் போன்றது. வாசு, வரீது என்னும் இரண்டு சிறுவர்களுடைய அச்சம் தருகிற, அனுபவங்களைத் திரட்டித் தரும் கதை. ஒரு நாள்; கும்மிருட்டு நேரம்; சிலமணிநேரம் தொடர்ந்து மழைபெய்த பிறகு; நடமாட்டமே இல்லாமல் வெறிச்சோடிக்கிடந்த தெருவில், அவர்கள் இருவரும் அலைந்துதிரியும்போது, கண்டுபிடிக்கப் படுகிறார்கள். அவர்கள் இருவரும் உலக வாழ்க்கையின் அர்த்தம் என்ன என்று தேடவில்லை; வாழ்க்கையின் இறுதி உண்மை என்ன என்று தேடவில்லை; அவர்கள் பசிமிகுந்தவர்களாய், அந்த விபரீதமான நேரத்தில், ஏதாவது உணவுப் பொருள்கள் சாப்பிடக் கிடைக்குமா? என்று தேடினார்கள். அவர்கள் கொஞ்ச நாட்களாகவே பட்டினியாய் இருந்தார்கள். வாசு, வரீது இருவரும் கிராமத்திலிருந்து நகருக்கு வேலை தேடிவந்தார்கள். சிலகாலம் வரை வேலைதேடி அங்கும் இங்கும் அலைந்து திரிந்தார்கள். பஸ் நிலையத்தில் சுமைதூக்கும் கூலிகளாக இருந்தபோது இருவரும் சந்தித்து நண்பர்கள் ஆனார்கள். சந்தித்த இரண்டாம் நாள் இருவரும் சேர்ந்து வேலை செய்ய முயன்றபோது பொது வேலை நிறுத்தம் நடந்தது. எனவே இருவருக்கும் வேலை கிடைக்கவில்லை. பலமணிநேரம் எதுவும் இல்லை. அதனால்தான் இரவு வேளையில் அவர்கள் இருவரும் சாப்பிட ஏதாவது கிடைக்குமா என்று தேடிக் கொண்டு புறப்பட்டார்கள்.

ஒருபயனுமின்றி, இவ்வாறு இருவரும் 'நவீன உலகக் காட்டில்' சுற்றித் திரிந்த பிறகு, கடைவீதியில் பேசித்திரியும் புத்தி சுவாதீனமற்ற ஒரு பெண்ணின் மீது தவறுதலாய் இடறிக் கொண்டனர். அந்தப் பெண் தனதுபையை இறுகப் பிடித்தவாறு ஒரு கடையின் முன்பகுதியில் தூங்கிக் கொணடிருந்தாள்!

உயிரோடு அல்ல! பிணமாக! அவள் வைத்திருந்த ரூபாய் ஒரு துணிப்பொட்டலமாய் அவள் அருகில் கிடந்தது. இதைப் பார்த்ததும் அவர்களுக்கு ஏகப்பட்ட சந்தோஷம்! அவள் வைத்திருந்த ரூபாயில், மிகவும் அதிகமாக இருந்தது இரண்டு, மூன்று, ஐந்து பைசாக் காசுகளே! அவற்றுக்கு இடையில், பெரிய ஒரு ரூபாய் நோட்டுக்கள் இரண்டு கிடந்தன. அத்தோடு ஒரு சிறிய தங்கமோதிரமும் கிடந்தது. அந்த மோதிரம் குழந்தை அணிந்திருந்ததாக இருக்கவேண்டும்; எங்கிருந்தோ அவள் திருடியிருப்பாள் போலிருக்கிறது.

மொத்தம் எவ்வளவு இருக்கும் என்று எண்ணிப்பார்க்க அந்தப் பையன்கள் ஆசைப்பட்டார்கள். வேறு எங்கேயாவது ஒரு பாதுகாப்பான இடத்துக்குச் சென்று சிறிது ஓய்வாக எண்ணிப் பார்க்கலாமே என்று வாசுவுக்குத் தோன்றியது. கிடைத்ததை எடுத்துக்கொண்டு முதலில் அந்த இடத்தை விட்டுப் போய்விடவேண்டும் என்பதே முக்கியமாக இருந்தது. எனவே அவர்கள் சந்து பொந்துகளுக்குள் விழுந்து ஓடினார்கள்.

அப்போது ஓர் அதட்டல் குரல் கேட்டது: "நில்லுங்கள்... யார் நீங்கள்.. அங்கேயே நில்லுங்கள்..."

அது ஒரு போலீஸ் கான்ஸ்டபிள்! அவர் வழக்கமான 'ரோந்து சுற்றிக் கொண்டு வந்தார்.

பயந்துபோன பையன்கள் ஓடிவிட முயன்றார்கள்.

"'சாக்கடையில் அதை வீசி எறி" என்று வரீது தன் கூட்டாளியிடம் கிசு கிசுத்தான்.

வாசு சாமார்த்தியமாக, 'அது சாக்கடையில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் விழுமாறு ஜாக்கிரதையாய்ப் போட்டு வைத்தான்.

அந்தக் கான்ஸ்டபிள் விரட்டி வந்து சுற்றிவளைத்து, சில நிமிட நேரத்தில் அவர்களைப் பிடித்து விட்டார். அவர்கள் தலையில் பலமாய் அடித்தார். அடித்துக் கொண்டே பின்வருமாறு கத்தினார்: "எதுக்காக வந்தீங்க...ராத்திரியில் திருடிக்கிட்டா இருக்கீங்க?...சொல்லுங்க...எங்கே போயிக்கிட்டு இருக்கீங்க.." எங்கேயும் திருட விரும்பியதில்லை என்று அவர்கள் மிகவும் பணிவாகச் சொன்னார்கள். இவருவரில் ஒருவன், அவர்கள் பஸ் ஸ்டான்டின் கூலியாட்கள் என்று தெரிவித்தான். அந்தக் கான்ஸ்டபிள் அவர்கள் இருவரும் ஏன் தப்பி, ஓட முயன்றனர் என்று குறுக்குக் கேள்வி கேட்டார்.

பயத்தின் காரணமாகத்தான் தாங்கள் அவ்வாறு ஓடினோம் என்று வாசு கான்ஸ்டபிளிடம் அழுத்தமாய்ச் சொன்னான். உள்ளாடைக்குள் எதையும் ஒளித்து வைத்திருக்க வில்லை என்று நிரூபிக்குமாறு கான்ஸ்டபிள் உத்திரவிட்டார். அவர்கள் அவ்வாறே செய்தார்கள். ஒவ்வொருவர் தலையிலும் ஒவ்வொரு அடி கொடுத்த கான்ஸ்டபிள், "எலிப்பசங்களா, ஓடுங்கடா" என்றார்.

அடுத்த நிமிடம், இரண்டு பேரும் அந்தப் பணமுடிப்பைத் தூர எறிந்த இடம் நோக்கி, சிறிது மூச்சு வாங்குவதற்காக ஓடி வந்தார்கள். சிறிது நேரத்தில் பலத்த மழை கொட்டத் தொடங்கியது. சாக்கடை மூலையில், அந்தக் குப்பையில் துழாவித் தேடிப் பார்த்தார்கள்.

ஐயோ! பாவம்! எல்லாம் மறைந்து போய்விட்டன!

கொட்டிய மழைத்தண்ணீர் சாக்கடையைத் தள்ளிக் கொண்டு போயிருக்க வேண்டும். எல்லாம் அடித்துப் போகப்பட்டிருந்தன!

"முதல் கொலைகாரப் பாவி இந்தக் கான்ஸ்டபிள்தான். அடுத்து இந்த மழை. இரண்டும் இடையில் வந்து நம்மை இப்படி அழிச்சுட்டாங்க.."- பையன்கள் அழுதார்கள். மழையில் முழுவதும் நனைந்து விட்ட அவர்கள், மேலும் சிறிது நேரம் தேடினார்கள். ஆனால் எதுவும் கிடைக்கவில்லை.

"எல்லாம் தெரிந்த கடவுள் இதையெல்லாம் பார்க்க மாட்டாரா?" என்றான் ஒருவன்.

"ஒருவேளை பார்த்திருக்க மாட்டார்" - என்று அடுத்தவன் பதில் சொன்னான்.

வாழ்க்கைக்குப் போராடும் இரண்டு சிறிய பையன்கள் பற்றிய இந்தக் கதை, எழுத்தாளர் கேசவதேவின் இரக்க உணர்வு மிக்க மனிதாபிமான உணர்ச்சிக்கு மற்றுமொரு உன்னதமான சாட்சியம் எனலாம். அவரது இரக்க உணர்வின் பெருமைக்கு ஒப்பு எதுவும் இல்லை.

"எங்கள் கஞ்சி எங்களிடமிருந்து பறிக்கப்பட்டது" - என்ற கதை வழக்கத்துக்கு மாறான சிறுகதை. சாகசங்கள் பற்றியும், பெருந்தீனிச் சாப்பாட்டுக்காரனான தொம்மன் என்பவனுக்கும் அவனுடன் வேலை செய்யும் தொழிலாளி எலி என்பவளுக்கும் இடையிலான திருமணத் தொடர்பு பற்றியும்

எடுத்துச் சொல்லும் கதை. தொம்மன் எவ்வளவு சம்பாதித்தாலும் அது அவனது பசியைத் தீர்க்கப் போதாது; எலிக்கு அவளைச் சார்ந்து பெற்றோர் இருக்கிறார்கள். திருமணத்திற்குப் பிறகு எலி தனது கூலியில் ஒரு பாதியைத் தன் பெற்றோர்களுக்குக் கொடுத்துவிடலாம் என்ற நிபந்தனைக்குத் தொம்மன் சம்மதப்படுகிறான். இதற்குப் பிறகு அவர்கள் திருமணம் செய்து கொள்கின்றனர்.

பின்னர், தம்பதியர் தங்களுக்குச் சொந்தமாக வீடுகட்ட ஆரம்பித்தனர். கால ஓட்டத்தில் அவர்களது காதல் எவ்வாறு வளர்கிறது? அவர்கள் எவ்வாறு துன்பதுயரங்களுக்கு இடையில் வாழ்க்கையை நகர்த்திக் கொண்டு போனார்கள்? என்னும் செய்திகளை சிறுகதையில் கேசவதேவ் பிரமிக்கத் தக்க ஆற்றலோடு விவரிக்கிறார். பெரும்பசிக்காரனான தொம்மனிடத்தில் ஒரு பெரிய மாறுதல் வந்து சேர்ந்தது ஆச்சரியப்படுவதற்குரியது. தனது மனைவிக்காவும் குழந்தைக்காகவும் தியாகம் செய்ய முன் வருகிறான். அது அவனது உடல்நலத்தைப் பாதிக்கிறது. ஆனாலும், அதுபற்றி அவன் கவலைப்படாமல், களைத்தாலும், சோர்ந்தாலும் தொடர்ந்து வேலை செய்தான். மனைவிக்கும் குழந்தைக்கும் அதிகம் எவ்வளவு உணவு அளிக்கமுடியுமோ அவ்வளவு அளிப்பான்; தான் எவ்வளவு குறைவாக உண்ணலாமோ அவ்வளவு குறைவாக எடுத்துக் கொள்வான்.

ஒருநாள், வெறும் வயிற்றோடு மலைப் பகுதியில் வேலை செய்து கொண்டிருந்த போது, கீழே விழுந்து மடிந்து போகிறான்.

அவன் எப்படி இறந்தான் என்று கேள்விப்படும் எலி துக்கம் மிக அடைந்தாள்.

“ஓ! கடவுளே! எங்களுக்குக் கிடைத்த கொஞ்சம் கஞ்சியையும் எங்களிடமிருந்து இப்படிப் பறிச்சுட்டியே!” என்று புலம்பினாள்.

மேலே பார்த்த கதைகளைப் போலவே, “அவன் ஒரு பெரிய உத்யோகஸ்தன்” என்னும் கதையும் மனத்தைத் தொடும் கதை. இக்கதை நகர்ப்புறத்திற்கு வரும் கிராமத்தான் பற்றிய கதை. தலைநகரத்தில் மிகவும் சொற்ப ஊதியம் பெறும் எழுத்தராக, அவன் நேருக்கு நேர் சந்திக்கும் இழிந்த உண்மைகள் மனத்தைத் தொடுவனவாய் அமைகின்றன. சங்கு நாயர், தன் நண்பர் குஞ்சு

பிள்ளையுடன், தன் மகனைப் பார்க்கத் தலைநகருக்குப் புறப்படுகிறார். பட்டதாரியாகிய மகன் அங்கே ஓர் எழுத்தராகப் பணிபுரிகிறான். ஆனால் அவனுடைய தந்தை, அவன் பெரிய ஆபீசராகப் பணி புரிவதாக நினைக்கிறார். இதில் இரக்கத்துக்குரிய வேடிக்கை ஒன்று உண்டு; மகன் ஒரு சாதாரண எழுத்தர்தான், பெரிய ஆபீஸர் அல்ல என்று தெரிந்த பிறகு, அவருடைய – அந்த வயதான – நடுத்தர வர்க்கக் குணாம்சமானது – "மகன் ஒரு அரசாங்க வேலைக்காரன்; அது பெருமைக்கு உரியதுதானே" – என்று நினைக்கத் தூண்டுகிறது என்பதே.

இதுபோன்ற கதைகளில் காணப்படும் இரக்க உணர்வு ஒரு விஷயத்தைத் தெளிவுபடுத்துகிறது. நகைச்சுவை உணர்வு அங்கதச் சுவையில் நுட்பம் ஆகிய அவரது தன்மையோடு, கேசவதேவ், தன்னைச் சுற்றியுள்ள துன்ப துயரங்களைக் கண்டு உண்மையாகவே வேதனைப்படும் ஓர் எழுத்தாளர் என்பது தெளிவாகிறது.

கேசவதேவ் படைத்த சிலகதைகள் நகைச்சுவையும், அவல உணர்ச்சியும் கலந்த ஓர் அற்புதமான கலவைக்குச் சிறந்த உதாரணங்கள் ஆகும். "படிப்பகத்து வாசு பிள்ளை" என்னும் சிறுகதை இப்படிப்பட்ட சிறுகதையே. வாசு பிள்ளை குடியாட்சி மனம் கொண்ட – நல்ல நோக்கங்கள் நிறைந்த கிராமத்து மனிதர். குறைந்த கல்வி வசதிகள் கொண்ட தன் கிராமத்தில், தன் சொந்த முயற்சியால் ஒரு நூலகமும் படிப்பகமும் அமைப்பதற்காக விண்ணப்பம் செய்கிறார். ஊர்மக்களிடமிருந்து எல்லா வகையிலும் எதிர்ப்பையே அவர் சந்திக்கிறார்; கிராமத்து மக்களிடையே காணப்படும் எதிர்ப்புக் குழுக்களையும், எதிர்ப்புத் தனிமனிதர்களையும் எவ்வாறு சமாதானப்படுத்துவது? எவ்வாறு இசைந்து போவது? என்று தெரியாமல் அடிக்கடி திகைப்படைகிறார்.

நாயர் இனத்து இளைஞன் ஒருவன், ஜுனியர் பி.ஏ. வாசிக்கும் மாணவன். நூலகத்திறப்பு விழா நாளன்று ஒரு நாடகத்தை மேடையேற்ற விரும்புகின்றான். அவனுக்குத் தனது நாடக நடிப்புத்திறன் மீது மிகுந்த எக்களிப்பு உடையவன். கல்லூரி மேடைகளில் அவன் தோன்றி, பணியாளாக வேடமிட்டு நடித்திருக்கிறான். அவனுடைய தந்தை அந்த நூலகத்தின் முதன்மைப் புரவலராக இருக்கிறார். அவருக்கு இந்த நாடகம் நடிக்கும் திட்டம் பிடிக்கவில்லை; எதிர்க்கிறார். நாடகத்தின் காட்சிகள் – வசனங்களில் அவருக்கு முரண்பாடு

வருகிறது. நாடகத்தில் திவாகரன் என்னும் தாழ்ந்த சாதி இளைஞன், அவருடைய மகனுக்கு வேலைக்காரனாக நடிக்கிறான். நாடகத்தில், அந்த, தாழ்ந்த ஜாதி இளைஞன், அவருடைய மகனைப் பார்த்து "எட்டா" என்ற முன்னிலைச் சொல்போட்டுப் பேசுகிறான். இந்த முன்னிலைச் சொல் தாழ்ந்த சாதி மக்களைக் குறிப்பதாகும். "நீங்கள் - அங்குன்னு" என்பவையே மரியாதைக்குரிய மக்களை அழைக்கும் முன்னிலைச் சொற்கள்.

இதில் சிறப்பம்சம் என்ன என்றால், வாசுபிள்ளை அத்தனை தடைகளையும் உடைத்தெறிகிறார் என்பதே. இறுதியில் படிப்பகமும் நூலகமும் அமைத்துவிடுகிறார். அதுமட்டுமன்று; அனைத்துச் சிரமங்களுக்கும் இடையே நூலக, படிப்பகப் பொறுப்புக்களை ஏற்று, திறம்பட நடத்துகிறார். புத்தகம் விரும்பியாகிய அவரது பாத்திரப் படைப்பு முழுவதும் சில நேரங்களில் வேடிக்கை தருவதாகவும், சில நேரங்களில் பாராட்டுப் பெறுவதாகவும் அமைந்து ஒரு வாஞ்சைக்கு உரிய பாத்திரமாகவே சித்திரிக்கப்பட்டுள்ளது. ஒரு சம்பிரதாய முறையில் 'க்விக்சாட்' போன்று வேடிக்கை அமைந்த பாத்திரம் என்பதா? அறிவுத் திறமும் செயல்திறனும் மிக்க இனிமையான பாத்திரம் என்பதா? இரண்டு கருத்துக்களுமே இப்பாத்திரத் திற்குப் பொருந்தும். அதுதான் கேசவதேவின் சிறுகதைக் கலையின் சிறப்பம்சம் ஆகும்!

'மந்திரி சொன்னார்' 'குஸ்தி' ஆகிய இரண்டு சிறுகதைகளும் கேசவதேவின் காரண காரியத்தோடு கூடிய கோபமும், நெகிழ்ந்து போன மனமும் ஒன்றாய்க் கலந்து உருவான கதைகள் எனலாம்.

ஆனந்த உணர்வும், மிக உயர்ந்த கருத்தூன்றிய தன்மையும் தனித்தன்மையோடு கலந்திருப்பது மிகவும் புதுமையானது!

இக்கதைகளின் கலைத்தன்மை திகைப்பூட்டும் வகையில் அமைந்துள்ளது.

உதாரணத்திற்கு மந்திரி சொன்னார் கதையை எடுத்துக் கொள்வோம். வக்ககதன் உள்ளூர் குட்டித் தலைவன்; தற்பெருமைக்காரன்; அவனது செயல்பாடுகளை விவரிக்கிறது இந்தக் கதை; மாண்புமிகு மந்திரியிடம் அவனுக்கு உள்ள செல்வாக்கை எடுத்துச் சொல்கிறது; வேலை தேடி வந்த ஓர்

ஏழைப் பெண்ணிடம் அவன் செய்து காட்டும் 'மாக்கியவெல்லி' பாணிச் சாகசங்களையெல்லாம் கதை விளக்குகிறது. புல்லுருவி மனிதன் ஒருவனது சூழ்ச்சியால், வேலையில்லாத இளம்பெண், நல்லெண்ணம் உடையவனைப் போல வெளிவேடமிட்ட அவனை நம்பிவிடுகிறாள். இறுதியில் தன்னிடம் இருந்த விலைமதிப்பீடற்ற, அரிய பொருளை அவனிடம் பறிகொடுத்து விட்டு நிற்கிறாள். இதைச் சொல்லும் சோகக் கதை இது.

'குஸ்தி' கதையும் இவ்வாறே ஓர் உணர்ச்சி மிக்க நிகழ்ச்சியை விவரிக்கிறது. அது ஒரு சிறிய தேநீர்க்கடை. கடைக்கு வரும் வாடிக்கையாளர்களில் ஒருவன் ஒரு துண்டுப் பிரசுரத்தை உரத்துப் படிக்கிறான். பஞ்சாபிலிருந்து வந்துள்ள புகழ்பெற்ற குத்துச் சண்டைக்காரர் முகமது உசேனுக்கும், உள்ளூரில், 'கேரளக் காமா பயில்வான்' என்று பெயர் பெற்ற நாணு பிள்ளைக்கும், வெகு விரைவில் நடக்க இருக்கிற குஸ்திப் போட்டி பற்றிய விவரங்கள் அதில் இருக்கின்றன. நகைச் சுவைததும்பும் இக்கதை திடீரென்று ஒரு திருப்பம் எடுக்கிறது. பப்பு பிள்ளையின், சிதைந்து கிடக்கும் அந்தத் தேநீர்க்கடையில், தேநீர் அருந்தும் இந்து – முஸ்லீம் சோம்பேறிகள் சிலர், தேநீரை உறிஞ்சிக் கொண்டிருக்கும் போது, குஸ்திப் போட்டி விவரம் பற்றி வாசிக்கக் கேட்டுவிட்டு, திடீரென்று கட்சிபேசி முரண்பாடு கொள்கிறார்கள். நடவடிக்கைகள் பயங்கரமான திருப்பத்தை ஏற்படுத்துகின்றன. இந்து – முஸ்லீம் இன அடிப்படையிலான, தத்தம் விருப்பு வெறுப்புக்களுக்கு ஏற்ப, குஸ்திப் போட்டியில் பங்கேற்க வரும் இருவரது தகுதிகள் பற்றி, அங்கிருந்தவர்கள் பேசித் தலையை உருட்டத் தொடங்கிவிடுகின்றனர். மிக மென்மையான கேலி உணர்ச்சியைக் கொண்ட அருமையான கதை இது.

'சாயாக்கடையில்' என்னும் சிறுகதையில், கேசவதேவ், தான், சமுதாய நீதிக்காகப் போராடும் உற்சாகம் மிகுந்த தீவிரமான போராளி என்பதோடு, கசிந்து உருகும் மனிதாபிமானமும் உடையவர் என்பதை எடுத்துக் காட்டி, நம்மை வியப்படையச் செய்து விடுகிறார். கிராமத்து ஜனங்களின் வாழ்க்கையைச் சித்திரிப்பதில் மிகவும் கைநேர்த்தியுடைய பெரிய கெட்டிக்காரர் என்பதை நாம் நினைத்துப் பார்த்துக் கொண்டால், அந்தக் கைதேர்ந்த சித்திரிப்புக் கலை, இந்தக் கதையில் அப்படியே, மெருகு குலையாமல் படிந்துள்ளதை அறியமுடியும். ஏழைக் கணவன் – மனைவி தம்பதியர் உணவு

விடுதி நடத்துவதையும், அவர்களுடைய வாடிக்கைக் காரர்களையும், கேரள மக்களை அப்படியே பிரதிபலித்துக் காட்டும் முறையில் கேசவதேவ் சித்திரித்துக் காட்டுகிறார்.

இதுபோலவே அமைகிறது, 'பஸ் பிரயாணம்' என்னும் கதையும். கேசவதேவ் இக்கதையில், பத்மநாபன் நாயர் என்னும் முன்சீப்நீதிமன்றத்துத் தலைமை எழுத்தரின் வாழ்க்கையைத் தத்ரூபமாகச் சித்திரிக்கின்றார். அரசாங்கப் பணியாளராகிய அவருக்குத் தேவைகள் மிகவும் அதிகம். அவர், தன் மனைவி கமலாட்சியோடும், பால் மணம் மாறாத குழந்தையோடும், பஸ்ஸில் பிரயாணம் மேற்கொள்கின்றார். இது அவரது வாழ்க்கை முழுவதையுமே தெரிவிப்பதாக அமைகிறது. பயணத்தின் விவரங்களைச் சொல்லும் போது, தலைமை எழுத்தரின் குடும்பத்தினரின் உறவுமுறைப் பலவீனங்கள், பக்கத்துக் கிராமத்துடனான உறவுகள் ஆகியவை விரிவாகவே சித்திரிக்கப்படுகின்றன. 'பஸ்பிரயாணம்' என்னும் இந்தக் கதை ஒரு மனிதாபிமானக் கதை; மிகவும் குறைந்த ஊதியம் பெறும் அரசாங்க ஊழியரின் சின்னச் சின்னப் பெருமிதங்கள், சங்கடங்கள் அனைத்தையும் சித்திரிக்கும் கதை; மலையாள மொழியில், கவனத்தை ஈர்த்து மனத்தைத் தொட்டு விடும் பலகதைகளுள் இதுவும் ஒரு கதை; 'சிறுகதை' என்னும் மிகச்சிறிய கால எல்லைக்குள், இன்னும் தொடர்ந்து இருந்துவரும் பெரிய மானுடத்தின் சோக கீதத்தை மிகவும் கலைநேர்த்தியோடு வடித்துத் தரும் சிறுகதை.

"பணத்தை விட மனிதனே மேல்" என்ற சிறுகதையும் இவ்வாறே சிறப்பாக அமைகிறது. சமுதாயத்தில் மேல் நிலையில் உள்ளவன் என்று சொல்லப்படுகிறவன் மீது, ஏழை ஒருவன் வஞ்சம் தீர்த்துக் கொள்வதைச் சொல்லும் கதை இது. பச்சன் ஆதரவற்ற ஏழை; அவனுடைய மனைவிக்குப் பிரசவ வேதனை. அவளுக்கு மருத்துவ உதவி கட்டாயம் தேவைப்படுகிறது. மருத்துவம் பார்த்து அந்த உயிரைக் காப்பாற்றி இருக்க வேண்டிய ஒரு டாக்டர், பச்சன் எவ்வளவோ கெஞ்சியும், முறையிட்டும், ஏதேதோ சில சம்பிரதாயங்களைச் சொல்லி மறுத்து விடுகின்றார். டாக்டர் உதாசீனப்படுத்தியதால், அந்த ஏழை வண்டிக்காரனின் மனைவி இறந்து போகிறாள். இப்போது, அந்த டாக்டருக்குப் பச்சனிடம் ஓர் உதவி தேவைப்படுகிறது. தனது எளிய மனிதாபிமானச்செயலின்

மூலமாக அந்த டாக்டரை உணரச் செய்கிறான் பச்சன். இதே போன்ற, ஆனால் பெரிய பரிமாணம் கொண்ட சிறுகதை 'மரவல்லிக் கிழங்கு அரிசி' என்னும் கதை. தலைநகரில் வாழும் எழுத்தர் ஒருவனது வீட்டுக்கு, மாதத்தின் 29-ஆம் தேதி விருந்தினர்கள் வந்துவிடுகின்றனர். 29-ஆம் தேதி என்றால் சம்பளம் வாங்குவதற்கு இரண்டு நாட்கள் முன்பு என்று பொருள். வேறு வழியின்றி, அவன் பக்கத்து வீட்டுக்காரனின் தோட்டத்திலிருந்து ஒரு கைப்பிடி அளவு மரவல்லிக் கிழங்குகளைத் திருடிப் பறித்துவிடுகிறான். உடனே கையும் களவுமாகப் பிடிபடுகிறான். அந்த ஏழை மனிதனின் நிலை தர்மசங்கடமாகி விடுகிறது. தனது சிக்கலான நிலையைச் சொல்லிக் குற்றத்தை ஒப்புக் கொள்கிறான். பக்கத்து வீட்டுக்காரனும் அவனைத் தன் கருணையால் மன்னித்துக் கொள்கிறான்; அதுமட்டுமல்ல, அன்பினால் அந்தக் குற்றவாளிக்கு அந்த உணவு வகையை அதிக அளவில் தனது அன்பளிப்பாகவும் வழங்குகின்றான்.

கேசவதேவ் படைத்த சிலசிறுகதைகள், ஆண் - பெண் உறவுகள் பற்றிய ஆவலைத் தூண்டும் விடுகதைகளைப் போலவும் அமைந்துள்ளன. "சொர்க்கத்தில் ஒரு பிசாசு", "யமுனை சீராகப்பாய்கிறது" என்ற இரண்டும் இம் முறையில் அமைந்த சிறந்த சிறுகதைகள் ஆகும். முதலாவது கதை வழக்கறிஞர் ஒருவர், தன் மனைவிக்கு ஆறுதல் சொல்லும் சூழ்நிலையை விவரிக்கும் கதை. ஒரு கொலை வழக்கில் குற்றம் சாட்டப்பட்டுத் தண்டிக்கப்பட்ட கிரிமினல் குற்றவாளி ஒருவன் தூக்கில் இடப்பட இருக்கிறான். அந்தக் குற்றவாளியின் கதைதான் வக்கீலின் மனைவியைப் பயமுறுத்திவிடுகிறது. அந்தக் குற்றவாளி, வக்கீலினுடைய இனிய மனைவியை முன்பு கற்பழித்தவன். இந்தப் பின்னணியை அந்த அப்பாவி வக்கீல் அறியவில்லை. அவள் தூய கன்னிப் பெண்ணாக இருந்தபோது இது நடந்துவிட்டது. பாதி அவள் அடைந்த பயத்தினாலும், பாதி அவளுக்கு இருந்த ரகசிய ஆசை உணர்வினாலும் அவனுக்கு அவள் இசைந்து இடம் கொடுத்துவிட்டாள் என்றே சொல்ல வேண்டும். அந்தக் கயவன், இதே மாதிரி இன்னொரு பெண்ணிடம் முயற்சி செய்திருக்கிறான். அவள் மிகக்கடுமையாக எதிர்ப்புத் தெரிவித்த போது, அவன், அவளைப் படுகொலை செய்துவிட்டான். அந்தக் குற்றத்திற்குத்தான் இப்போது அவனுக்குத் தூக்குத் தண்டனை!

"யமுனை சீராய்ப் பாய்கிறது!" என்ற கதை, மாது என்னும் இளைஞனுக்கு நிச்சயதார்த்தம் செய்யப்பட்ட ஓர் அழகிய கல்லூரி மாணவி யமுனா பற்றிய கதை. ஆனால், அவள், கவிஞன் ரவி என்னும் இளைஞன் ஒருவனைச் சந்தித்துத் தன்னையே அவனிடம் அப்படியே ஒப்படைக்கிறாள். யமுனாவின் மீது தொடர்ந்து நல்லெண்ணம் கொண்டு வந்திருக்கும் கவிஞன் ரவி, யமுனாவின் மனத்தில் செயல்பட்டு வந்துள்ள காதல் உளவியலை அறிந்து அதிர்ச்சியடைந்து போகிறான்.

"நூற்று நாற்பது ரூபாய்", "நன்றி கெட்ட தன்மை" ஆகிய இரண்டு சிறுகதைகளும் மனிதன் தன் போன்ற சகமனிதர்களை எவ்வாறு ஏமாற்றுகிறான், எவ்வாறு மனிதாபிமானமற்ற முறையில் நடந்து கொள்கிறான் என்று சாதாரண நிகழ்ச்சிகள் மூலம் சித்திரிக்கும் கதைகள் ஆகும். "நூற்று நாற்பது ரூபாய்" என்னும் கதை, கேசவதேவ், ஒரு சந்தோஷமான சூழ்நிலையில் ஒரு திருடனை நம்பிய போது, அவன் கேசவதேவின் உடைமையைத் திருடிக் கொண்டு அவரை 'விடுவித்த' அனுபவம் பற்றிய கதை. 'நன்றிகெட்ட தன்மை' என்னும் கதை, நெஞ்சத்தைப் பிளக்கவல்ல ஒரு பெரிய துரோகச்செயல் பற்றிய கதை.இந்தத் துரோகம் பணக்காரன் ஒருவனால், ஓய்வு இல்லத்துப் பணியாளாகிய ஏழை ஒருவனுக்குச் செய்யப்படுகிறது. அந்தத் துரதிர்ஷ்டசாலியும், ஒருவனுடைய துரோகத்துக்குப் பலியான அவனுடைய சகோதரியும் ஆகிய இருவரும் சொல்லும் கதையாக – மனிதன் ஒருவனுக்கு உள்ளே எவ்வளவு தீயசக்தி உள்ளது என்று எடுத்துச் சொல்லும் கதையாக – அமையும் இந்தக் கதை, கேசவதேவின் ஆற்றல் மிக்க மொழிநடையில் சொல்லப்பட்டுள்ளது.

கேசவதேவ் படைத்த மிக அரிதான சிறுகதை 'குளிர்பானங்கள்' என்னும் சிறுகதை. சிறந்த சாதனைப் படைப்புக்கெல்லாம் சிறந்த சாதனைப் படைப்பு என்று பாராட்டப்படுகின்ற 'காபூலிவாலா' என்னும் கதையை மூலமாகக் கொண்டு படைக்கப்பட்டது இக்கதை என்று தெரிகிறது. கேசவதேவ் தனது ஆரம்பப் பயிற்சிக் காலத்தின் போது 'காபூலிவாலா' வைப் பின்பற்றி எழுதினார் என்னும் கருத்துக்காக யாரும் வருத்தப்பட வேண்டியதில்லை! காரணம், கேசவதேவ் முன் மாதிரியாகக் கொண்ட அந்தக் 'காபூலிவாலா' என்ற சிறுகதையின் ஆசிரியர் ரவீந்திரநாத்தாகூர் ஆவார்! கேசவதேவ்

பற்றி ஒரு விஷயம் மிகவும் முக்கியம். அதாவது 'கேசவதேவ் வெறும் புத்தக எழுத்தாளர்' என்று அவ்வளவு சாதாரணமாக யாரும் அவரைப் பற்றிச் சொல்லிவிட முடியாது!; ஏறத்தாழ, மக்களின் நேரடியான, அனுபவங்களின் நிதர்சனமான பதிவுகளே கேசவதேவின் சிறுகதைகள்! அப்படிப்பட்ட அவரது சிறுகதைகள், சுற்றியுள்ள ஜனங்களின் வாழ்க்கை நிலைகளை மேம்படுத்தும் நோக்கத்தோடு எப்போதும் சம்பந்தப் பட்டவையாகவும் இருந்தன!

சிறுகதைப் படைப்பாளர் என்ற அளவில், கேசவதேவின் பரப்பு எல்லை, உள்ளத்தை ஈர்க்கும் தன்மை பெற்றதாக இருந்தது. அவரது பரிவு எப்போதும் வாழ்க்கையின் அடித்தளத்தில் இருக்கும் ஏழைகளின் மீதுதான் இருந்தது. அவரது சில கதைகள், பாதுகாப்பு இல்லாதவர்களுக்காக எழுப்பப்படும் 'பாதுகாப்புக் கோபக் குரலாகவே' இருந்தன. 'இருளில்', 'ராகவனின் அம்மா' ஆகிய இரண்டு கதைகளும் இதற்கு உதாரணங்கள் ஆகும். இவ்வாறு, செம்மையில்லாமல், வெறும் செய்தி தரும் போக்கில் அமைந்த சில இடங்களும் இருக்கின்றன; ஆனாலும். அவரைச் சுற்றி இருந்த சமுதாய இழிநிலைகளின் மீதும், துன்பதுயரங்களின் மீதும், அவருக்கு இருந்த – அவர் உணர்ந்த – நியாயமான, தார்மீகக் கோபக் கனலானது, படைப்பு முழுவதையும் தீவிரப்படுத்தி, உற்சாகம் ஊட்டவே செய்தது! இந்த வகையில், மிக முழுமையாய் அமைந்த கதை 'நர்ஸ்' என்ற கதை; இது மிகவும் குறிப்பிடத் தக்க கதை. கேசவதேவ் சித்திரிக்கும் அந்த வாழ்க்கைச் சித்திரிப்புப் பகுதிகள், படைப்பாளர்களுக்கும், சமுதாய சீர்திருத்த வாதிகளுக்கும் எவ்வாறு, ஓர் அசல் தங்கச் சுரங்கம் போலவே இருக்கிறது என்பதை, கேசவதேவுக்குப் பின் வந்த, 'பாறப்புறத்து' போன்ற படைப்பாளர்கள் மிகவும் தெளிவாகவே எடுத்துச் சொன்னார்கள். எப்படியானாலும், கேசவதேவ்தான், இலக்கியத்தில், அப்படி ஒரு பாடுபொருளை நோக்கி அனைவரின் கவனத்தையும் ஈர்த்தவர் ஆவார். இந்தக் கதையில், கேசவதேவ், துன்பப்படுவர்களின் காயங்களுக்கு எப்போதும் சிகிச்சையளித்துவரும், காயப்பட்டுப் போன ஓர் ஆத்மாவுக்கு, மனத்தைத் தொடுகிற மாதிரி ஓர் அற்புத உருவம் சமைத்துக் கொடுத்துள்ளார்.

# 4. நாடக ஆசிரியர்

கேசவதேவ் முதலாவதாக-முக்கியமாக- நாவலாசிரியர்; கதை சொல்லுபவர். அவர் சொன்ன நாவல்களும் கதைகளும் பல்வேறு வகையில் மிகச் சிறப்பாக அமைந்திருக்கலாம்; ஆனால், உரைநடையில் காப்பியம் செய்த, இந்த இலக்கிய மேதையின், ஈர்ப்புத்தன்மை மிகுந்த படைப்பாக்கப் பண்பு எதில் இருக்கிறது? என்றால், அவர் மிகவும் ஈடுபாடு கொண்டிருந்த நாடகத்தில் தான் எனலாம். தமது படைப்புக்களிலும், பேச்சுக்களிலும் ஏறக்குறைய எப்போதுமே அவர் ஒரு நாடகபாணியிலான விளைவையே நோக்கமாகக் கொண்டிருந்தார்; அத்தகைய விளைவை உருவாக்குவதைத் தனது வழக்கமாகவும் அவர் கொண்டிருந்தார். படைப்பாளியான அவருக்குள், இயற்கையான முன்னுரிமை நாடகத்துக்குத்தான் இருந்தது என்பதை யாரும் ஊகித்துக் கொள்ள முடியும்.

அவர் நாடகங்களாகப் படைத்தவை சிலவே; ஏழு முழுநீள நாடகங்களும், பதினேழு ஓரங்க நாடகங்களும் அவர் எழுதினார்.

கேசவதேவின் நாடக ஆக்க முயற்சியில் முதல் முயற்சி ஓரங்க நாடகங்கள்தாம். அவர் காலத்தில் வாழ்ந்தவரும், அவருடன் தொடர்புடையவரும், அவருடைய நாடகங்களில் நடிப்பதற்கு அவரால் தேர்ந்தெடுக்கப்பட்டவருமான ஒருவர் தான் இக்கருத்தைத் தெரிவித்தார். அவர் வேறுயாருமல்ல; அவர்தான் பேராசிரியர் எஸ்.குப்தன் நாயர். கேசவதேவின் ஓரங்க நாடகங்களில் முதல் ஐந்து நாடகங்களின் தொகுப்பு "முன்னேற்றப் பாதையில்" என்ற தலைப்பில் 1947-இல் அச்சில் வெளி வந்தது. அதைத் தொடர்ந்து, அடுத்த ஆண்டில் அடுத்த நாடகம் 'பிரதம மந்திரி' வெளிவந்தது. பிற ஓரங்க நாடகங்கள் 1954-இலும், அதன் பின்னரும் நூலாக வெளிவந்தன.

'முன்னேற்றப் பாதையில்' நாடகம், பணக்காரன் ஒருவனது குடும்ப வாழ்க்கையில் காணப்படும் வெறுமையைச் சித்திரிக்கின்றது. இந்த நாடகம் 'இப்ஸன்' பாணியில், வீட்டுக்குள் நிலவும், ஊழல், நாசம் ஆகியவற்றை 'எக்ஸ்ரே' கருவியைப் போல்

படம் பிடித்துக் காட்டுகிறது. குற்றங்கள், துஷ்டத்தனங்கள் என்னும் சாக்கடைப் படுகுழியில் காணப்படும் எதிரும் புதிருமான கருத்தோட்டங்களையும் இது சித்திரிக்கிறது. இந்த நாடகம், எரிச்சல் படுகிற, பணத்தாசை பிடித்த கணவன், அவனுடைய இளமை பொருந்திய மனைவி ஆகியோரின் கதையைச் சித்திரிக்கிறது. மனைவி வெட்கமில்லாத, நடத்தை கெட்ட பெண். திராணியில்லாத கணவன், அவளது விருப்பங்களுக் கெல்லாம் சரணடைந்தது போல் பணிந்து அவளுடன் சகித்துக் கொண்டு இருந்து விடுகிறான். ஒரே ஒரு நிபந்தனை. பணம் சம்பாதிக்கும் வழியில் அவனுக்கு அவள் தடையாக இருக்கக் கூடாது. (இங்கே ஒரு செய்தியை நினைவில் கொள்ள வேண்டும். ஆரம்ப காலப் படைப்புக்கள் ஒன்றில், தேவ் ஒரு சிறுகதையில், வாழ்க்கையில், பிற அனைத்தையும் மறந்து பணம் பண்ணுவதில் மட்டுமே ஆர்வம் கொண்டிருந்த மனிதன் ஒருவனைப் படைத்துக் காட்ட முயற்சி செய்திருந்தார்.)

'முன்னேற்றப் பாதையில்' என்ற அந்தப் படைப்பு ஒரு குறிப்பிடத் தக்க நாடகம் என்று சொல்ல முடியாது. அது நாவலாசிரியர் ஒருவரின் நாடகப் படைப்பின் முதல் முயற்சி; அவ்வளவே. தேவின் இரண்டாவது நாடகமாகிய 'பிரதம மந்திரி' ஒரு பிரம்மாண்டமான பரிகாச நாடகம்! திருவாங்கூரில், மன்னராட்சி நீக்கப்பட்ட பிறகு, முதலாவதாகத் தேர்ந்தெடுக்கப் பட்ட, அமைச்சரவையை இந்த நாடகம் கேலி செய்கிறது. பின்னாளில், கொச்சின் மலபார் பகுதிகளோடு, கேரள மாநிலத்துடன் இணைக்கப்படுவதற்கு முன்னால், திருவாங் கூருக்கு ஒரு புதிய, தேர்ந்தெடுக்கப்பட்ட அரசாங்கம் இருந்தது. அது ஒரு சுய இறையாண்மை உடைய மாநிலமாக வடிவமைக்கப் பட்டிருந்தது. அந்தச் சிறிய மாநிலத்தின் முதல் அமைச்சர், 'தலைமை அமைச்சர்' என்று அழைக்கப்பட்டார். கேசவதேவ் படைத்த 'பிரதம மந்திரி' மேடை நாடகம் அந்தத் 'தலைமை அமைச்சர்' பற்றியும், அவரது பெண்ணாசை லீலைகள் பற்றியும் தான்!

'முட்டம்' என்பவர்தான் அந்தப் பிரதம மந்திரி. பொதுப் பணித்துறை ஒப்பந்தக்காரர் ஒருவர் மட்டுமே அருகில் இருந்து பணி செய்யக் கூடிய அமைச்சராக அந்தத் தலைமை அமைச்சர் நாடகத்தில் சித்திரிக்கப்படுகிறார். தலைமை அமைச்சரின் மகளுக்குக் கல்யாணம் நடக்க இருக்கிறது. சமூக விரோத சக்திகள் அனைத்தும் ஒன்று திரண்டு, வேகமாய்ப் போய்த்

தலைமை அமைச்சரைச் சந்தித்து, தங்களுக்கு உதவிகளும் பரிசுகளும் வேண்டும் என்று கோரிக்கை வைக்கின்றனர். சிறிதும் மனச்சாட்சியோ, யோக்கியத் தன்மையோ இல்லாத அந்தத் தலைமை அமைச்சர், பண்ணைச் சொந்தக்காரர்களுக்கும், லேவாதேவிக்காரர்களுக்கும், மற்றும் பிற சுயநலமிகளுக்கும், அரசாங்கச் சலுகைகளையெல்லாம் வாரி வழங்குகின்றார். தன் மகளின் திருமணம் சிறப்பாக நடைபெற வேண்டும் என்பதற்காக இவ்வாறு செய்கிறார். நூற்றுக்கணக்கான விடுதலை வீரர்கள் செய்த பிரம்மாண்டமான உழைப்பையெல்லாம், இப்படி மாநிலத்தின் சுண்டெலிகளுக்கு நன்மையாய்ப் போகும்படி ஆக்கலாமா? என்று மாநில மக்கள் வியப்படைகிறார்கள்.

மாநிலத்தில் ஜனநாயகவாதிகளின் எழுச்சி கிளம்புகிறது. எழுச்சியை இரண்டு இளைஞர்கள் முன்னின்று நடத்துகின்றனர்; ஒருவன் துணிச்சல் மிக்க தியாகம் மிக்க போத்தன் என்பவன்; அடுத்தவன், இந்திய தேசிய காங்கிரசின் தீவிரமான தொண்டன், குறிக்கோள் மிக்க ரவி என்பவன். ரவி தலைமை அமைச்சரின் மகன். இவர்கள் இருவரும், மாநிலத்தின் உரிமை வேட்கை உடைய மக்களை ஒன்று திரட்டி, அரசாங்கத்தின் மனம் போன போக்கு, தன் மூப்புச் சந்தர்ப்பவாதம், ஆகியவற்றுக்கு எதிராக ஓர் ஆர்ப்பாட்டத்தைக் கட்டமைத்தார்கள். நாடகத்தின் கடைசிக் காட்சி போத்தன் வீழ்ந்து மடியும் காட்சி. போலீஸ் துப்பாக்கியால் சுடுகிறார்கள்; போத்தனின் உயர்ந்த இதயம் குண்டுகளால் துளைக்கப்படுகிறது; அவன் ரத்த வெள்ளத்தில் நனைந்து மடிகிறான்.

மாநில அரசியல் நிலைகள் ஒன்றிலிருந்து ஒன்றுக்கு மாறிக் கொண்டிருந்த காலக்கட்டம். அந்தக் காலம் மிகவும் சிக்கல் மிகுந்த காலம். அந்த நிலையில், சில குறிப்பிட்ட, ஆபத்தான அரசியல் போக்குக்கள் மாநிலத்தில் தொடங்க இருக்கின்றன என்று அந்தக் கேடுகளைச் சுட்டிக்காட்டி, 'பிரதம மந்திரி' நாடகம் முன்னறிவுப்புச் செய்தது! இது, மக்களைத் துன்புறுத்தும் பெரும் ஆபத்தை எடுத்துச் சொல்லுகிற, மனத்தைத் தொடவல்ல அவல நாடகம்! மாநிலத்தின் வரலாற்றில் நிகழ்ந்த துரதிர்ஷ்டமான நிகழ்ச்சிகளையெல்லாம் வரிசையாய் உணர்த்திக் காட்டிய அவல நாடகம். அந்தக் காலக்கட்டத்தின் அனைத்து எழுத்தாளர்களிலும் கேசவதேவ் ஒருவருக்கு மட்டுமே, சிக்கலான சூழ்நிலைகளிலும், உரத்துப் பேசும் மனோதிடம் இருந்தது.

'பிரதம மந்திரி' என்ற இந்த நாடகம் இத்தகைய கருத்தாழம் மிக்க, வரலாற்றுச் சிறப்புமிக்க படைப்பாக இருந்தபோதிலும், அருமையான அங்கதச் சுவை கலந்த, நகைச்சுவையும் நிரம்பிய பொழுதுபோக்கு அம்சங்களும் உடைய நாடகமாகவும் இருக்கிறது. பூச்சி இனங்களின் மாமிசத் துண்டுகளைத்தின்னும் ஆட்களைப் பற்றி, கல்வியறிவில்லா தவர்கள் பேசும் உரையாடல்களில் காணப்படும் வேடிக்கைத் தன்மையானது மிகவும் வெளிப்படையானது. அதிகாரத்தில் உள்ளவர்களிடம், சந்தர்ப்பவாதிகள் தற்காப்புக் கருதி வைக்கும் வேண்டுகோள் வசனத்தில் காணப்படும் கவர்ச்சியும் நளினமும், இறுக்கமாய் 'உர்'என்றிருக்கும் ஜனங்களையும் வெடிச்சிரிப்பில் ஆழ்த்திவிடும். "நான் உங்க கட்சியிலேதான் தொடர்ந்து இருக்கிறேன்; இங்கே பாருங்க, குண்டர்களை என்வசம் ஒப்படைத்து, உங்கள் மீது கற்களை வீசுமாறு உத்தரவிடும்படி என்னிடம் சொன்னார்களே, அப்போது நான் எந்த அளவுக்கு உங்களிடம் மரியாதையுடன் இருந்தேன் என்று உங்களுக்குத் தெரியுமா?..'அவர்களை ரொம்பக் கடுமையா அடிச்சிடாதீங்க' என்றுதான் நிச்சயமாய்க் கேட்டுக் கொண்டேன்"- இவ்வாறு ஒருவன் பேசுகிறான்.

'பிரதமமந்திரி' நாடகத்திற்குப் பிறகு, இரண்டு ஆண்டுக்காலத்தில், 'பிசாசுக்கும் கடலுக்கும் இடையில்' என்ற நாடகம் வெளிவந்தது. ஐம்பதுகளின் தொடக்க காலத்தில் ஏழைமக்கள் பட்ட சங்கடங்களை, கஷ்டங்களை விவரிக்கிறது இந்த நாடகம்.

"நமது நாட்டில் நாம் இன்று காண்பது என்ன? பரிதாபகரமான, மிகக் கண்ணராவியான, சாதாரண மனிதனைத்தான் பார்க்கிறோம்! ஒருபக்கம் தீவிரவாதக் கிறுக்கர்களாலும், இன்னொரு பக்கம் சட்டத்தின் காவலர்களாலும் குத்திக் கிழிக்கப்பட்ட சாதாரண மனிதனைப் பார்க்கிறோம்!"-இவ்வாறு கேசவதேவ் தனது கருத்தை அந்த நாடகத்தின் முன்னுரையில் தெரிவிக்கிறார். இதில் வியப்புக்கும் வேதனைக்கும் உரிய செய்தி என்ன என்றால், அந்தக் காலக்கட்டத்தில்தான், விசித்திரமான பல தலைவர்களால் மக்கள் வழி நடத்திச் செல்லப்பட்டார்கள். அவர்கள் எப்படிப்பட்ட தலைவர்கள்? பாட்டாளிவர்க்கப் பெண்ணாகிய தாட்சாயணி சொல்லுவது மாதிரி, மாக்கியவெல்லிய பாணியில் அதிகாரத் தைத் தேடி, ஈட்டிமுனையைத் தூக்கிக் கொண்டு, ஏழைகளை

முன்னேற்றுகிறோம் என்று சொல்லுகிறார்களே அப்படிப் பட்ட தலைவர்கள்; தலைவர்கள் எனப்படும் அவர்கள் உள்ளபடியே 'தேவந்திரனாக' இருந்து, யானைப் படையும், பெருநிலப்பரப்பும் கொண்டு, புதிய வழிமுறைகளில் திட்டமிட்டு ஏழைகளைச் சுரண்டும் தலைவர்களாக இருந்தார்கள்; ஏழை அரிஜன மக்களின் குடிசைக்குச் சென்று, ஏதோ தங்களது கடமையைச் செய்வது போலப் பேசி, முகமூடியைத் தரித்துக் கொண்டு, ஏழை மக்களைத் திட்டமிட்டுச் சுரண்டுபவர்களாக இருந்தார்கள். இதேமாதிரி, வசதியாக முகமூடியை அணிந்து கொண்டு காங்கிரஸ் தலைவர் கோபால பிள்ளை செய்யும் அராஜகங்களும் அதிர்ச்சி தரத்தக்கவேயே! சமத்துவக் கொள்கைகளைப் பிரச்சாரம் செய்து, நடைமுறை என்று வரும்போது, தாங்கள் பிறரைவிட மேல்மட்டத்தினர் என்று நடந்து கொள்ளும் வஞ்சகமான, சூதுமதி படைத்த இந்தப் பணக்காரர்களிடமிருந்து, கோபால பிள்ளை எந்தவிதத்திலும் மாறுபட்டுவிடவில்லை. சூழ்நிலைகள் சாதகமாக இருந்தபடியால், அவர் ஏழைமக்களைச் சுரண்டுகிறார்.

தாழ்த்தப்பட்ட அரிஜன வகுப்பைச் சார்ந்த விவசாயத் தொழிலாளி சின்னான். அவனும் இதில் இடம்பெறுகிறான். கயவர்களும், ரவுடிகளும், தங்களைக் கம்யூனிஸ்டுகள் என்று அழைத்துக் கொள்கிறார்களே, இது என்ன கம்யூனிஸம்? சூழ்ச்சிக்காரர்கள் சமுதாயத்தைப் புதுப்பிக்கும் பணியில் ஈடுபட்டுள்ளதாகச் சொல்லுகிறார்களே? – என்று அவன் கேட்கிறான். ஆனால், அதற்காக சின்னான் கருதுகிற 'மாற்று' பொருத்தமாக இல்லை; இதற்கு இணையான தீமையாகத் தான் அதுவும் இருக்கிறது; போலீசுக்குப் பக்கத்தில் இருந்து கொள்வதும், அவர்களுக்கான கோழி உணவு தயாரிப்பதும், அவர்கள் விரும்பும் போது உடம்பை 'மஜாஜ்' செய்துவிடுவதும் ஆகிய பணிகளில் ஈடுபட்டுக் கொண்டிருப்பதான ஒரு மாற்றைத்தானே சின்னான் சொல்கிறான். ஆக இதுவும் அதே அளவு தீமையானதுதான்.

போலீசின் நடவடிக்கைபற்றி ஏதாவது சொல்லத்தான் வேண்டுமென்றால் இப்படித்தான் சொல்லவேண்டும். அதாவது அவர்களது நடவடிக்கை மிகவும் அருவருக்கத்தக்கதாக இருந்தது. கண்ணுக்குத் தட்டுப்படுகிற ஆள் மீது பார்வையைச் செலுத்தும் ஒரு போலீசுக்காரன் சொல்வது என்ன? "அவன் மீசையைப் பார்த்தாலே தெரியலையா, அவன் ஒரு கம்யூனிஸ்டு என்று"–

இப்படித்தானே இருக்கிறது பேச்சு. பிறரைத் துன்புறுத்தி அதில் மகிழ்ச்சியடையும் 'சாடிஸ்ட்' போலீஸ் கான்ஸ்டபிள் சட்ட ஒழுங்கை முன்னெடுத்துப் பேசுகிறான்.

"அந்த ஆள் இருக்கிறானே, அவன் நல்ல கட்டுமஸ்தான உடம்புக்காரன், அவனை அடிக்கவேண்டும் என்னும் உந்துதல் உணர்ச்சி கட்டுப்படுத்தமுடியாமல் வருகிறது"– இப்படி யெல்லாம் பேசும் அளவுக்கு அவர்களது கொடூரச் செயல்கள் மிகவும் அதிகமாக இருந்தன. ஒரு போலீஸ்காரன் அவர்களது தொழில் ரகசியத்தைப் பின்வருமாறு வெளியிட்டான்:

"அந்த ஆளிடம் ஒரு ஆடு இருந்தது; அவன் வீட்டுக்கு நான் ஒரு நாள் ஒரு ஆளை அனுப்பியிருந்தேன்; அவன் ஒரு கஞ்சப்பயல். நமக்கு ஆட்டுக்கறி கொடுக்க அவன் அசைந்து கொடுப்பதாகத் தெரியவில்லை. ஆளா, அதுலபாரு, அவன் நமக்குக் கொடுத்துத்தானே ஆகனும்! இவனோட மைத்துனனோட தம்பியின் மைத்துனன் ஒரு பயல், பெரிசா மீசை வைச்சுட்டுத் திரிந்தான். அப்புறம் பத்திரிகை வேறே படிச்சான். அவன் ஒரு கம்யூனிஸ்டு என்பதற்கு இதைவிடவேறு என்ன சாட்சியம் வேணும்? அதனாலே அவனுக்குக் கொடுத்தேன் ஒரு நல்ல குடுப்பு... இந்த ஆபத்திலே இருந்து தப்பிச்சுக்கிறதுக்காகவாவது இந்த முட்டாள் இப்பவாது அவனது ஆட்டுக்குட்டியை அன்பளிப்பாகக் கொடுக்க வேண்டாமா?"– சட்டம் ஒழுங்கைக் கவனித்து மக்களைக் காப்பாற்றும் பொறுப்பில் இருப்பவர்களது லட்சணம் இதுதான்.

"ஆளும் கட்சி எதுவாக இருந்தாலும், பணம் படைத்தவர்க்கமும், திருட்டுக் கூட்டமும் எப்படியாவது அதிகாரத்தைக் கைப்பற்றிக் கொள்ளுகிறார்கள்; ஏழைகளை ஏமாற்றுகிறார்கள்; அவர்கள் அனைவரும் கடைசியில் ஒன்றாகி விடுகிறார்கள்; மக்களாகிய நாம்தான் வெளியில் நிற்கிறோம்.." –பக்தியுள்ள கிறித்தவனும், புத்திக் கூர்மையுள்ள விவசாயியுமான மத்தாய் மாப்பிளாதான் இப்படிச் சொன்னான்.

–இந்தநாடகம் இப்படி ஒரு குழப்பமான சூழ்நிலையைச் சித்திரிப்பதாக அமைகிறது. அதாவது சாதாரண, பொது மனிதன் ஒருவனுக்குத் தர்மசங்கடமான நிலைமை. ஒருபக்கம் பிசாசு; இன்னொருபக்கம் சமுத்திரம்; இரண்டுக்கும் இடையில் தவிக்கும் அவனது தர்மசங்கடமான நிலை! இந்த நாடகப் படைப்பின்

மூலம், மானுடத்திற்காகக் குரல் கொடுத்து கேசவதேவ் விடுத்த தெளிவான வேண்டுகோள் இவரது ஆரம்பகால முயற்சியே; என்றாலும் அரசியல் மோசடித்தனங்களை அம்பலப் படுத்துவதில் இது வெற்றியடைந்துள்ளது! மேல்வர்க்கத்து இளைஞர்கள், மாறிவரும் அரசியல் சூழ்நிலையில், மிகவும் தந்திரத்தோடு மிக வேகமாகக் கம்யூனிஸ்டுகள் ஆகிவிட்டார்கள்! இதன் நோக்கம், மக்கள் இயக்கத்தைத் தவறான வழிக்கு இட்டுச் சென்றுவிடவேண்டும் என்பதே! கேசவதேவின் வார்த்தைகளில் இப்படிச் சொல்லலாம்: "மனிதர்களிடம் இப்படி ஒரு 'மாக்கியவெல்லியனிசம்' உருவாகும் என்று யார்தான் நினைத்தார்கள்! இந்தக் 'கொச்சும்பிராஸ் (இளைய தலைமுறையினரின் தலைவர்கள்) இப்படி நமது குடிசைக்கு வந்து, நமது சாதாரண உணவைப் பங்குபோட்டு, ஒட்டு மொத்தமாய் நமக்குத் துரோகம் செய்வார்கள் என்று யார்தான் நினைத் தார்கள்? - இவ்வாறு துணிச்சல் மிக்க அரிஜன் ஒருவன் பேசுவதாக நாடகத்தில் கேசவதேவ் அமைக்கிறார். அந்த மோசடிக்காரர்கள் ஏழைகளின் நன்மை என்று பேசுவது மட்டும் வாய்கிழியப் பேசுவார்கள்.

இந்தக் காட்சி ஒரு முழுமையான நாடகத்தின் தரத்துக்கு இசைந்து வராமல் இருக்கலாம். என்றாலும் ஒரு விஷயத்தை மறுக்கமுடியாது. இம்மாதிரிக் காட்சிகளை நாடகத்தில் அமைப்பது ஒடுக்கப்பட்ட மக்களுக்காக கேசவதேவ் கொடுக்கும் இன்னொரு வேதனைக்குரல்; மனச் சான்றுமிக்க கேரளக்காரன் ஒருவனின் குரல் என்பதை மறுக்கமுடியாது. கேசவதேவ் கணக்கிட்டுச் சொல்லுவதுபோல இது ஓர் உலகளாவிய விதிமுறைதான்.

காலவரிசைப்படி கேசவதேவின் அடுத்த படைப்பு, "நான் ஒரு கம்யூனிஸ்டு ஆகப்போகிறேன்" என்பதாகும். இந்த நாடகம் போலிப் புரட்சிக்காரர்கள் மீது கடுமையான தாக்குதல் ஆகும். தோப்பில் பாசி எழுதிய "நீங்கள் என்னைக் கம்யூனிஸ்டு ஆக்கினீர்கள்" என்ற புகழ் பெற்ற நாடகத்தைப் பரிகாசம் செய்வதாகவும் அமைந்தது; அரசியலை ஒரு லாபகரமான தொழிலாகக் கருதிச் சிலர் நடத்துவதை, மனிதாபிமான அடிப்படையில் விமர்சிக்கும் படைப்பாகவும் அமைந்தது; மிகவும் குறிப்பாக இந்த நாடகம், அன்றையக் காலக் கட்டத்தின், திசை மாறிப்போகும் அரசியல் இயக்கங்களின் செயல்பாடு

களுக்குக் காரணமான மனிதர்கள் மீது கடுமையாகக் குற்றம் சாட்டும் நாடகமாக அமைந்தது.

மோசடிக்காரர்கள் கட்சியின் தலைவர்களாக ஆனபிறகு, அவர்கள் கட்சித் தொண்டர்களை நிரந்தரமாகவே ஏமாற்றத் தொடங்கினார்கள். ஒரு சந்தர்ப்பத்தில் கம்யூனிஸ்டு களாகிய எஜமானர்கள், அரிஜனங்களை வெளியேற்றியபோது, நியாயம் கேட்டுப் புகார் செய்வதற்குக் கூட ஆள் இல்லை. யாரிடம் போய்ப் புகார் செய்வது? என்ற நிலை உருவாகி யிருப்பதை அரிஜன் ஒருவன் உணர்ந்தான். "பணக்காரக் கூட்டம் தானே இப்போது கம்யூனிஸ்டுகளாக ஆகியிருக்கிறார்கள்" என்பதும் உணரப்பட்டது. ஆனால், இந்த நாடகப்படைப்பு சரியான பத்திரிகைச் செய்தித் தொகுப்பு மாதிரியே அமைந்துவிட்டது. செய்தித் தொகுப்பு ஒன்று 'நாடகம்' என அழைக்கப்படமுடியாது. ஆனாலும், இந்தப் படைப்பைப் பாராட்டும் முறையில், "ஜனங்களுக்கு உணர்ததுதல் என்னும் நோக்கத்தை இப்படைப்பு சரியாகவே நிறைவேற்றியிருக்கிறது" என்று ஒருவர் சொல்லிக் கொள்ளமுடியும்.

ரஷ்யதேசத்தின் நாடகமேதையான ஆன்டன் செக்காவ் செய்தித் தொகுப்பையும் கூடச் சிறந்த நாடகமாகப் பல முறை ஆக்கிக் காட்டியிருந்தார். அவரைப் போலவே, கேசவதேவும், 1959-இல் செய்தித் தொகுப்பும் கூடச் சிறந்த நாடகப் படைப்பாக அமையும் என்று செயல்படுத்திக் காட்டினார். கேசவதேவ் படைத்த "ஒரு முடிதேங்காய்" என்பது ஓர் அற்புதமான நாடகப்படைப்பே. அடிப்படையாய் அதில் பிரமாதமான விஷயம் ஏதும் இல்லை. 'ஒரு முடிதேங்காய்' விஷய கனம் எதுவும் இல்லாமல் அமைந்த முழுநீள நாடகம்! ஆனால் தொடக்கத்திலிருந்து இறுதிவரை சுவாரஸ்யமானது! உயிர்ப் பானது! அடுத்தடுத்து இரண்டு வீடுகள்; ஒரு வீட்டில் பையன் ஒருவன் இருக்கிறான்; அடுத்த வீட்டில் பெண் ஒருத்தி இருக்கிறாள்; இருவரும் ஒருவரையொருவர் காதலிக்கின்றனர். அவர்களது திருமணத்தை இருதரப்புப் பெற்றோரும் ஒப்புக் கொள்கின்றனர். திருமணநாள் விழா மிக நெருங்கிவிட்டது.

இந்த நிலையில், அந்த இரண்டு வீடுகளுக்கும் இடையில் திடீரென்று சண்டை மூண்டுவிட்டது. சண்டைக்குக் காரணம் ஒரு முடிதேங்காய்! எங்கு பார்த்தாலும், தென்னைகள் வளர்ந்து கொழிக்கும் தென்னை பூமியாம் கேரளாவில் ஒரு முடி தேங்காய்க்காகச் சண்டை! இந்த ஒரு முடி தேங்காய்ச் சண்டை

எப்படி மூண்டது? பின்னர், இறுதியாக, இரு குடும்பங்களும், முன்பு போல, நண்பர்களாக இருக்கும் வண்ணம், எப்படி இணைத்து வைக்கப் படுகிறார்கள்? என்று சொல்லிச் செல்கிறது நாடகம். இந்த நாடகம் தனக்குள் பிரமாதமான செய்தி எதையும் பெற்றிருக்கவில்லை; எனினும் அது மேதைமை மிகுந்த ஒரு படைப்பு! சண்டை வெடிப்பதற்கு முன்னால் இரு வீட்டுக் காரர்களும் நண்பர்களாக இருக்கிறார்கள்; திரை விழுகிற போது அவர்கள் மீண்டும் நண்பர்கள் ஆகிவிடுகிறார்கள், எது, எப்படி இருப்பினும், 'ஒரு முடி தேங்காய்' படைப்பு, கேசவதேவின் மிக நேர்த்தியான நாடக ஆக்கமாக விளங்குகிறது.

'ஒரு முடி தேங்காய்' நாடகத்தைத் தொடர்ந்து, அடுத்த ஆண்டில், 'சீனவழி' என்ற நாடகம் வந்தது. இது கேசவதேவின் வெளிப்படையான, முழுவதும் அரசியலையே முதன்மையாகக் கொண்ட நாடகம்; கம்யூனிஸ்டுகள் பற்றிய மிகப்பெரிய கேலி நாடகம். கோபால கிருஷ்ண குறுப்பு என்பவர், சீனாவில் பெயரிட்டுக் கொள்ளும் பாணியைப் பின் பற்றித் தன்னை "கோபி-ஷி" என்று அழைத்துக் கொள்கிறார். இந்தக் "கோபி-ஷி"யின் விநோதமான செயல்பாடுகள் பற்றியதே இந்த நாடகம். கிட்டு என்பவன் அரைகுறை இலக்கியவாதி; தன்னை 'மாயா-சே-லுங்' என்று அழைத்துக் கொள்கிறான்; தான் 'கோபி-ஷி' யின் தொண்டன் என்று சொல்லித் திரிகின்றான். பாட்டாளி வர்க்க ஏழைப் பெண் ஒருத்தி, சோதனை மிக்க காலங்களில் தோழர்களுக்குப் பாதுகாப்புத் தருகிறாள்; தனது வாழ்க்கையைப் பணயம் வைத்து தோழர்களுக்காக எல்லாம் செய்கிறாள். ஆனால் இறுதியில், அவர்களால் அனாதையாகக் கைவிடப்படுகிறாள்; மிக மோசமாக அவமானப்படுத்தப் படுகிறாள்.

நாடகத்தில் நானுகுறுப்பு என்னும் ஒரு பாத்திரம் வருகிறான். கட்சித் தலைவர்களிடம் அவன், "கட்சித் தலைவர்களின் அகராதியில் ஒரே ஒரு வார்த்தை - அதுவும் 'சுயநலம்' என்ற ஒரே ஒரு வார்த்தை தான் இருக்கிறது என்ற நிலை வந்து விட்டதே" - என்று எடுத்துச் சொல்கிறான். "இன்றைய நிகழ் காலமெல்லாம் கட்சித் தலைவர்களாகிய உங்களுக்கு நல்ல காலமாக இருக்கிறது...எங்களுக்கோ நல்ல காலம் என்பது எதிர் காலத்தில்தான்...அப்படித்தானே?" - என்றும் கேட்கிறான்.

நாடகத்தில் நகைச் சுவையின் பங்கு மிகவும் சொற்பம்.

ஆனால், நாடக ஆசிரியரின் நோக்கம், சிற்சில குறைகளை எல்லாம் ஈடு செய்து விடுகிறது. அந்தக் காலக்கட்டத்திய, அரசியல்வாதிகளின் குறைகள் மீதான இருமுனைத் தாக்கு விமர்சனமாக அமைகிறது. ஓரிடத்தில், கேசவதேவ், ஒரு நடைச் சித்திரக்காரர் போல இருந்து, 'இந்த அரசியல்வாதிகள்' மணலில் இருந்து ரப்பர் தயாரிக்கும் திட்டத்திற்காக அரசாங்கக் கடன் வழங்க அனுமதி வழங்குகிறார்கள்.." என்று எடுத்துக் காட்டிச் சித்திரிக்கிறார்.

லங் ஒரு நிகழ்ச்சியை ஏற்பாடு செய்கிறான். இனிமேல் தாயாகப் போகிற ஃப்ளோரியைச் சுட்டுத் தள்ளுவது போன்ற ஒரு நிகழ்ச்சி; லங் இந்த நிகழ்ச்சியைக் கதகளி பாணியில் நாட்டிய நிகழ்ச்சியாக ஏற்பாடு செய்கிறான். 'துரியோதனவதம்', 'கீர்மீர வதம்' என்று அழைக்கப்படுவது போல, அதற்கு, அவன் 'ஃப்ளோரிவதம்' என்று பெயரும் இடுகிறான். இப்படி ஏற்பாடு செய்து, தனது கொடிய வில்லன்களையெல்லாம் அழித்துத் தள்ளுவதாக நாட்டியக் காட்சி அமைகிறது. நாடகத்தில் இடம் பெறும் இன்னொரு வேடிக்கை நிகழ்ச்சி இது.

'மூதாதையர் வீடு' (1962) என்னும் நாடகம், கேசவதேவின் நாடக ஆக்கத்தில் தோல்வியடைந்த முயற்சி எனலாம். நாடகத்தின் கரு மிகவும் சிரத்தை மிகுந்த கரு; அதாவது இந்திய மக்களின் தேசிய ஒருமைப்பாடு; ஒற்றுமை ஆகியவை பற்றிய கரு; இந்த உன்னதமான முயற்சியில், கேசவதேவ் முழுவதுமாய்த் தோற்றுப் போய்விடுவது வருந்துவதற்குரியது.

தளர்ச்சியடையாத, நம்பிக்கைக் கோட்பாட்டுக் காரராகிய கேசவதேவ், 1971-இல் ஒரு நாடகம் கொண்டு வந்தார். மானுடத்தின் துன்ப நிலை பற்றியது அந்த நாடகம். அதன் தலைப்பு "இரண்டு மாடி வீடு கட்டுவதற்கு" என்பதாகும். கட்டிடம் கட்டும் கொத்தனார் ஒருவர் தனக்குச் சொந்தமாக இரண்டு மாடிகள் கொண்ட கட்டிடம் கட்டுவதற்கு முயலும் அவலக் கதையை இந்த நாடகம் விவரிக்கிறது. எத்தனையோ பேர்களுக்குப் பலவீடுகள் கட்டிக் கொடுத்த அவர், தனக்கென்று சொந்தமாக இரண்டு மாடி கொண்ட ஒரு வீடு கட்டிக் கொள்ள வேண்டுமென்று கனவு காண ஆரம்பித்தார். அவருடைய மனைவி மிகவும் பிடிவாதக் குணம் உடையவள். தன் மகளுக்கு வெள்ளி ஒட்டியாணம் வேண்டும் என்று உத்தரவிட்டுத் தனது அபிலாட்சையைத் தெளிவுப் படுத்தி யிருந்தாள்; அதற்காகப்

பணம் ஒதுக்கி வைக்க ஆரம்பித்தாள். ஒட்டியாண நிதிக்காக ஒரு ரூபாய் நாணயங்களும், இரண்டு ரூபாய் நோட்டுக்களுமாய்ச் சேகரிக்க ஆரம்பித்தாள். இவ்வாறு மனைவி சேமிக்கும் தொகையை ஒரு தனியார் 'சிட் பண்டு' நிறுவனத்தில் முதலீடு செய்தால், பெருகி வரும் தொகையைக் கொண்டு, வீடு கட்டும் தனது திட்டத்தை நிறைவேற்றிக் கொள்ளலாம் என்று கணவன் நினைக்கிறார். அந்தத் தனியார் 'சிட் பண்டு' நிறுவனத்தின் நிர்வாக இயக்குநராக, அந்தப் பகுதியின் வயதான பெண் ஒருத்தி இருந்தாள். அவள் பல் எல்லாம் போன அரட்டைக்காரி. சச்சரவுக்காரியான, "ஜான்திபி"* பாணி மனைவி தன் மகளின் ஒட்டியாணத்திற்காகச் சேமித்து வைத்திருந்த பணத்திலிருந்து, கணவன் கொத்தனார் 'சிட் பண்டு' நிதிக்கு முதல் தவணைத் தொகையைச் செலுத்துகிறார். விஷயம் தெரிய வந்ததும் வீட்டில் பெரும் புயலே கிளம்பி விடுகிறது. அந்தச் சின்னக் குடும்பத்திற்குள் தோன்றிய பெரும் புயலை, இறுதியில் அவனுடைய மைத்துனன் உள்ளே வந்து தடுத்துச் சமாதானப் படுத்துகிறான். அம்மா விரும்பியபடி மகளுக்கு ஒட்டியாணமும், அப்பா விரும்பிய படி இரண்டு மாடிக் கட்டிடமும் பெறுவதற்காக அவர்கள் இருவரும் அரும்பாடு படுகின்றனர்.

இந்த ஏழைக் கட்டிடக் கொத்தனாரின் நிலப்பிரபு, அவரது பரிவாரங்கள், ரௌடிகள், கொட்டிய மழை ஆகிய இவரெல்லாம் மொத்தமாய்ச் சேர்ந்து இவர்களது திட்டங்களைத் தடை செய்தனர். மனைவிக்கு உடம்புக்கு முடியவில்லை; மருத்துவமனையில் சேர்க்கப் படுகிறாள். அவள் சேர்த்து வைத்த காசு ஆஸ்பத்திரிச் செலவில் கரைகிறது. அவர்களது திட்டங்கள் அனைத்தும் அப்படியே நின்று விடுகின்றன. வயதான அந்தக் கணவனும் மனைவியும் கலங்கிப் போய்விடுகிறார்கள். அந்த ஏழைக் கட்டிடத் தொழிலாளியின் இக்கட்டான நிலை, நாடகத்தில், அரிய இரக்கத்தோடும், அன்போடும் சித்திரிக்கப்படுகிறது. கேசவதேவ் தந்தக் கோபுரத்தில் வாழ்கிறவர் அல்ல; அவர், ஏழை, எளிய மனிதனின் வாழ்க்கை நிகழ்ச்சிகள், மேன்மை மிக்க கவிதையின் கருவாக எப்படி ஆக முடியும் என்பதை நிரூபித்துக் காட்டியவர்.

'தயவு செய்து என்னை மந்திரி ஆக்க வேண்டாம்' – என்பது சுவாரஸ்யமான ஓரங்க நாடகம்.

---

* அடங்காப் பிடாரிப் பெண் அல்லது மனைவி (இது சாக்ரட்டீஸின் மனைவி பெயர்)

இது, அன்றைய நடப்பு அரசியலில் காணப்பட்ட, இழிந்த நடைமுறைகள் பற்றிய கேலிநாடகம். நாட்டின் அனைத்து அரசியல் பிரிவுகளையும் இந்த நாடகம் உரத்த குரலில், விலங்கு உருவகங்களைப் பயன்படுத்தி ஏளனம் செய்கிறது. இந்த நகைச்சுவைப் படைப்பில், 'ஊர்வன' புரட்சிக்காரர்களாகவும், ஒநாய்கள் 'காந்திக்குல்லாய்' அணிந்து வருவனவாகவும், கழுதைகள் விடுதலை வீரர்களாகவும், அணி வகுத்து வருகின்றன. மேலும் இனவாத அமைப்புக்களின் கையாட்கள் தேர்தலில் வெற்றி பெறுகிறார்கள்; சட்டமன்ற உறுப்பினர்களைப் போல ஆட்சி செலுத்துகிறார்கள்; எழுத்தாளர்கள், மூடப் பணக்காரர்களின் ஆசாபாசங்களைத் திருப்தி செய்பவர்களாக இருந்தார்கள். இச் சிறு நாடகத்தின் மையப் பிரச்சனை, மந்திரியாக ஆக்கப்பட்ட பிரஜை ஒருவன், அதிலிருந்து தப்பித்துக் கொள்ள விரும்புகிறான் என்பதுதான். அவன் ஒரு தரமான மனிதன். அதனால், மந்திரி பதவியை ஏற்பதாக அவன் ஒப்புக் கொண்ட நிகழ்ச்சியே கூட, ஏதோ, தான், நிரந்தரமாகவே தண்டனைக்கு உட்படுத்தப்பட்டுவிட்டது போன்றதே என்று எண்ணுகிறான்; மந்திரியாகப் பதவி ஏற்பதற்குப் பிரமாணம் எடுப்பது ஒரு குற்றம் என்றும் உணர்கிறான். நாடகத்தின் அங்கதச் சுவையின் தரம் மிகவும் வித்தியாசமாக இருக்கிறது; நாடகம் அதிர்ச்சி தருவதாகவும் உள்ளது.

கேசவதேவ் எழுதிய 'ஓரங்க நாடகங்களுள்' "கொள்ளைக் கூட்டம்" என்பது தான் பெரும்பாலும் மிக முந்திய நாடகமாக இருக்கும். இச்சிறு நாடகம், பத்திரிகை ஆசிரியர் ஒருவரது வாழ்நிலை பற்றிய நாடகம். பணிக்கர் என்னும் அந்த ஆசிரியர் மிகவும் துன்பத்திலும், ஏழ்மையிலும் வாழ்கிறார். பத்திரிகையின் முதலாளி உன்னிபிள்ளை; கஞ்சத்தனமானவர்; கபடமானவர்; ஆசிரியரிலிருந்து 'பார்சல்' கட்டும் ஆள்வரை அனைவரையும் திட்டமிட்டுச் சுரண்டுகிற அவர் சௌகர்யமாக வாழ்கிறார். இப்படிப்பட்ட சூழ்நிலையில், ஆசிரியராகத் தொடர்ந்து, தான் பணிபுரிவதும் கூட ஒரு வகையில், சமுதாயத்தின் மேம்பாட்டுக்காகத்தான் என்று ஒரு தவறுதலான நம்பிக்கையில், பணிக்கர், சில காலம் ஆசிரியராக அங்கே பணியாற்றினார். இறுதியில், பத்திரிகை முதலாளியை எதிர்த்துத் தைரியமாக இயங்கத்தான் வேண்டும் என்று உணர்கிறார். முற்போக்கான சட்டதிட்டங்களைக் கொண்டு வரும் புதிய

ஜனநாயக இயக்கங்களுக்கு எதிராகத் தலையங்கங்கள் எழுத மறுக்கிறார். இறுதியில் ஆசிரியர் பணியைத் தூக்கி வீசி எறியும் நிலை உருவாகிறது.

ஜனநாயகத்தின் நான்காவது தூண் எனப்படும் பத்திரிகை என்பது, கலை இலக்கியத்தைப் படுகொலை செய்யும் ஓர் அசலான கசாப்புக் கடையாகிவிட்டது; இனவெறியர்களின் தனிப்பட்ட ஆசாபாசங்களுக்கு இரையாகி, இச்சைமொழி பேசும் நிறுவனமாகி விட்டது. பத்திரிகையின் இந்த நிலையை, இந்த ஓரங்க நாடகம், மிக இறுக்கமான அங்கத நகைச் சுவையோடு அம்பலப்படுத்துகிறது. "**காசுபந்து**" (தேசத்துக்குப் பாதுகாவலாக இருப்பவர்களைத் 'தேசபந்து' என்பது போல, காசுக்குப் பாதுகாவலாக இருப்பவர்களுக்கு இப்படிப் பெயர்); "**தனோரமா**" (மனத்தை வெல்லுபவர்களுக்கு 'மனோரமா' என்பது போல, தனத்தை வெல்லுபவர்களுக்கு இப்படிப் பெயர்); "**கழுதவாணி**" ( 'மக்களின் குரல்' என்று பொருள்படும் 'பௌரதவாணி'என்னும் சொல்லுக்குப் பதிலாக இப்படி ஒரு பெயர்) என்ற பரிகாசப் பெயர் ஆக்கங்கள், சிக்கல் பிள்ளை என்ற பொருள் தரும் "பிரசந்தப் பிள்ளை"; சாக்கோ என்ற கேரளப் பெயருடன் 'வ்ஷ்கி' என்ற ரஷ்யப் பெயரின் பின் ஒட்டைச் சேர்த்து அமையும் 'சாக்கோவ்ஷ்கி' என்று பெயர்கள் தாங்கி வரும் பாத்திரங்களின் படைப்பு; "நாயர் எழுத்தாளர் – ஈழவ எழுத்தாளர் – கிறித்தவ எழுத்தாளர் – என்று சொல்லும் இவர்கள் அனைவரும் கம்யூனிஸ இலக்கியவாதிகள்!" என்று சுட்டிக் காட்டுதல்; "பணம் பண்ணுவதற்காக ஒரு சந்தர்ப்பத்தில் கம்யூனிஸ்டுகளாகவும், மறுசந்தர்ப்பத்தில் தேவாலயக் கொள்கைக்காரர்களாகவும், மாறிக் கொண்டிருக்கிறார்கள்" என்று ஏளனமாய்ச் சாடுதல் – என்பன போன்ற அரசியல் பற்றிய, அரசியல் தந்திரங்கள் பற்றிய, பத்திரிகைகள் பற்றிய தமாசுகளும், சாமர்த்தியமான புதிர்ப் பேச்சுச் சொல்லாக்கங்களும், நாடகத்தில் மிகவும் சுவையான துணுக்குகளாக அமைகின்றன. மிகவும் பிரத்தியேகமான முறையில் அமைந்துள்ள இச்சிறுநாடகம் இன்றைக்கும் கூட சுவாரஸ்யமான படைப்பாகவே இருக்கிறது!

'கொள்ளைக் கூட்டம்' நாடகத்திற்குப் பிறகு, 'தென்னை மட்டை அடிப்பவர்' என்னும் தொகுப்பு 1954–இல் வெளி வந்தது.

இந்தத் தொகுப்பில் 'ஒத்திகை முகாம்', 'மாணவர் விடுதி', 'சலவைக்காரப் பெண்', 'இருளின் மறைவில்', 'சோஷலிஸ

யதார்த்தம்', நூலுக்குத் தலைப்பாக அமைந்துள்ள, 'தென்னை மட்டை அடிப்பவர்' ஆகிய ஆறு நாடகங்கள் அடங்கியுள்ளன.

'ஒத்திகை முகாம்' ஓர் ஒத்திகை பற்றிய உண்மையான செய்திகள் அனைத்தையும் விளக்குகிறது. முகாமில் நாடக மேலாளர் ஒருவர் இருக்கிறார். அவரது விருப்பங்களுக்கு ஏற்றவாறு, நாடகம் முழுவதையும் மாற்றியமைக்க வேண்டும் என்று வற்புறுத்துகிறார். நாடக ஆசிரியர் அந்த முகாமிலிருந்தே ஓடிப்போகும் நிலைக்குத் தள்ளப்படுகிறார்.

இந்நாடகத்தின் ஒரு பகுதி நகைச் சுவை நிகழ்ச்சிகள், சிறுபிள்ளைத்தனமான வார்த்தை ஜாலங்களைக் கொண்டு அமைகின்றன."ஸ்டேஜ் அபெக்ஷன்" – "ஸ்டேஜ் எபக்ட்" என்றும், நாடக மேலாளர் நாடக இறுதியில் சொல்லுவது போல, "நாடகத்திற்கான 'பாஸ்' வைத்திருப்பவர்கள் எல்லாரும் 'பாஸஞ்சர்கள்' என்றும் வரும் இடங்கள் தேவைக்கு ஏற்றவாறு வார்த்தைகளை மாற்றி அமைக்கும் வார்த்தை ஜாலங்கள் ஆகும்.

'மாணவர் விடுதி' என்னும் நாடகம், மதத்தின் மீது மிகு அபிமானம் கொண்டவன் போலத் தோன்றுகிற ஒருவன், எவ்வாறு வேலைக்காரப் பெண் ஒருத்தியைத் தவறான இச்சைக்குத் தூண்டுதல் செய்து, அவளைக் கொடுத்துக் கொலையும் செய்துவிடுகிறான் என்று சொல்லும் நாடகம். விடுதியில் வசிக்கும் பகுத்தறிவுவாத நம்பிக்கையுடைய மாணவன் மீது முதலில் சந்தேகப்படுகின்றனர். குற்றம் செய்தது யார்? என்ற சந்தேகம் இறுதியில் 'வில்லன்' கண்டுபிடிக்கப்படும் வரை நாடகத்தில் மர்மமாகவே நீடிக்கிறது. இதைத்தவிர வேறு விசேஷம் இந்நாடகத்தில் எதுவும் இல்லை. எனினும் ஓரளவுக்குக் கலையம்சத்தோடு படைக்கப்பட்டுள்ளது.

'சலவைக்காரப்பெண்' நாடகம் சலவைத் தொழில் செய்யும் தொழிலாளி ஒருவனுடைய துன்பம் பற்றிச் சொல்லும் பரிதாபமான கதை. அவனுடைய சகோதரி, கற்பழிக்கப் படுகிறாள்; அடித்துத் துன்புறுத்தப்படுகிறாள்; அதனால் நோய் வாய்ப்படுகிறாள். எதுவும் செய்ய இயலாத அந்தச் சலவைத் தொழிலாளி, அழுதுகொண்டிருக்கும் அப்பா இல்லாத சிறுகுழந்தை, பழியெல்லாம் சுமந்து கொண்டிருந்த அந்தப்பெண் – ஆகிய அனைவரும் இந்த அவமானங்களை யெல்லாம் மிகவும் அமைதியாகத் தாங்கிக் கொள்கின்றனர். "என்ன வெறுக்கத்தக்க வாழ்க்கை!" என்று கேசவதேவ் நாட்டு மக்களைப் பார்த்துக்

கேட்கிறார். பாதுகாப்பு இல்லாத, இந்த மக்களின் வாழ்க்கை பற்றிய சித்திரிப்புக்கள், அவை உருவாக்கும் நெகிழ்ச்சித் தன்மைக்காகவே இந்த நாடகம் குறிப்பிடத்தக்க தாகிறது. இந்த நாடகம், கேசவதேவின் நேர்த்தி மிக்க படைப்புக்களுள் ஒன்றாகும்.

'இருளின் மறைவில்' என்னும் சிறுநாடகமும் கேசவ தேவின் படைப்புக்களுள் சுவாரஸ்யமான ஒரு படைப்பே. சிரமமான ஓர் இரவில், தேவைகள் மிகுந்த தம்பதியர் இருவரது சாகசச் செயல்களோடு நாடகம் தொடங்குகிறது. தம்பதியருக்கு நல்ல உணவு சாப்பிடவேண்டும் என்று தோன்றுகிறது. பக்கத்திலிருந்த ஏழை மனிதனுடைய கோழிக் கூட்டிலிருந்து ஒரு கோழியைப் பிடித்துக் கொண்டு வருகிறான் கணவன். தம்பதியர் இருவரும் அவசரம் அவசரமாய்க் கோழியைச் சுத்தப் படுத்தத் தொடங்கினர். பக்கத்து வீட்டில் ஓர் ஆசாமி இருக்கிறான்; எதிலும் முன் வந்து தலையிடும் குணம் உள்ளவன்; இவர்கள் கோழி சமைக்கிறார்கள் என்று தெரிந்து, கோழி பிடித்த செய்தியை வெளியில் அவன் சொல்லிவிடாமல் தடுப்பதற்காக இவர்கள் அவனையும் விருந்துக்கு அழைக்கிறார்கள். இத்தனை முன் ஏற்பாடுகள் செய்தும், முழுமையாய்ச் சமைப்பதற்குப் போதிய விறகுதான் இல்லை. வெந்தும் வேகாததுமான கோழியைத்தான் அவர்கள் விழுங்க வேண்டியதாயிற்று. குழம்பில் காரசாரமும் போதுமானதாக இல்லை; எனவே தொண்டைக்குள் தள்ளுவது பெரும்பாடு ஆகிவிட்டது. எனினும், பெருமுயற்சி எடுத்து உள்ளுக்குள் தள்ளினார்கள்.

இங்கே மறுபடியும் நாம் பார்க்கும் ஒரு விஷயம் நாடக ஆசிரியரின் இரக்க உணர்வே. வழக்கமான நாடக பாணி முறை இல்லை; போட்டிகள், சச்சரவுகள் இல்லை; நிகழ்ச்சிகளை வரிசைப்படுத்தியவாறு அமையும் திறம் பாராட்டுக்கு உரியதாகும்.

'சோஷலிஸ யதார்த்தம்' என்னும் நாடகம், ஒரு புதுமையான கம்யூனிஸ்டுத் தலைவரின் உரை பற்றியது; நாடகம் எழுதியுள்ள ஓர் இளைஞரிடம், அந்த நாடகத்தைக் கட்சியின் நிலைபாட்டுக்கு ஏற்றவாறு,, ஒத்திசைவாக எவ்வாறு அமைப்பது? சோஷலிஸ யதார்த்த விதிகளுக்கு முழுவதும் சரியாக அமையுமாறு எவ்வாறு செய்வது? என்று கட்சித் தலைவர் விரிவுரையே செய்கிறார்.

இந்நாடகத்தில் அமையும் அங்கதச் சுவை, நல்ல மணம் உடையது. இது ஒன்றுதான், வேறுவழியில்லாமல் இந்த நாடகத்தைக் குறிப்பிடத் தக்கதாக ஆக்குகிறது.

'தென்னை மட்டை அடிப்பவர்' - என்ற நாடகம், தென்னை மட்டை நார் உரிக்கும் வியாபாரத்தின் முதலாளி ஒருவனால் அழிக்கப்படும் கயிறு திரிக்கும் தொழிலாளியான ஒரு பெண்ணின் கதையைச் சொல்கிறது. "எல்லா இடத்திலும் மனிதர்கள் விலங்கு பூட்டப்பட்டவர்களாவே இருக்கிறார்கள்" என்று புரட்சியின் தீர்க்கதரிசி சொன்னாரே,அதே தொனியில், ஏழை மக்கள், பணக்காரர்களால் எப்போதும், எல்லா இடத்திலும் ஏமாற்றப்படுகிறார்கள் என்று கேசவதேவ் இந்தச் சிறிய நாடகத்தின் வழியே வெளிப்படுத்துகின்றார். மிகவும் குறிப்பிடத் தக்க படைப்புக்களுள் இதுவும் ஒன்று எனச் சொல்ல முடியாதுதான்; ஆனால் இந்த நாடகம், அவருடைய மனமார்ந்த மனிதாபிமானத்துக்கு ஒரு சுவை மிகுந்த மேலும் ஓர் நிரூபணம் என்பதை மறுக்க இயலாது.

இதே ஆண்டில் வெளிவந்த இன்னொரு தொகுப்பு "மழை இங்கே, குடை அங்கே" என்பதாகும். இத்தொகுப்பில் மூன்று நாடகங்கள் உள்ளன.

தொகுப்பின் தலைப்பு நாடகம், அன்றைய தினத்தின் கம்யூனிஸ்டுத் தலைவர்கள் மீதான விமர்சனம் ஆகும். அந்த அரசியல்வாதிகள், அங்கே, சோவியத்து ரஷ்யாவில், மழை எப்போதெல்லாம் பெய்கிறதோ, அப்போதெல்லாம், இங்கே கேரளாவில் குடைபிடிக்க வேண்டியவர்களாக இருக்கிறார்கள் என்று இந்த நாடகம் சொல்கிறது.

நாடகம் முழுவதும் கேலியும் கிண்டலும்தான். பாத்திரங்கள் அனைவரும் வெறும் நடைச்சித்திரங்களாகவே அமைகின்றன. வரலாற்று ஆசிரியர் 'பதேய்ஸ்கி' - தமிழில் சொன்னால், 'மிகைப்படுத்தாளர்', யாத்திரிகர் ;'நுனாயோவ்' ஆகிய இருவரும் குறிப்பிட்டுச் சொல்லத்தக்க பாத்திரங்கள்; அவ்விருவருடைய திட்டங்கள் மிகவும் பெரியவை; முட்டாள்தனமானவை; விஷமத்தனமானவை. அதற்கு ஓர் உதாரணம்: ஐந்தாண்டுத் திட்டங்களுக்கு எதிராக அவர்கள் நடத்தும் எதிர்ப்பு இயக்கம். எலிகளுக்குச்சார்பாக அவர்கள் ஓர் இயக்கம் தொடங்குகிறார்கள். காரணம், தானியம் தின்னி களாகிய அவைகள் நாட்டின் துன்பத்தை அதிகப்படுத்தி, அதன்

விளைவாய், நாட்டில் புரட்சியை விரைவில் கொண்டு வர முடியும் என நினைக்கிறார்கள்! மனம் ஒடிந்து போனவர்களை வைத்துக் கொண்டு, வரிசையாய் சத்யாக்கிரக நிகழ்ச்சிகளுக்கும் ஏற்பாடு செய்கிறார்கள். வசதி படைத்தவர்களை வைத்து உண்ணாவிரத ஆர்ப்பாட்டத்திற்கும் ஏற்பாடு செய்கிறார்கள். அந்த 'உண்ணாவிரத சத்யாக்கிரகி, இரவில் 'கேஸ்' விளக்கை அணைத்துவிட்டு விரும்பிய உணவைத் தின்று வயிற்றை நிரப்பிக் கொள்ளலாம்! எப்படியோ, வெளித்தோற்றத்திற்கு 'உண்ணாவிரதப் போராட்டம்' தொடர்ந்து நடப்பதாகத் தெரியவேண்டும், அவ்வளவுதான்.

கட்சிக்காரர்கள் ஒரு பிணத்தைத் தேடி எவ்வா றெல்லாம் அலைகிறார்கள் என்று இச்சிறுநாடகம் எடுத்துச் சொல்கிறது. ஓர் ஏழை மனிதன் காலராவினால் இறந்து போகிறான். அவனைத் தூக்கிக்கொண்டு, "அய்யப்பனைக் கொன்ற கொலைகாரர்களுக்குத் தண்டனை கொடு" என்று கத்திக் கொண்டு ஓர் எதிர்ப்பு ஊர்வலம் வருகிறார்கள். பாவம் அவர்கள்! ஊர்வலத்தின் பாதியில், அந்த ஆள் உயிர் பெற்று எழுந்து விடுகிறான். நாடகத்தின் வேடிக்கை நகைச்சுவைப் பகுதிகள், இவ்வாறெல்லாம் புதிய வடிவில் அமைகின்றன. மேலும், அவர்கள், 'இரக்க உணர்வுத் தொழிலாளர் சங்கம்' அமைப்பதும்; இந்தியப்பெயர்களுடன் ரஷ்ய விகுதிகளைச் சேர்த்து, "மத்தாய்ஸ்கி கோபாலனோவ்" , "அய்யப்பனோ-விச் ராகவனோவ்", "விளாசினினா கலியாணினோவ்னா", "சங்கரீனா கார்த்தியாயினினோவா" போன்ற வேடிக்கையான பெயர்களை அமைப்பதும், என ஆசிரியர் புதிய பாணி நகைச் சுவைக் காட்சிகளைத் தீட்டுகிறார்.

அன்றைக்குப் பிரபலமாக விளங்கிய சில இலக்கியப் போக்குக்களையும் கேலி செய்யும் இடங்களும் நகைச்சுவைப் பகுதிகளில் அமைகின்றன. 'வசவசத்த' எழுச்சியில்லாப் பாட்டெழுதும் கவிஞன் ஒருவன், விறகு வெட்டியின் மரணம் குறித்துப் பாட்டு எழுதுகிறான். பலாமரத்திலிருந்து விழுந்து, பின்னர் இறந்து போகும் தன் கணவனுக்காக, அவன் மனைவி அழுது புலம்புகிறாள். உடனே, அங்கே ஒரு எச்சரிக்கை விடுக்கும் முன் அறிவிப்புக் குருவி ஒன்று தோன்றுகிறது. அது அமெரிக்காவின் கொள்கைகளை எதிர்த்து, மக்கள், புகார் மனு ஒன்றை உடனே தயாரித்து, அதனை அமெரிக்க ஜனாதிபதிக்கு அனுப்பி வைக்க வேண்டும் என்றும், ஒரு விரிவுரையே ஆற்றுகிறது!

'மழை அங்கே, குடை இங்கே' என்பது அவருடைய மிகச் சிறிய நாடகம்தான். எனினும், அதனுடைய உள்ளடக்க முக்கியத்துவம், சொல்லப்பட்டுள்ள நுட்பமான பாணி ஆகியவை. இந்நாடகத்தை, அவர் படைத்துள்ள படைப்புகளுக்குள்ளே மிக நேர்த்தியான படைப்பாக ஆக்கிவிடுகின்றன.

இந்தத் தொகுப்பில் அடங்கியுள்ள இரண்டாவது நாடகம் 'பயம்' என்பது. ஒரு நாடகப் படைப்புக்கு இசைந்து வராத மிக மெல்லிய கருத்து ஒன்றைப் பொருளாக ஆக்கி, திகைப்பூட்டக் கூடிய அளவுக்குப் பெரும் வெற்றியை அடையக் கூடியவர் கேசவதேவ். அந்த வகையில் 'பயம்' அவருக்குக் கிடைத்த இன்னொரு வெற்றி எனலாம். கணவனும் மனைவியும் சண்டையிட்டு, கடைசியில் சமரசத்துக்கு வருகிறார்கள் என்ற மிகச் சாதாரண நிகழ்ச்சிதான் 'பயம்' என்னும் நாடகத்தின் 'கரு' வாக அமைகிறது. 'வழி தெளிவாகிறது' – என்ற நாடகம், சென்ற தலைமுறை நாயர் இனத்தைப் பற்றியது. பொருளாதாரத்தில் பின்னடைந்து போன, சென்ற தலைமுறையைச் சார்ந்த, நாயர், தாழ்ந்த இனத்து விவசாயத் தொழிலாளர்களோடு சேர்ந்து வயல்வெளியில் உழைப்பதற்கு விருப்பம் இல்லாமல், பழம் பெருமை பேசுகிறார். அதை விளக்குகிறது இந்த நாடகம். வயது முதிர்ந்த நாயர் தலைவர் ஒருவர், சாதி உணர்வு அடிப்படையில், தனது நிலத்தின் வழியே ஒரு புதிய சாலை அமைப்பதை மிக வன்மையாக எதிர்க்கிறார். இறுதியில், இவர், இளைய தலைமுறையினருக்கு வழிவிடுவதாக நாடகம் அமைகிறது. ஆனால், நாடகம், சுவாரஸ்யமில்லாமல், ஓர் எழுச்சியில்லாமல், மிகவும் மந்தமான போக்கில் அமைந்துவிட்டது.

'நீ இறந்து போனாய்' (1956) என்பதும் சிறு நாடகத் தொகுப்பே ஆகும். 'நீ இறந்து போனாய்' , 'பொய்மை உண்மையாகுமா?' என்ற மேடை நாடகங்கள் இரண்டு இத்தொகுப்பில் உள்ளன. இவ்விரண்டில் முதலாவது நாடகம், ஓய்வு பெற்ற, ரெவின்யூ ஆபீஸ் குறிப்பேட்டைத் தவிர வேறு எதுவுமே அறிந்திராத, ஒரு 'ரெவின்யூ ஆபீசரைக் கேலி செய்யும் நாடகம்; கல்வி அறிவே இல்லாத பணக்காரக் கூட்டம் ஒன்று தங்களை இலக்கியத்தின் புரவலர்கள் என்று காட்டித் திரியும் நிலையைக் கேலி பேசும் நாடகம். எவ்விதத் தகுதியும், எவ்வித நோக்கமும் இல்லாத அவர்களை, பயனில்லாமல் எழுதிக்

கொண்டே இருக்கும் பிரயோஜனமற்ற ஒரு கூட்டம், புகழ்ந்துரை செய்கிறது. அந்தப் பெருந்தலைகளைத் திருப்தி செய்வதற்காகவே, அவர்கள் செய்யும் விசித்திரக் கற்பனைகள் யாவும் வேடிக்கைக்கு உரியனவாக உள்ளன; அவர்கள் எழுதும் பாடல்களும் விசித்திரமாகவே உள்ளன. புரட்சி வேண்டும் என்று பாடப்பட்ட பிரபலமான பாடல்களைப் பற்றிப் பரிகாசம் செய்யும் முறையில், 'ஓ, டைகர் புளூ! ஓ, டைகர் புளூ!' என்னும் நாடகமும், அது போன்ற பிறவும் அமைந்துள்ளன.

'பொய்மை உண்மையாகுமா?' என்னும் நாடகம் கணவன்–மனைவி, அந்தக் கணவனுக்கு உள்ள வேறு ஒரு ரகசியக் காதல் ஆகியவை தொடர்பானது. பொய் சொல்லித் திரியும் தனது நண்பர்களுடனும், தாங்க முடியாத மூடத்தன்மை மிக்க வேலைக்காரனுடனும், அந்தக் கணவன், செய்து காட்டும் சாமர்த்தியமான ஏமாற்று வேலைகள் ஓரளவுக்கு வேடிக்கை நிகழ்ச்சிகளாக அமைகின்றன. இந்தத் தமாசு நாடகத்தில் புதுமைத்தன்மை ஏதுமில்லை!

கேசவதேவ் மேடைக்காகவே படைத்த நாடகங்கள், நாடகப்படைப்பாக்கத்தில் அவர் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவர் என்பதை நிரூபிக்கின்றன. நாடக ஆக்கத்தில் அவரது பல முயற்சிகள் வெற்றி பெறாமலும் போயுள்ளன. அத்தகைய வெற்றி பெறாத படைப்புக்கள் வெறும் 'மேடைப் பேச்சுக்கள்' பாணியில் அமைந்திருந்தன. என்றாலும், அவரது தோல்விப் படைப்புக்கள் அவரது மனிதாபிமான நோக்கங்களின் சாட்சியங்களாகத் திகழ்கின்றன.

# 5. பல்வகை

கணிசமான அளவுக்கு நாவல்களும், சிறுகதைகளும், நாடகங்களும் படைத்தளித்த கேசவதேவ், இவைதவிர, உரைநடையில் அமைந்த வேறுபிற பல்வகைப் படைப்புக்களும் எழுதினார்.

இவை அனைத்திலும் முதன்மையானது அவருடைய 'எதிர்ப்புக் கொள்கை' என்னும் நூலாகும். இது 'எதிர்ப்பு' என்ற அவரது சுயவரலாற்றுக் குறிப்பு நூலிலிருந்து விரிவாக்கம் செய்யப்பட்டது. இதனை மிகப்பெரிய ஆய்வு நூலென்றே சொல்லலாம்; ஆச்சரியப்படத்தக்க வகையில் கவனத்தை ஈர்க்கக் கூடிய விஷயத்தைத் தனக்குள் இது கொண்டிருந்தது; கேசவதேவின் ஆரம்பகாலத்து நினைவலைகளை விவரித்தது; அவர், இப்போது என்னவாக இருக்கிறாரோ, அந்தக் கொள்கையின் வெளிப்படையாக விரித்துரைக்கப்பட்ட பொருளாகவும் இந்த நூல் உள்ளது. இந்த நூலில், தனது ஆரம்பகால வாழ்க்கை பற்றிப் பாரபட்சமற்ற முறையில் கருத்துத் தெரிவிக்க முயன்றுள்ளதாகக் கேதவதேவ் முன்னுரைக் குறிப்பில் உறுதிப்படுத்துகிறார். ஆசிரியரின் வார்த்தைகளில் அப்படியே சொல்வதென்றால் இப்படிச் சொல்லலாம்: "படர்க்கை என்னும் மூன்றாமவர் பார்வையிலிருந்து அவருடைய கடந்த காலத்தை அவர் நோக்குகிறார்." ஆனால் புனைகதைப் போக்கு மிகுந்த சுயவரலாற்று நூலைப் போலவே இந்த நூல், அவருடைய கொள்கைப் போக்குமிக்க தன்னோவியத்தையே நமக்கு அளிக்கிறது; அவர் பல்வேறு ஜனங்களோடு போட்டுக் கொண்ட சண்டைகளை விவரிக்கிறது; அதிகார வர்க்கத்தோடு ஒத்துப்போக முடியாத அவரது கொள்கையின் விரிவான அலசலாக அமைகிறது. அவரே நமக்குச் சொல்லுவதுபோல, கேசவதேவ் ஆரம்பகாலத்திலிருந்தே ஒரு முழுமையான எதிர்ப்பாளராகவே இருந்திருக்கிறார்.

கேசவதேவின் ஆசிரியர்கள் மிகவும் பாரபட்சமாக நடந்துகொண்டார்கள். வீட்டில் மாமன்மார்கள் காட்டியதை விட இது குறைந்ததல்ல. இதனால் கேசவதேவ் மனம்

வருந்தினார். ஆரம்பகால வாழ்க்கையில் அவர் எப்படி வீட்டில் ஒரு பிரச்சனைக்குரிய குழந்தையாக இருந்தார் என்பதை முதலாவது அத்தியாயத்தில் மிக விரிவாகக் கேசவதேவ் நமக்குச் சொல்கிறார். கேசவதேவ் கற்கடக மாதத்தில், கடக ராசியில் ஒருநாள் நடுஇரவின்போது பிறந்தார். கேரளவாசிகள் கற்கடக மாதத்தைப் பொதுவாக அபசகுணமான மாதம் என்றே கருதுவர். அவ்வாறு பிறந்த அவர் 'குவா' என்று சிறிதாய்ப் பூனைச்சத்தமிடும் குழந்தையாகப் பிறக்கவில்லையாம்! 'முட்டாள்கள் நிறைந்த நாடக மேடையாகிய இவ்வுலகத்திற்கு வந்துவிட்டோமே' என்று லீயர் அரசன் பாணியில் கத்தவுமில்லையாம்! மாறாக, தாயாரின் வயிற்றிலிருந்து ஒரு தாவு தாவி இவ்வுலகத்திற்கு வந்தாராம்! வந்து ஒரு பெரிய கர்ஜனையே செய்துவிட்டாராம்!- இப்படித்தான் சொன்னார்கள் என்று கேசவதேவ் எழுதுகிறார்.

அடுத்து, தொடர்ந்துவரும் அத்தியாயங்களில் கேசவதேவ் நினைவலைகளாகப் பல செய்திகளைக் குறிப்பிடுகின்றார். பெற்றோர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் அவர் தொல்லைதரும் பிள்ளையாக வளர்ந்தது; தன்னோடு ஒத்துப்போகாதவர்கள் மீது கல்லெறிந்தது; மாமன்மார்களோடு சவால்விட்டு எதிர்த்துப்பேசியது; மோசமாய் நடந்து கொள்ளும் சித்தி, அத்தை ஆகியோர் பற்றிக் கதைப் பாட்டுக் கட்டியது; பள்ளி ஆசிரியர்களிடம் தர்மசங்கடமான கேள்விகளைக் கேட்டது; -ஆகிய மற்றும் பல நினைவலைகளை ஆசிரியர் விவரிக்கின்றார். "கட்டுக் கல்யாணம்" என்னும் நிகழ்ச்சியின் போது அவலட்சணமான நம்பூதிரி ஒருவருக்கு மரியாதை செய்யுமாறு அவர் எவ்வாறு கட்டாயப்படுத்தப்பட்டார் என்னும் நிகழ்ச்சியையும் கேசவதேவ் நமக்குச் சொல்லுகின்றார். 'கட்டுக்கல்யாணம்' என்பது கேசவதேவ் சார்ந்திருந்த இனத்தில் அன்று வழங்கிவந்த வெறுக்கத்தக்க ஒரு வழக்கம்! அந்த வழக்கத்தின்படி, அந்த இனத்தின் சம்பிரதாயத்தின்படி, மிகவும் இளைய பருவத்துப் பெண்களைச் சடங்கு நியமனங்களோடு மணப்பெண்ணாகக்கருதி, எண்பதுக்கும் தொண்ணூறுக்கும் இடைப்பட்ட வயதுள்ள முதிய நம்பூதிரிகளுக்கு வழங்குவார்கள்; இந்த வழக்கத்தைக் கேசவதேவ் தீவிரமாக எதிர்த்தார். இந்த வழக்கத்தின் மீது அவருக்கு இருந்த எதிர்ப்பும் கசப்பும் அவரது வாழ்நாள் முழுவதும் அவரிடம் இருந்தது. அந்த வழக்கத்தை முடிந்த அளவுக்கு, தனக்குத் திருப்தி ஏற்படும் வரை அவர்மிகக் கடுமையாகப் பரிகாசம் செய்து விமர்சித்து வந்திருந்த போதிலும்,

இறுதிவரைக்கும் அதன் மீதிருந்த வெறுப்பு அவரைவிட்டு நீங்கவில்லை. இந்தக் குறிப்பிட்ட நிகழ்ச்சிகளை குறிப்பிட்ட இந்தக் கோணத்தில் நோக்கினால், 'எதிர்ப்பு' ஓர் ஒளிமிக்க படைப்பு; ஒரு புரட்சிக்காரனின் ஆரம்பம் என்பது தெளிவாகும். இத்தன்மையின் காரணமாக, கேசவதேவ் படைத்த அனைத்துப் படைப்புக்களிலும் இதுவே மிகவும் சுவாரஸ்யமான படைப்பு எனலாம். இந்தக் கதையில் கேசவதேவ் தனது ஆரம்பகால வாழ்க்கையை உண்மையிலேயே மிக உன்னிப்பாகவே கண்டறிந்து படிப்படியாக விவரித்துச் சொல்கிறார்.அவருடைய வாழ்க்கையின் ஒவ்வொரு கூறுகளும் எவ்வாறெல்லாம் திட்டமிட்டு அவரை ஓர் எதிர்ப்பாளராக ஆக்கிவிட்டன என்றும் விரிவாக விளக்குகிறார். இந்த நூலின் முதன்மையான வசீகரத்தன்மை அது முன் வைக்கும் வாழ்க்கைபற்றிய கொள்கைதான். என்ன கொள்கை? தீமைகளை எதிர்த்தல் என்னும் கொள்கை. அடக்குமுறைசெய்த நிறுவனங்களையும், அமைப்புக்களையும், மனிதனின் மீட்பை எதிர்த்துவந்த மதம்போன்ற தீமையை எதிர்க்கும் கொள்கை! கேசவதேவின் இந்தப் படைப்பு இவ்வாறு இருப்பதில் ஆச்சரியம் ஏதும் இல்லை. கேசவதேவ் வேறு எப்படி இருந்தாரோ, இல்லையோ, முழுவதுமாய் ஒத்துப்போகாத தன்மையுடையவராக, முற்போக்குச் சிந்தனையுடையவராக இருந்தார்.

கேசவதேவின் இன்னொரு சுயசரிதைப் படைப்பு, "கால்நூற்றாண்டுக்கு முன்பு கேசவதேவ்" என்பதாகும். இந்தப்படைப்பு, வாழ்க்கை, இலக்கியம் ஆகியவை பற்றிய கேசவதேவின் மற்றுமொரு புதிய கொள்கையை, மிகவும் தெளிவாகவும் அதேநேரத்தில் சுருக்கமாகவும் நமக்குத் தருகிறது. தன்னால் வெறுத்து ஒதுக்கப்பட்டிருந்த தன்காலத்துச் சமுதாயத்தில் ஒரு தார்மீக ஆயுத எழுச்சியைக் கொண்டு வரவேண்டும் என்று அவர் எவ்வாறு நெடுகிலும் விரும்பி வந்துள்ளார் என்பதை அந்த நூலின் முன்னுரைக் குறிப்பில் கேசவதேவ் எடுத்துச் சொல்லுகிறார்.

ஆங்கிலக் கவிஞன் பைரன் பாணியில், கேசவதேவ் தன்னைத்தானே "நான் ஒரு இலக்கியப் பறையன்" என்று அறிவித்துக்கொண்டார். அதாவது, இலக்கியத்தில் அவர் 'பிசாசின் சீடன்' என்றும் கூட ஒருவர் சொல்லலாம்.*

---

* 'பறையர்கள்' எனப்படுபவர்கள் தாழ்த்தப்பட்டவர்கள்; முரட்டுத்துணிச்சலுக்குப் பெயர் பெற்றவர்கள்.

எழுத்தச்சன் அகில உலக அளவில் மதிக்கப்படும் ஞானி; மலையாளப் பக்தி இயக்கத்தின் பெருங்கவிஞர்; நமது பழங்கால எழுத்தாளர்களை விடத் தூய்மையானவர்; தனிச்சிறப்பு உடையவர்; கேசதேவின் முதல் பீரங்கித் தாக்குதல் இத்தகைய எழுத்தச்சன் மீதுதான் விழுந்தது. இதுவும் கூட ஒரு வகையான 'இலக்கிய வித்தை'; உணர்ச்சியைத் தூண்டி விடுகிற ஒரு முயற்சி என்றே சொல்லலாம். நவீனப் படைப்பாளராகிய டி.எஸ்.எலியட், மில்ட்டனுக்கு எதிராகக் கண்டனம் கிளப்பினார். ஒரு புதிய சிந்தனைக் குழுவைச் சார்ந்த, இளைய, உறுதி மிகுந்த இலக்கியக்காரனாகிய டி.எஸ்.எலியட் அனைவரின் கவனத்தையும் ஈர்ப்பதற்காகச் செய்த செயலே இது. அது போன்றதுதான் கேசவதேவ் எழுத்தச்சன் மீது தொடுத்த கண்டனத் தாக்குதலும் ஆகும். எழுத்தச்சன் மீது கேசவதேவ் தொடுத்த தாக்குதலின் உள்நோக்கம், மலையாளத்துப் பக்தி இலக்கிய மரபுக்கு ஒரு மரண அடி கொடுத்து வைக்கலாம் என்பதாகவே இருக்கும். இந்த நூலில் சேர்க்கப்பட்டுள்ள மிகவும் முக்கியமான கட்டுரை 'எழுத்தச்சனும் மலையாள இலக்கியமும்' என்பது. அந்தக் கட்டுரை, பக்தி இயக்கத்தின் பழைய உலககவியைத் தூக்கித் தண்ணீருக்குள் எறியுங்கள் என்று அழைப்புக் கொடுக்கும் கட்டுரை! ஒரு குறிப்பிட்ட காலத்தில் நமது இலக்கிய சாம்ராஜ்ஜியத்தில் ஒரு பெரிய உணர்ச்சிப் பிரவாகமாகவே இருந்த கட்டுரை! அடுத்த முக்கியமான கட்டுரை 'கலையும் கலைஞனும்' என்பது. இக்கட்டுரை இயல்பான ஒரு தொடர் விளைவே; இலக்கியத்தில் ஒரு புதிய கொள்கைக்காக, ஆற்றல் மிக்க எக்காளக் குரலை இக்கட்டுரை எழுப்பியது. இலக்கிய மரபுவாதிகளை எதிர்த்தும், தற்காலச் சீரழிவுச் சமுதாய நிலையைத் தக்க வைத்துக் கொள்வதையே மனமார்ந்த நோக்கமாகக் கொண்ட இலக்கிய சுகபோகிகளாம் நவநாகரிகர்களை எதிர்த்தும், வாழ்க்கையில், இலக்கியத்தில் அறிவுக்குப் பொருந்தாத விதிமுறைகளையும் சம்பிரதாயங் களையும் மேற்கொள்ளுபவர்களை எதிர்த்தும், ஆயுதம் தாங்குமாறு எழுத்தாளர்களுக்கு அழைப்புவிடுக்கிறது இக்கட்டுரை. இந்த நூலின் மூன்றாவது கட்டுரை புரட்சிகரப் புதிய இலக்கியக் கொள்கை பற்றிய உடன்பாட்டு அணுகு முறையாக அமைகிறது. மற்றுமொரு கட்டுரையில், கேசவதேவ், ஏற்கனவே நிலவி வந்த பழைய இலக்கியக் கொள்கை பற்றிக் குறிப்பிட்டு,அது நடப்பில் இல்லாதது, துஷ்டத்தனமானது,

எழுத்தாளர்கள் அதிலிருந்து விலகி வரவேண்டும் என்று பேசுகின்றார். கேசவதேவ் குறிப்பிடுவது போல, அந்தப் பழைய கொள்கை "புழக்கத்தில் இல்லாத ரூபாய்" போன்றது. அந்த வகையான இலக்கியம் போலித்தனமானது. அந்தக் கட்டுரைக்கு அவர் தந்திருந்த தலைப்பு "கள்ள நாணயம்" என்பதாகும். அடுத்த கட்டுரையில் பொருளாதாரம் தான் சாதியத்தின் அஸ்திவாரம் என்று வாதிடுகின்றார். அதற்கு அடுத்த கட்டுரையில், இல்லாதவர்கள் அனைவரும் ஒன்று சேர வேண்டும் என்றும், அனைத்து அநீதிகளுக்கும் எதிராகப் போராட வேண்டும் என்றும், ஒரு சோஷலிஸ சமுதாயத்தை அமைப்பதற்காகப் புறப்பட வேண்டும் என்றும் கேசவதேவ் அழைப்பு விடுக்கிறார். நீண்ட நாட்களுக்கு முன்பே, தேசிய இயக்கமானது சோஷலிசம் தான் தேசத்தின் குறிக்கோள் என்று தேர்ந்து கொண்டிருந்தது. அதுதான் இது என்பதை நினைத்துப் பார்க்க வேண்டும். சுருக்கமாகச் சொன்னால், இந்த நூல் மிகவும் துணிச்சலான ஒரு பிரகடனம்! வாழ்க்கையிலும் இலக்கியத்திலும் ஜனநாயக மதிப்பீடுகள் வேண்டும் என்று விடுக்கப்படும் பிரகடனம்! கடந்த காலம் தூக்கிப் பிடித்திருந்த நிலப் பிரபுத்துவ இலக்கிய மதிப்பீடுகளுக்கு, ஒரு பொருத்தமான சமாதியைக் கொடுத்துவிட்டு, நமது நாட்டு வரலாற்றில், ஒரு புதிய யுகத்தை முன்னறிவிக்க வேண்டும் எனக் குரல் கொடுக்கும் பிரகடனம்! சமுதாய, அரசியல் அளவிலும் இலக்கிய அளவிலும் இந்த நூல் ஏற்படுத்திய பாதிப்பு மிகவும் குறிப்பிடத் தக்கதாகத்தான் இருந்திருக்க வேண்டும்!

கேசவதேவ் அளித்த பிற இரண்டு நினைவலை நூல்கள் "திரும்பிப் பார்", "என் நண்பர்கள்" என்பவை. இவை இரண்டும் இலக்கியத்தில் சற்றுப் புதுமையானவை என்று சொல்லலாமே தவிர, இலக்கியத் தகுதியை நிரந்தரமாய்ப் பெறக் கூடியவை அல்ல. இவ்விரு நூல்களிலும் கேசவதேவின் வழக்கமான 'சூடு' இல்லை. எனவே இவ்விரு நூல்களும் ஒருவகையான 'பந்திப் பேச்சு' போலவே உள்ளன என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். இந்த மாதிரியான படைப்புக்களில் கேசவதேவ் சிறப்புப் பெறவில்லை.

இவருடைய 'வாழ்க்கைப் பார்வை' என்னும் படைப்பு சாதியம் பற்றிய கேசவதேவின் பார்வையை விவரிக்கிறது; சோஷலிசத்தின் அவசியத்தை முன்வைக்கிறது. இந்நூலில் பல

விவாதங்கள் புதிய பாணியில் நடத்தப்படுகின்றன என்பது உண்மை; அது மட்டுமல்ல, அவை ஓரளவுக்கு சுவாரஸ்யமாகவும் உள்ளன. உலகத்தின் வல்லரசு நாடுகளிடையே "படைக் குறைப்பு" அவசியம் என்பதும், பாசிஸ்டுகளுக்கு எதிராகப் போரிடுதல் பற்றிய ஓர் அடிப்படைச் சிந்தனை வேண்டும் என்பதும் இந்நூலில் காணப்படும் பல குறிப்புக்களுள் சில ஆகும். இந்த நூலில் அடங்கியுள்ள இன்னொரு கட்டுரை நமது திரைப்படங்களுக்கு இருக்க வேண்டிய ஒழுங்கு விதிகள் பற்றியது; மற்றுமொரு கட்டுரை நாட்டின் தொழிற்சங்க இயக்கத்தின் வரலாற்று பூர்வமான விவரணமாக அமைகிறது; மேலும் இந்த விவரணம் தொழிற்சங்கப் பணியாளர் ஒருவருக்குத் தேவையான பொதுவான நெறிமுறைகளை வழங்கும் கட்டுரையாகவும் அமைகிறது!

"நான் என்ன நினைக்கிறேன்" என்ற படைப்பும் இதே மாதிரியானதுதான். இது பல்பொருள் பற்றிப் பேசும் கட்டுரைகளின் கலவைத் தொகுப்பு ஆகும். உள்ளே விவாதிக்கப்படும் இரண்டு முக்கியப் பொருள்களுள் ஒன்று இலக்கியத்திற்கும் அரசியலுக்கும் இடையிலான தொடர்பு பற்றியது; இன்னொன்று தொழில் மயமாகி விட்ட திரைப்படத்தைக் காப்பாற்ற வேண்டியதன் அவசியம் பற்றியது. இந்நூலில் உள்ள வேறு சில கட்டுரைகளில் கேசவதேவ், புனை கதை இலக்கியம் பற்றிய தனது கொள்கைகளை வெகு நிதானமாக விவரிக்கின்றார்; நமது வாழ்க்கை முறையிலும், பிறவற்றிலும் "அமெரிக்க பாணி" வளர்ந்து வருவது குறித்து மக்களை எச்சரிக்கிறார். வேறு ஒரு கட்டுரையில் மொழி வெறித்தனத்தையும் கண்டனம் செய்கிறார். நமது நாட்டுக்குப் பலம் பொருந்திய தேசிய ஒருமைப்பாடு வேண்டும் என்கிற கண்ணியமான வேண்டுகோளையும் கேசவதேவ் முன் வைக்கிறார்.

இந்தத் தொகுப்பு நூலின் இன்னொரு கட்டுரை, யுத்தத்தின் தீமையையும் கொடூரத்தையும் பற்றியது; வேறு ஒரு கட்டுரை மதம், பாலியல் பற்றியது; மனிதனுக்குள் பதுங்கிக் கிடக்கும் மிருகம் பற்றிப் பேசி, இலக்கியத்தின் நோக்கம் மனித உலகத்தை மானுடப்படுத்துவதே என்று விளக்கும் கட்டுரைகளும் உள்ளன. மேலும் மிக அருமையான இரண்டு கட்டுரைகளும் அடங்கியுள்ளன. அவற்றுள் ஒன்று உணர்ச்சி ததும்பும் வெளிப்பாடாக அமைந்து, ஏசுகிறிஸ்துவும், காரல்

மார்க்சும் புத்துயிர்ப்புப் பெற்று மீண்டு வந்து, ஒருவராக ஆகி, நம்மிடையே தோன்ற வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறது. இன்னொன்று, பேராசிரியர் முண்டசேரி அவர்களை ஒரு திறனாய்வாளராகப் பார்த்து, அவரது படைப்புக்கள் பற்றிய பாராட்டு முறை ஆய்வாக அமைகிறது. கேரள இலக்கிய நெடும்பரப்பில் அழித்தலும் ஆக்கலுமாகிய பெருங்காற்றாக அவரைப் பார்த்து, கேசவதேவ் புகழ் அஞ்சலி செலுத்தியிருக்கும் இந்தக் கட்டுரை, நம் காலத்துப் படைப்பு மேதைமை மிக்க ஒருவர் பற்றி எழுதப்பட்ட எழுச்சி மிக்க படைப்பு ஆகும்.

படைப்பாக்கங்கள், கட்டுரைகள் என்று பலவகையாக அமைந்த கேசவதேவின் வித்தியாசமான படைப்புக்களுக்குள் "ஒரு காதலனிடமிருந்து வந்த அந்தக் கடிதம்", " ;சித்திரகூடம்" ஆகிய இரண்டும் காலத்தால் மிகவும் முந்திய படைப்புக்கள். முன்னது 1930-ஆம் ஆண்டிலும், பின்னது 1945-ஆம் ஆண்டிலும் வெளியானவை. கவிதையின் வேலை, இப்போதிருக்கும் சமுதாய ஒழுங்கில் எவ்வாறு மாறுதல்களைக் கொண்டு வருவது? குறிக்கோள் உடைய ஒரு சமுதாயத்தைக் கொண்டு வருவது எப்படி? அப்படிக் கொண்டு வரப்படும் சமுதாயத்தின் கூறுகள் எப்படி இருக்கும்? என்பவை முதலாவது நூலில் விவாதிக்கப்படும் கருத்துக்கள் ஆகும். மனச்சோர்வுக்கான காரணங்களும், அவற்றுக்கான சிகிச்சை முறைகளும் என்பன போன்ற உளவியல் பொருள் பற்றிய கட்டுரையும் அரிதாக இடம் பெற்றுள்ளது.

பொதுமக்களைப் பாதிக்கும் வறுமை, என்னும் பிரச்னை, சமுதாய நீதியின் தேவை, ஸ்தம்பித்துப் போய்க்கிடக்கும் தற்கால நிலையிலிருந்து மீளுவதற்கான வழி - ஆகிய சிக்கல்களைப் பிரதிபலித்துக் காட்டும் தொகுப்பு நூலே "சித்திரகூடம்" என்னும் நூல். ஒவ்வொரு கட்டுரையிலும் காணலாகும் ஒழுக்க நெறித்தாகமும், கருத்து வெளிப்பாட்டுப் பாங்கும் மிகவும் மெச்சத் தக்கவையாக உள்ளன. ஆனாலும், ஓர் ஒட்டு மொத்தமான பார்வையில் பார்க்கும் போது, இந்த நூலில், சமுதாய சீர்திருத்தவாதி ஒருவர், இருட்டறைக் குள்ளிருந்து வெளியே வருவதற்குத் தடவித் தட்டுத் தடுமாறிக் கொண்டிருக்கிறார் என்பதை உணரலாம்.

கேசவதேவின் "நெருப்பும் பொறியும்" , "ரஷ்யாவின் காதலன்" என்னும் இரண்டு நூல்களும், அவருக்கே உரித்தான

சிறப்பியல்புகளைப் பெற்றுள்ள, பல்வகைகளின் தொகுப்பு ஆகும். "நெருப்பும் பொறியும்" என்னும் நூல், சோவியத்தின் அக்டோபர் புரட்சி பற்றி மலையாளத்தில் வெளிவந்த முதல் நூல் ஆகும். அது சோவியத்து முறை பற்றிப் புகழ்ந்து பாராட்டும் படைப்பு. அடுத்த படைப்பு அதே சோவியத்து முறை பற்றிய அவரது உரத்த கண்டனம் ஆகும். பாராட்டி எழுதிய முதல் நூலுக்குப் பிறகு, பல ஆண்டுகள் கழித்து, தான் கொண்டிருந்த தவறான கருத்திலிருந்து விலகி, உண்மையைத் தெரிவிக்க இக்கண்டன நூலை எழுதினார் போலும்! கேசவதேவ் பற்றிப் பாரபட்சம் ஏதுமின்றிப் பின்வருமாறு சொல்லலாம்: கேசவதேவ் வாழ்நாள் நெடுகிலும் இலட்சியப் பிடிப்பாளராகவே இருந்தார்; "ரஷ்யாவின் காதலன்" என்னும் அவரது கண்டனப் படைப்பும் ஓர் இலட்சியப் பிடிப்பின் வெளிப்பாடுதான்; அதாவது செயலாக்க முடியாத இலட்சியப் பிடிப்பின் வெளிப்பாடு!

பல்வகைப் பொருள்கள் மீது பல்வகையாய் அமைந்த கேசவதேவின் இந்த நூல்கள், அவருடைய பிற இலக்கியப் படைப்புக்களைப் போலச் சிறப்புக்கு உரியவை அல்ல; ஆனால் ஒட்டு மொத்தமாகப் பார்க்கும் போது அவை சுவாரஸ்யம் மிக்கவை; அவரது மொத்தப் படைப்புக்களுக்கும் – சிறப்பாக புனைகதைப் படைப்புக்களுக்கு – விளக்கம் தரும் அடிக் குறிப்புக்களாக அமையக் கூடியவை; பிற இடங்களில் அமையும் அடிக்குறிப்புக்களைப் போலவே, ஒரு வகையில், இவையும் தொல்லை தருபவையே; எனினும் இவை பயனுள்ளவை.

# 6. முடிவுரை

கேசவதேவ் இப்படிப் பன்முகச் சாதனையாளராகத் திகழ்ந்தார். நாவலாசிரியர், சிறுகதைப் படைப்பாளர், நாடக ஆசிரியர், திறனாய்வாளர், சமூக சீர்திருத்தவாதி - இவ்வாறெல்லாம் திகழ்ந்த அவர் தந்த படைப்புக்களில், உள்ளபடியே சொல்வதென்றால், அரை டஜன் படைப்புக்கள் சாகாவரம் பெற்றவை எனலாம். ஏற்கனவே சுட்டிக் காட்டியபடி, அவர்காலத்தில் விளங்கிய முன்னணிச் சக்திகளுள் அவரும் ஒரு சக்தியாகக் கேசவதேவ் விளங்கினார்; மாநிலத்தின் சமுதாய-அரசியல் வரலாற்றில் ஒரு மறுமலர்ச்சியை உருவாக்கியவர்களுள் ஒருவராக விளங்கினார்; மானுடத்தின் பெருமையைத் தூக்கிப் பிடித்து, நீதி, கருணை, உரிமை ஆகியவற்றை நேசிக்கும் மக்கள் அடங்கிய, ஒரு புதிய, துணிவு மிக்க இந்திய தேசம் என்னும் கனவை மக்களுக்கு ஊட்டிய ஞானியாகவும் திகழ்ந்தார். இவ்வாறு மனிதகுல விடுதலைக்கான போராட்டத்தில் அவர் ஒரு படைவீரனாகவே திகழ்ந்ததால், கேசவதேவ், நமது தேசவரலாற்றில் உறுதியான, அசைக்க முடியாத இடத்தைப் பெற்றிருக்கிறார் எனலாம்.

காலம் சென்ற ஏ.பாலகிருஷ்ணப் பிள்ளை அவர்களை, அவர் காலத்திய இலக்கியத்திற்கு நெறிமுறைகளை வகுத்துக் கொடுத்தவர் என்றே சொல்லலாம். அத்தகைய அவர், "கேசவதேவ் நமது மொழியின் மகாகவி என்று போற்றப் படவேண்டியவர்" என்று பாராட்டுவார். அதற்குக் காரணம், கேசவதேவ் நமது இலக்கியத்தின் முதல் ஜனநாயகவாதியாக இருந்து முன்னோடிப் படைப்புக்களைப் படைத்ததுதான் எனலாம். அந்தக் காலக் கட்டத்தின் போது, நமது தேசத்தில், ஒரு புதிய சமுதாய ஒழுங்கையும், மக்களிடத்தில் ஒரு புதிய சமுதாய விழிப்புணர்ச்சியையும் கொண்டு வர வேண்டும் என்று சபதம் எடுத்துக் கொண்ட உன்னதமான சகோதரத்துவ உணர்வுடைய இலக்கியவாதிகள் பலர் இருந்தனர். அவர்களுள்,

வேறு எவரை விடவும், கேசவதேவ்தான் ஒரு புதிய சமுதாய ஒழுங்கிற்கான போராட்டத்தில்தலைமை ஏற்று முன்னெடுத்துச் சென்றவர் ஆவார். அவர் ஆற்றிய இந்தப் பணிக்காக மட்டுமே கேசவதேவ் 'மகாகவி' என்று புகழப்பட வேண்டியவராவார். ஏ.பாலகிருஷ்ணபிள்ளையவர்கள், கேசவதேவை 1945–ஆம் ஆண்டிலேயே 'மகாகவி' என்று பிரகடனம் செய்துவிட்டார்!

இருப்பினும், 'கவிஞர்' என்னும் வார்த்தையை நாம் ஓர் இறுகிய, சம்பிரதாயமான பொருளில்தான் பயன்படுத்துகிறோம். அதாவது, தேர்ந்த சொற்களால், மிகவும் அழகாக, வேலைப்பாடுகள் செய்து, 'ஐந்தாறு சொற்களில் ஆபரணம்' செய்யும் திறன் பெற்றவரில்லை கேசவதேவ் என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

செர்ரி பழங்களின் நுண்ணிய கற்களிலிருந்து உருவங் களைச் செதுக்கும் வேலையைக் கேசவதேவ் செய்யவில்லை; ஆனால், பாறாங்கற்களிலிருந்து பெரும் பெரும் சிலைகளையும் கூடச் செதுக்கி எடுக்கும் அளவுக்கு அவர் ஏராளமான சக்தியைப் பெற்றிருந்தார். கவிஞர் ஒருவரின் ஆற்றல் எதிலே இருக்கிறது? ஆர்தர் க்வில்லர் கோச் உறுதி படச் சொல்லுவது போல, மக்களை, எழுத்தாய், இலக்கியமாய் ஆக்கிப்படைத்துக் காட்டுவதிலே தான் கவிஞன் ஒருவனின் ஆற்றல் பொருந்தி யிருக்கிறது. இத்தகைய பாராட்டுக்குரிய கவியாற்றல் உண்மையிலேயே பொருந்தப் பெற்றவர் கேசவதேவ்! இந்தப் பெரிய கலைஞன் வரிசையாய்த் தீட்டித் தந்துள்ள, எப்போதும் பாராட்டுப் பெறத் தக்க, சித்திரிப்புக்களைப் பார்த்தால் இந்த உண்மை புலனாகும். பப்பு, பத்மநாப பிள்ளை, அப்து, குஞ்சன், பரமு, கிருஷ்ணகுறுப்பு, மாடன், குஞ்சுகுறுப்பு, புரட்சியின் ஆத்மா என்று சொல்லப்படத்தக்க, 'கண்ணாடி' நாவலில் இடம் பெற்றுள்ள, 'காட்டு', சுமதி அம்மா, தாட்சாயணி அம்மா, தத்தா, பாத்துமா, லட்சுமி, எலி, சாரா மற்றும் பலரும் ஆண்களும் பெண்களுமான பாத்திர வடிவில் அமைந்த முழு நீள ஆய்வு என்றே கொள்ளலாம். மரியக்குட்டி, கொரான், தீனம்மா, ஆகியோரும், பிறரும் சிறிய அளவிலான ஆய்வு என்றே கொள்ளலாம். இச்சிறிய அளவிலான படைப்புக்கள் கேசவதேவின் சிறுகதைகளில் மின்னல் கீற்றுக்களைப் போலப் படைக்கப்பட்டிருந்தாலும், இவையும் புகழுக்குரிய படைப்புக்களே ஆகும். முழுமையான சக்தியும், தனித்தன்மையும்

மிக்கவையாக இவை இருப்பதால் , வாசகரின் நினைவில் இவை காலமெல்லாம் நிலைத்து விடுகின்றன. எல்லோருக்கும் பரிச்சயமான,எல்லாரும் ஒத்துக் கொள்கிற, "முழுமையான பாத்திரம்" என்னும் வார்த்தைப் பிரயோகத்தின் படி பார்த்தால், கேசவதேவ் படைத்த சில பாத்திரங்கள் 'முழுமையான பாத்திரங்களாக' இல்லை என்பது உண்மைதான். ஆனால் கேசவதேவ் படைப்புக்கள் ஒவ்வொன்றிலும் மாற்றம் இல்லாத ஏதோ ஒரு நிலைத்த தன்மை இருக்கத்தான் செய்கிறது!

சுமதி அம்மா பாத்திரத்தை எடுத்துக் கொண்டு ஆலோசிப்போம். சுமதி அம்மா பாத்திரம் ஒரே ஒரு காட்சியில் வெகு பிரகாசமாகப் படைக்கப்பட்டுள்ளது. அந்தக் காட்சி சுமதி அம்மாவும் அவளைப் பழித்துப் பேசும் வில்லன்களும் சந்தித்துக் கொள்ளும் காட்சி. தாழ்த்தப்பட்ட சாதிக்காரனாகிய குஞ்சன், மங்களாசேரி குடும்பம் சம்பந்தமான அலுவல்களைக் கண்காணிப்பவனாக இருக்கிறான்; இப்பணியை மிகவும் திறம்படவும் ஆற்றுகிறான்; தாக்குதலில் இருந்து அந்தக் குடும்பத்தைப் பாதுகாப்பவனாகவும் இருக்கிறான். தாழ்ந்த சாதிக்காரனாகிய குஞ்சன் இவ்வாறெல்லாம் செயல்படுவது பச்சழி குடும்பத்தினருக்குத் தாங்க முடியவில்லை. ஒரு நாள் மங்களசேரி குடும்பத்தினர் பெண்களும் குழந்தைகளுமாகக் கோவிலிலிருந்து திரும்பிக் கொண்டிருந்தார்கள். அதைப் பார்த்த அந்த அசட்டுத் துணிச்சல்கார தாமோதர குறுப்பு பின்வருமாறு உரக்கக் கத்திச் சொன்னான்:

"குஞ்சனின் ஈழவப் பட்டாளம் போகுதே" - இதன் பொருள் 'அங்கே போகும் அவர்கள் தாழ்ந்த சாதிக் குஞ்சனின் வைப்பாட்டிகள்' என்பதாகும்.

"தூ!" - சுமதி அம்மா அவன் மீது காறித் துப்பினாள். அவள் துப்பிய வேகத்தில் அந்தக் கோவிலின் கட்டடம் முழுவதும், கோவில் வளாகம் முழுவதும் அசைந்து அதிர்ந்து விட்டன என்று தேவ் குறிப்பிடுகின்றார். கோவிலுக்குள்ளே இருக்கும் சினம் மிகுந்த காளிதேவியைப் போலச் சுமதி அம்மா ஆகி, முன்னால் பாய்ந்து வந்து, அந்தக் காட்டிமிராண்டி மனிதனை நோக்கிக் கடுமொழிகளை வீசினாள்:

"கேடுகெட்ட நாயே! நீ சொன்னதை மறுபடியும் திருப்பிச் சொல்லு!"

அங்கே கூடியிருந்த கூட்டத்தின் ஒவ்வொருவரும் அப்படியே பின்வாங்கிக் கொண்டனர். அவள் மறுபடியும் சொன்னாள்:

"கேடுகெட்ட நாயே, சொல்லுவியா?"

சுமதி அம்மாவின் அந்தத் "தூ" ஒலியானது, கேரளாவின் பெண்மைக்குச்சார்பாக எழுந்த, மறுக்க முடியாத போர்க்குரல் என்றும், அது கேரள மக்களின் நினைவில் எப்போதும் ரீங்காரம் செய்து கொண்டே இருக்கும் என்றும், வரலாற்றாசிரியர் டாக்டர்.கே.எம்.தாரகன் கூறுகிறார். டாக்டர்.கே.எம்.தாரகன் மேலும் குறிப்பிடுகின்றார்: "ஒரு சிறிய ஆழமான கீறலினால், கேசவதேவ் அவளை, மிருகத்தனமான வில்லன் துச்சாதனனுக்கு எதிரில் நிற்கிறாளே காப்பிய நாயகி பாஞ்சாலி, அவளது அந்துஸ்துக்கு உயர்த்திவிடுகிறார்.

கேசவதேவ் மீது இன்னுமொரு தற்காலத்து விமர்சனம் உண்டு. அதாவது கலைகள் அனைத்தும் கட்டாயமாகவே, தனிமனித உணர்வுகளுக்கு அப்பாற்பட்டு பொதுப் படையானதாக இருக்க வேண்டும் என்ற தற்காலச் சிந்தனை ஓட்டத்தோடு கேசவதேவ் இசைந்து வருபவராக இல்லை என்பர். உண்மையாகச் சொல்லுவதென்றால், கேசவதேவ் ஷெல்லியைப் போன்ற கருத்தோட்டம் உடையவர். தனது குரல் 'தேர்ந் தெடுக்கப்படாத மக்கள் பிரதிநிதியின் குரல் என்பதைக் கேசவதேவ் மிக நன்றாகவே அறிவார். தான் ஒரு மக்கள் பிரதிநிதிதான் என்று இந்த உலகத்தை ஒப்புக் கொள்ள வைக்க வேண்டும் என்ற தீர்மானம் கொண்ட எழுத்தாளர் என்பதையும் அவர் அறிவார்.

இயல்பாகவே, சில நேரங்களில் கேசவதேவின் பாத்திரங்கள், அவருடைய சொந்த மொழியிலேயே பேசிவிடுகின்றன. விமர்சகர்கள் சிலர், கேசவதேவ் அவருடைய பாத்திரங்களைத் தனது சொந்தக் கருத்துக்களைப் பேசும் அக்காலத்துக் கருவிகளாக ஆக்கிவிட்டார் என்று குறை கூறுகின்றனர்.

இந்த நிகழ்ச்சியானது, நம் ஆசிரியர் கேசவதேவின் ஆழமான உணர்ச்சிநிலை பற்றி, இயற்கையாகவே நம்மைச் சிந்திக்க வைத்து விடுகிறது. எந்த வகையில் பார்த்தாலும் கேசவதேவ் தற்கால, நவீன வகை உணர்வு நிலை எழுத்தாளர்

இல்லை. பெற்றெடுத்த தாயார் இறந்த நாள் எது? நேற்றா? அல்லது நேற்றைக்கு முன்தினமா? என்று நினைவு படுத்திக் கொள்வது பற்றி அக்கறைப்படாமல் பரத்தையின் வீட்டுக்குப் போகக்கூடிய குணாம்சம் உடைய ஓர் இளைஞனை, காமஸுக்கு முந்திய, காஃப்காவுக்கு முந்திய காலத்து இலக்கியத்தில் வேண்டுமானால் பார்க்கலாம். ஆனால் கேசவதேவ் அப்படிப்பட்ட குணாம்சம் உடைய வகை மாதிரிகளைத் தெரிந்து கொண்டவருமல்ல; வாழ்க்கையில், அல்லது இலக்கியத்தில் அப்படித் தெரிந்து கொள்ள அக்கறைப் பட்டவருமல்ல. புதிதாய்ப் பல் முளைத்த நவீன காலத்துக் காரர்கள் வேண்டுமானால், கேசவதேவை, அவர் சுத்தமான, அப்பட்டமான மரபு சார்ந்தவர்தான் என்று சொல்லிக் கொண்டிருக்கலாம்; ஆனால் எல்லா நேரத்திலும் அப்படி இருக்கவில்லை. மொழியைக் கையாளுவதில் கதை சொல்லும் கலை மேதைமையை அவர் பெற்றிருந்தார். சூழ்நிலைக்கு ஏற்ற பாங்கில் அவரது மொழி நடையை மாற்றித் தழுவி அமைத்துக் கொள்ள அவரால் முடிந்தது. மலையாள மொழியைக் கையாளுவதில் மேதைமை மிகுந்த பேராசிரியர் எஸ்.குப்தன் நாயர், கேசவதேவின் மொழிநடை ஆளுமை குறித்து வியப்படைகிறார். 'சபதம்' என்னும் கதையில் வரும் தாழ்ந்த இனத்துப் பாத்திரங்கள் பேசும், எளிதில் பொருள் விளங்கிக் கொள்ள முடியாத பேச்சு வழக்கு மொழியை, அதன் முக்கியத்துவத்தோடும், முழுச்சக்தியோடும் கேசவதேவ் பாராட்டத் தக்கவகையில் பயன்படுத்தி எழுதியிருக்கிறாரே!' – என்று குப்தன் நாயர் வியப்படைகின்றார். இங்கும் அங்குமாக, கதைகளில் மட்டுமல்ல, அவர் படைத்த பெரும்பான்மையான நாடகங்களிலும், நாவல்களிலும், சாதாரண, எளிய, தாழ்ந்த நிலையில் உள்ள, ஜனங்களின் வாழ்க்கை நிலையைச் சித்திரிக்கும் போது, கேசவதேவ், எப்போதும் தவறாமல், அவர் என்ன விரும்புகிறாரோ, அதை அப்படியே மொழி நடையில் தந்துவிடுகிறார். கேசவதேவுக்கு ஒரே ஒரு மொழி நடைப்பாணிதான் தெரியும் என்று சொல்லப்படும் விமர்சனம் பொருந்தாத விமர்சனம்! ஒதுக்கித் தள்ளப்பட வேண்டிய விமர்சனம்!

கேசவதேவ் சில இடங்களில் மொழி நடையைப் பயன்படுத்தும் பாங்கில் தனது வாக்குவாதத் திறமையைச் சிறிது கூடுதலாகவே பயன்படுத்திக் கொள்கிறார்; சந்தேகமில்லை,

அவ்வாறுதான் செய்கிறார். அவர் நினைக்கிற, குறிப்பிட்ட சில விளைவுகளை எழுத்தில் கொண்டு வந்துவிடவேண்டும் என்று விரும்பும் போது, அவர், மொழியை அப்படித் தான் பயன்படுத்துகிறார். 'மில்ட்டன் பாணி' யில், வார்த்தை மீது வார்த்தையை அடுக்கிக் கொண்டு போவதும், ஒரே தொடரை, அதே பொருளில் திரும்பத் திரும்பப் பலதடவை பயன் படுத்துவதும் ஆகிய பாணியைக் கேசவதேவ் சில குறிப்பிட்ட இடங்களில் பயன்படுத்தியிருப்பதையும் நாம் காணலாம். 'சாக்கடையிலிருந்து' நாவலின் இறுதி அத்தியாயத்தில், பப்பு இருமும் காட்சியை இப்படித்தான் கேசவதேவ் அமைக்கிறார். நான்கு பக்கங்களில், 'பப்பு இருமினான், இருமினான், இருமினான்,' என்று இருபத்து நான்கு தடவைகள் கேசவதேவ் சொல்லிக் காட்டி எழுதுகிறார். இருந்த போதிலும், கேசவதேவின் அனைத்துப் படைப்புக்களிலும், இந்த ஒரு பகுதிதான் அவருடைய கலை மேதைமையைக் காட்டும் பகுதிகளில் சிறப்பு மிக்க பகுதி எனலாம். 'சாக்கடையிலிருந்து' நாவலில் அமைந்துள்ள மிக அற்புதமான அந்த இறுதிப் பகுதி வேறு யாராலும் படைத்துக் காட்ட முடியாத பகுதி; இதற்கு இணையாக, மலையாளப் படைப்பு உலகில், இதுவரை ஒரு பகுதி எழுதப்படவில்லை. இது மறுப்பே இல்லாத ஒரு பெரிய உண்மை.

கேசவதேவ், சில இடங்களில், தன்னை, ஓர் அக்கறை இல்லாத, சிரத்தை இல்லாத எழுத்தாளராகவும் வெளிப்படுத்திக் கொண்டுமிருக்கிறார். இது ஏற்கனவே ஒப்புக் கொள்ளப்பட்ட செய்தியே. ஒரு வருடத்திற்கு எட்டுவரிகள் எழுதி, "எனக்குத் தரம் மட்டுமே முக்கியம்" என்று சொல்லிக் கொண்டிருக்க, கேசவதேவ் அப்படி ஒன்றும் 'தாமஸ் கிரே' அல்லவே! உலகத்திற்கு நான் 'கனகக் கவிதை மட்டுமே தரப் போகிறேன்' என்று கேசவதேவ் ஒரு போதும் நடித்தது இல்லை! மகாத்மாஜியின் ஆலோசகர் எனக் கருதப்பட்ட ஜான் ரஸ்கின், "நவீன காலத்துக் கவிஞன் ஒருவனது கடமை தன்னைச் சுற்றியுள்ள ஆண்-பெண்-குழந்தைகள் ஆகியோரது முன்னேற்றத்தை நோக்கமாகக் கொண்டு, யதார்த்தத்தைத் தவறுதல் இல்லாமல் பிரதி செய்து எழுத்தாக்குவது தான்" - என்று கருதினாரே, அக்கருத்தைக் கேசவதேவ் அறிவார்; இதற்காக அவர் மனப்பூர்வமாக உழைத்தார். கேசவதேவ் சிற்சில குறைபாடுகள் உடையவராக

இருக்கலாம்; ஆனால், உலகத்தின் மிகப்பெரிய கலைஞர் சிலருள் கேசவதேவும் ஒருவர் என்பதை, அவர்மீது சிறிதும் அனுதாபம் இல்லாத விமர்சகர்களும் கூட மறுக்க முடியாது.

இந்தப் பிரபஞ்சத்தின்
மிகப் பெரிய வேதனையை
உணர்வார் யார்?
ஏழை எளிய மக்களுக்காக
இந்த மானுடத்திற்காகத்
தங்களையே ஒப்புக் கொடுத்து
உழைப்பவர்கள் யாரோ
அவர்களே உணர்வார்கள்!

# கேசவதேவின் படைப்புக்கள்

## நாவல்கள்

*யாருக்காக?*
*அதிகாரம்*
*முதல்கதை*
*பக்கத்துவீட்டுக்காரர்கள்*
*பைத்தியவீடு*
*சின்னத்தெரு*
*எங்கே?*
*நான் வாழவேண்டும்*
*கண்ணாடி*
*குஞ்சு குறுப்பினுடைய ஆத்மகதை*
*லட்சம் ரூபாயும் ஒரு காரும்*
*மரணத்திலிருந்து*
*தாய்உள்ளம்*
*நடிகை*
*நொண்டியின் கதை*
*ஒரு ராத்திரி*
*ஒரு சுந்தரியின் கதை*
*பங்கலாட்சியின் குறிப்பேடு*
*காதல் வழி*
*இரண்டு அம்மாவும் ஒரு மகனும்*
*ரௌடி*
*கட்சியின் முக்கியத் தோழர்*
*அனுபவிப்பதற்காக*
*கனவு*
*தன்னைத்தான் அழித்தல்*
*உலக்கை*
*விற்பனையாளன்*

## சிறுகதைத் தொகுதிகள்

*ஆனந்தமான ஆடிமாதம்*
*அன்றைய கதை*
*எதிர்கால மாப்பிள்ளை*
*தீனம்மா*
*வாழ்க்கைச் சக்கரம்*
*கொல்லாதே, சகோதரனே கொல்லாதே!*
*துப்புரவுத் தொழிலாளி*
*மறைவில்*
*பெட்டிக்கடையும் சொர்க்க ராஜ்ஜியமும்*
*முதலைப்பாரு*
*பங்கலாட்சியின் காதுகள்*
*பெருவெள்ளம்*
*காதலிக்க நேரமில்லை*
*இரண்டுபேரும் ஓடிப்போதல்*
*சிவப்புத் தொண்டர்*
*சொர்க்கத்தில் ஒரு சாத்தான்*
*யமுனை சீராய்ப் பாய்கிறது*
*கேசவதேவின் தேர்ந்தெடுக்கப்பட்ட*
*சிறுகதைகள் - தொகுதி 1& 2*

## நாடகங்கள்

*சாத்தானுக்கும் கடலுக்கும் இடையில்*
*சீனவழி*
*இரண்டு மாடிவீடு கட்டுவதற்கு*
*மந்திரக்கோல்*
*முன்னேற்றப் பாதையில்*
*நனிப்பாக்க உற்சவம்*
*நாடகத்தின் கரு*
*ஒருமுடி தேங்காய்*
*பிரதம மந்திரி*
*மூதாதையர் வீடு*
*கொள்ளைக் கூட்டம்*

## ஓரங்க நாடகங்கள் – தொகுப்பு

*கொல்லனும் கொல்லத்தியும் ஒண்ணு*
*மழை அங்கே, குடை இங்கே*
*நீ இறந்து போனாய்*
*ஓண ரவிக்கை*
*தென்னை மட்டை அடிப்பவர்*
*புரட்சிக்கவி*
*காதல் பிச்சை*

## கட்டுரைகள்

*நெருப்பும் பொறியும்*
*சித்திர கூடம்*
*எனக்குத் தோன்றியது*
*என்னுடைய சொந்தக்காரர்கள்*
*வாழ்க்கைப் பரப்பு*
*காதலனின் கடிதம்*
*ரஷ்யாவின் காதலன்*

## நினைவலைகள்

*எதிர்ப்பு*
*கேசவதேவ் – கால்நூற்றாண்டு முன்பு*
*நினைவுலகத்தில்*
*திரும்பிப்பார்*

# பயன்பட்ட நூல்கள்

இதுவரை கேசவதேவ் பற்றி வாழ்க்கை வரலாற்று நூலோ, திறனாய்வு நூலோ வெளிவரவில்லை. இந்த நூலுக்காகப் பயன்பட்ட இலக்கிய வரலாற்று நூல்களும் பிறவும் பின்வருமாறு:


1. கேரளத்தின் கதை
   என். கிருஷ்ண பிள்ளை

2. மலையாள நாவல் இலக்கிய வரலாறு
   டாக்டர் கே.எம். தாரகன்

3. மலையாள இலக்கிய வரலாறு
   கிருஷ்ணசைதன்யா

4. உரைநடை இலக்கிய வரலாறு
   டி.எம். சும்மார்

5. மலையாள இலக்கிய வரலாறு
   பி.கே.பரமேஸ்வரன் நாயர்

6. 'பாஷா போஷிணி' - கேசவதேவ் பற்றிய கருத்தரங்கு
   ஏப்ரல் - மே, 1984

7. மலையாள இலக்கிய மதிப்பீட்டு ஆய்வு-மலையாள நாவல் வளர்ச்சி பற்றிய கருத்தரங்கு
   ஏப்ரல் -ஜுன், 1983

# கேசவதேவ் வாழ்க்கையின் முக்கியமான நிகழ்ச்சிகள்

| | | |
|---|---|---|
| 20.7.1904 | – | பிறப்பு-கேட்டமங்கலம் என்னும் இடத்தில் |
| ஜூன், 1910 | – | பள்ளிக்கல்வி தொடக்கம் |
| அக்டோபர்-1917 | – | பள்ளியிலிருந்து விலகுதல் |
| 1919 | – | 'பில் கலெக்டர்' பணி ஏற்றல் |
| 1924 | – | வைக்கம் சத்தியாக்கிரக நிகழ்ச்சிகளைப் பார்த்தல் |
| 1924 | – | ஆரிய சமாஜத்தில் சேருதல் |
| 1926 | – | 'சகோதரன்' இதழில் முதலாவது படைப்பு வெளியாதல் |
| 1926 | – | 'மகிழமந்திரம்' இதழில் முதலாவது கதை வெளியாதல் |
| 1928 | – | 'பஜே பாரதம்' பத்திரிகையின் ஆசிரியர் ஆகுதல் |
| ஏப்ரல் 1929 | – | 'பஜேபாரதம்' ஆசிரியர் பொறுப்பிலிருந்து விலகுதல் |
| நவம்பர்-1929 | – | 'பிரதிதினம்' நாள் இதழ் ஆசிரியர் பொறுப்பேற்றல் |
| ஏப்ரல், 1930 | – | காதலனின் கடிதம் – முதல் நூல் வெளியாதல் |
| ஜூலை,1930 | – | ஆலப்புழையில் நிகழ்ந்த உழைப்பாளர் மாநாட்டில் உரை – உழைப்பாளர் சங்கத்தின் செயலராகத் தேர்ந்தெடுக்கப்படுதல் |
| ஆகஸ்டு, 1931 | – | 'மகாத்மா' தினசரி இதழில் ஆசிரியர் ஆகுதல் |
| 1935 | – | கோமதியைத் திருமணம் செய்தல் |

1935 – புத்துப்பள்ளி காயங்குளத்தில் வசித்தல்
1941 – 'சாக்கடையிலிருந்து' எழுதுதல்
1942 – 'சாக்கடையிலிருந்து' வெளியாதல்
1949 – 'பைத்திய வீடு' நாவல் வெளியாதல்
1950 – பொதுவுடைமைக் கட்சியிலிருந்து விலகுதல்–
'யாருக்காக' நாவல் வெளியாதல்
1955 – சீதாலெட்சுமியை திருமணம் செய்தல்
1963 – 'பக்கத்துவீட்டுக்காரர்கள்' நாவல் வெளியாதல்
1964 – இலக்கியத்துக்கான தேசிய விருது பெறுதல்
1966 – எழுத்தாளர் கூட்டுறவு சங்கத்தின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படுதல்
நவம்பர்,1970 – சோவியத்து நாட்டின் 'நேரு விருது' பெறுதல்
1974 – கேரள சாகித்திய அகாடமியின் தலைவர் ஆதல்
1.7.1983 – மறைவு.

**கேசவதேவ்** (1904–1983), முதன்மையாக ஒரு சமத்துவ வாதியும் யதார்த்தவாதியும் ஆவார். ஆனாலும் அவர் நாவலாசிரியராக, சிறுகதையாளராக, திறனாய்வாளராக, சமுதாய சீர்திருத்தவாதியாக இருந்தார். தன்னைச் சமுதாயத்து அடித்தட்டு மக்களோடு அடையாளப் படுத்திக்கொண்ட கேசவதேவ், புரட்சிகரமான கருத்துக்களை உடையவர். நலிவுற்ற மக்களின் வாழ்க்கைப் போராட்டத்தைக் கிளர்ச்சியூட்டும் வகையில் தனது படைப்புக்களில் அவர் சித்திரித்தார். அவரது சில நாவல்கள் சமுதாய உரிமை பற்றிய சிறு ஆய்வுகள் போலவே அமைந்தன. தற்கால மானுடத்தின் நிலைப்பாடுகள் பற்றி அவர் கொண்டிருந்த விழிப்புணர்ச்சியும், சமுதாய மாற்றத்தின் தேவைபற்றிய அவரது ஆழ்ந்த உணர்வாற்றலும் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவை. சாகித்திய அக்காதெமியின் விருதுபெற்ற அவரது 'பக்கத்து வீட்டுக்காரர்கள்' என்னும் நாவல் சிறந்த சமுதாயப் பகுப்பாய்வைத் தருவதாக அமைகிறது; பல குறிப்பிடத்தக்க பாத்திரங்களின் சித்திரிப்பாகவும் அமைகிறது. கேசவதேவ் சிலகாலம், கேரள மாநில சாகித்திய அக்காதெமியின் தலைவராகவும் இருந்தார்.

அரசு கல்லூரியில் ஆங்கிலப் பேராசிரியராகப் பணியாற்றும் பேராசிரியர் **கே.பி. சசிதரன்** மலையாளத்தில் சிறந்த எழுத்தாளர்; திறனாய்வாளர். இந்த நூலில், கேசவதேவின் வாழ்க்கையை மிக விரிவாக விளக்குகிறார்; மலையாளம் அல்லாத பிற மொழி வாசகர்களின் அனுகூலம் கருதிக் கேசவதேவின் படைப்புக்கள் பற்றி மதிப்பீடு செய்து தருகிறார்.

இந்த நூலைத் தமிழாக்கம் செய்துள்ளவர் **முனைவர் மு. பழனி இராகுலதாசன்** (பி.1944) தேவகோட்டை ஸ்ரீசேவுகன்–அண்ணாமலை கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவர்; மொழி பெயர்ப்புப் பணியில் மிகுந்த ஈடுபாடு உடைய் இவர், சிறுகதைப் படைப்பாளரும், திறனாய்வாளரும் ஆவார்.

Kesavadev (Tamil) Rs.25/-
ISBN -81-260-0637-4